அன்பு மலர் ௭

# தியான மாலை

## GARLAND OF MEDITATIONS



சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றியது



அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

*N. M. Valliappan*

அன்பு மலர் ௫

# தியானமாலை

## (GARLAND OF MEDITATIONS)




**சுவாமி சுத்தானந்த பாரதியார்**

இயற்றியது






**அன்பு நிலயம்**

இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

உரிமை பதிப்புற்றது]    **1938**    [விலை { ருபா. 1 / cts. 75

# பதிப்புரை

எமது நிலயத்தின் பத்தாவது அன்பு மலரை அருட் சோதி இறைவன் மலரடியில் வைத்து வணங்குகிறோம். இந்நூல் சுவாமி சுத்தானந்த பாரதியாரவர்களின் தினசரி தியானங்களில் பூத்த ஞான மலர்களின் மாலை. ஆதலால் இதற்குத் தியானமாலை யென பெயரீந்தோம். இவை அடிகளின் நாட் குறிப்புக்களினின்றும் தொகுக்கப்பெற்றன. இவற்றினின்று அடிகளின் உயர்ந்த தியானமும் திருவடிப் பற்றும், தூய வாழ்க்கையும் விளங்கும்.

இந்நூலை ஆர்வமுடன் வெளியிட முன்வந்து பொருளுதவிய அன்புத் திருவாளர் கோட்டையூர் பெ. ராம. அ. அண்ணாமலைச் செட்டியாரவர்கட்கு எமது நன்றி உரித்தாகுக. இப்பெரியார் சிவனை மறவாச் சிந்தையும், தமிழை மறவா வாழ்க்கையும் கொண்ட நல்லார்.

இந்நூலின் அச்சுத்தாட்களை தாமே பொறுப்பேற்றுப் பார்த்துதவிய வித்வான் ஸ்ரீ கனகராஜய்யரவர்கட்கு எமது நன்றியுள்ள வணக்கத்தைச் செலுத்துகிறோம், இந்நூலைக் கருத்துடன் அச்சிட்டுதவிய ஜனமித்திரன் ஆசிரியரவர்கட்கு எமது நன்றி.

இந்நூலை அடிகளின் தாயார் திருவுருவம் அழகு செய்கிறது. அடிகளின் தாயார் தெய்வ பக்தியிலும், தவ விரதங்களிலும், ஜப சாதனங்களிலும் மிக்கார். இல்லற ஞானியான அன்னாருக்கு இந்நூலை அர்ப்பணிக்கிறோம். திருவருளாலும், அன்பர் துணையாலும் எமது தமிழ் விரதம் நிறைவேறி, எமது வாழ்வெல்லாம் அருட்பணிக்கே வேள்வியாகுக !

ஓம் சுத்த சக்தி.

டிசம்பர் 21௳ 1938
இராமச்சந்திரபுரம்.

அன்பு நிலயத்தார்.

## பொருளடக்கம்

# பிழை திருத்தம்

## ஹம்ஸ கீதம்

| செய்யுள் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 1 | தேனிதமிழ்த் | தேனிதழ்த் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 59 | 18 | தரசு | தரசு; |
| ,, | 21 | உலகிற் | உலகிற்கும் |
| ,, | ,, | கிறைவ | இறைவ |
| 94 | 7 | கற்றுணே | கற்றாணே |
| 109 | 21 | நாராணன் | நாரணன் |
| 131 | 9 | இல்லேல் | இல்லேயேல் |
| 132 | 21 | தான் | தாம் |
| 138 | 13 | நம்மைப் | தம்மைப் |
| 145 | 14 | குடியரை | குடியரசை |
| 173 (பாட்டு 7) | 6 | கருதி | சுருதி |

தர்பார் படம்.

இல்லற ஞானி, காமாக்ஷி அம்மையார்



தேசுற்ற தவத் திருவாளர் குலம்
மாசற்று வளர்ந்த மகா விரதை,
பேசற் கினியாள், பிறருக் கினிதே
நேசித் திடு நன் னினைவிற் பெரியாள்.

—சுத்தானந்த பாரதி

## ஹம்ஸ கீதம்

---

1

†முச்சுடர் வீசிடும் வானத்திலே—குழல்
ஓமென் றொலித்திடு மோனத்திலே—
§பொற் சுடர் விண்ணகப் பொய்கையிலே—வெள்ளிப்
‡பூவொன் றொளிருது ஞானப்பெண்ணே!

[†ஸூர்ய ஸோமாக்னிகள். §பொன்னம்பலம். ‡ஸஹஸ்ராரபத்மம்.]

2

ஆயிரந் தேனிதழ்த் தாமரையாம்—அதில்
அன்னந் தவழுது மின்னலைப்போல்
தூய சித்ரூபமாம் ஓதிமத் துள்ளே யுன்
சொரூபம் பாரடி ஞானப்பெண்ணே!

3

தூலத்துக் குள்ளொரு சூட்சுமமாம்—அந்த
சூட்சுமந் தாண்டியோர் காரணமாம்
மேலுள்ள காரண தேசத்திலே—வெள்ளி
விண்மலை காணடி ஞானப்பெண்ணே!

4

அந்தத் துரிய மலையினிலே—சக்தி
யமுத வூற்றி லறிவன்னம்—
பந்தம் விலகி யதுவானூர்—சுத்த
பரம ஹம்ஸராம் ஞானப்பெண்ணே!

5

பற்றறப் பாரி லுலாவிடுவோர்—அவர்
படகுபோல மிதந்திடுவோர்—
முற்றிலு முள்ளத் தமர்ந்திடுவோர்—ஜீவன்
முத்தரேன் றேயறி ஞானப்பெண்ணே!

6

முக்குண நாடகங் கண்டிடுவோர்—சற்றும்
மும்மலச் சேற்றை யகன்றிடுவோர்
சிக்கொன்றுமில்லாத சித்தரவர்—ஹம்ஸ
தேவரேன் றேத்தடி ஞானப்பெண்ணே!

7

யானேன் றகஞ்செய் மனமிறந்தார்—பர
மானந்த சக்திக் கதிர் விரிந்தார்.
மோனத்தி னின்றுஞ் செயல் புரிந்தார்—ஜீவன்
முத்த ரியல்பிது ஞானப்பெண்ணே!

8

தெய்வம் விளங்குந் திருக்கோயில்—அவர்
செம்மலர் வாய்மொழி நன்மறையாம்.
உய்வருள் ஞான வொளிதருவார்—தத்ஸத்
தோமெனச் சிந்தை செய் ஞானப்பெண்ணே!

சுத்தானந்த பாரதி.

---



"நினைத்து, நினைத்து நினைப்பற்று நெஞ்சே
நினைப்பற்றி நீயாகி நில்"

உ

# தியானமாலை



## க. ஆர்வக் கனல்

### 1. மலர்ச்சி

பரமனே, மாசற்ற மந்தமாருதக் குழலூதி யெழுப்புகிறாய்! இன்னும் உறங்குவேனோ? இதோ எழுந்தேன். அமைதியின் அழகில் இயற்கை உன்னைத் தியானிக்கிறது. நானும் உள்ளத்தில் உன்னைத் தியானிக்கிறேன். விண் மீன்கள் தம்மை முற்றும் உன்னெழிலில் ஆழ்த்தி மறைகின்றன. 'எனது-யான்' என்னும் எண்ணங்களையெல்லாம் உன்னருளில் ஆழ்த்தி யானும் உன்னுடன் கலக்கிறேன்! காலையின் உள்ளம் புள்ளிசையாகப் பொங்குகிறது. எனது மனக்கிளியும், 'காதலா, காதலா' என்று உன்னைக் கூவுகிறது. உனது புன்னகைதான் இந்த நாண்மலர் வனப்பாகப் பூக்கின்றது! தமது குறுகிய வாழ்வைப் பெருகிய மகிழ்வுடன் தாங்கி, உனது பெயரை, 'ஓம் 'ஓம்' என்று ரீங்கரிக்கும் வண்டுகளுக்குத் தேன்விருந்தளித்து, தம்மைக் கொஞ்சி விளையாடும் தென்றலுக்கு மணவிருந்தளித்து, தம்மையே உலகவடிவான உனக்களித்து, மண்ணிலெழுந்து மண்ணிலடங்கும் இப்பூக்களைப்போல என் வாழ்வும் உள்ளமட்டும் புன்னகைபுரிக! ஈதலின் இன்புறுக! உன் அருண்மணத்தைப் பரப்புக! உன்னின் றெழுந்த வாழ்வு, உன்னுலகிற்குதவி, உன்னிற் கலந்து நீயாகுக!

## 2. உன்னையே பாடும் உள்ளம்

பரமனே, கட்டுக்கடங்காக் கடலின் முழக்கம் என் குழலிற் பாய்ந்து உன் புகழை உரக்கப் பாடுகிறது. இந்த வாழ்வுப் படகு இன்பதுன்பப் புயலலைகளால் எற்றுண்ட போதிலும், இந்த உயிர்ப்புரவி காட்டிலும் மேட்டிலும் தாவிக்குதித்து ஒரு குறிப்பில்லாமல் மனக்கடிவாளத்தை அறுத்துக்கொண்டு ஓடியபோதிலும், என் உள்ளம் கலங்காது உன்னையே பாடுகிறது. ஏனெனில், இந்த வாழ்வு எங்கே எப்படித்தாவினும், அதை நடத்தும் தலைவன் நீயென்று அறிந்துகொண்டேன். வாழ்வு ஓடுகிறது; உடல் காலத்தின் கைப்பாவையாக ஆடுகிறது; மனம் ஐம்புலக் காட்டுக் குதிரைகள் இழுத்துச்சென்றபடி அலைகிறது. தலைவனே, என்னுள் ஏதோ ஒன்று உன்னையே பாடுகிறது; உன்னையே நாடுகிறது; உன்னையே பற்றி நிற்கிறது. என்னுள் நீ அருட்கடலாக விரிந்துள்ளாய். அலைகள் எப்படி அலைந்தாலும், 'ஆழ்கடலே நான், அதுவே நீ' என்றறிந்து கொண்டேன். முத்தும் மணித்திரளும் குவிந்த ஆழமான மோனத்தினின்று என் பாட்டலைகள் எழுந்து உன்னைப் போற்றி செய்து கூத்தாடுகின்றன!

## 3. கதிர் நகை

அழகனே, அதோ பவழவாய் திறந்து கதிர்நகை புரிகிறாய். ஒரு புன்னகை மணியால் உலகைத் தங்கமாக்குகிறாய். உன்னைப் பாடும் இந்த அருவித்திரளைப் பொற்கரத்தால் அணைந்து பொன்னாக்குகிறாய். மீனணி மினுக்கும் இரவை ஒரு பார்வையில் விழுங்கும் சுடரே, மனமாயத்தை விழுங்கி, என் உள்ளும் புறமும் நீயாக விளங்கியருள். அறிவையெல்லாம் இரவியாகக் காட்டுகிறாய். எல்லையற்ற இடத்தில்

காலத்தேரை ஓட்டுகிறாய். கதிர்மணிக்கரங்களால் பொன்னும் பசுமையுங் குலுங்க உலகை அழகுசெய்யும் சிற்பியாய் விளங்குகிறாய். உலகாகிய இராட்டினஞ் சுழல்கின்றது; உனது கதிர்முனையில் வாழ்வு நடக்கின்றது. கதிரால் கடலாவி யிழுத்து மேகங்களை நெய்கிறாய்; மழைபொழிந்து உலகம் செழிக்கிறது; உன் சந்நிதியால் மொட்டுகள் கட்டவிழ் கின்றன; கண்மலர்கள் விழித்தெழுந்து உயிர்கள் தொழில் புரிகின்றன. ஒளியும் சூடும் பரப்பி உலகுயிர்களைக் காக்கும் கதிரவனே, உன்னால் கோடித்தொழில்கள் நடக்கின்றன. அனைத்திற்கும் நீ பற்றற்ற சாட்சியாக விளங்குகிறாய். மௌனவேதச் சுடரே, சுதந்திரத் தொழிலாளியே, உன்னை தியானிக்கின்றேன்!

## 4. இசை வெள்ளம்

இந்த ஜீவ-முரளியை உன் கையில் ஈந்ததுமுதல் உனது பொன்றூ வுயிர்ப்பே அதன் இசைவெள்ளமானது. எனது உட்குவிந்த உள்ளத்திற் பொங்கும் நாதவூற்று உலகெங்கும் பரந்த உனது இசைக்கடலுடன் கலந்து ஆர்கலிக்கின்றது. இன்பனே, எல்லையற்ற நீலவானில் உனது மெல்லிய குரலே ஆகாயமாக நிறைந்துள்ளது. எண்ணுக்கடங்காத பெயர் வடிவ பேதங்களிலெல்லாம் உயிர்ப்பது உன் காற்றிசையே. மலையின் உள்ளத்தினின்று பொங்கிப் பொசிந்து பயிர்களை வளர்ப்பது உனது இசையருவி யன்றோ? இரவி பரப்புவது உன் இசைக்கதிர்களே. உன் இசை நிலாவினால், எல்லையற்ற முந்நீர் கர்ஜித்தெழுந்து முத்துக்கைகள் கொட்டிக் கூத்தாடுகின்றது. விண் மீன்களெல்லாம் உனது இசை மணிகளே. உனது இசையே சிறகு விரித்துப் புட்களாகப் பறக்கிறது. ஓங்காரனே, என் யாக்கை உன் வீணையாகுக;

எனது நரம்புகள் அதன் தந்திகள்; என் இதயத்துடிப்பு தாளம்; உன் அன்பூற்றிற் பொங்கி, உனது அருள் வெள்ள மாகப் பாய்ந்து, உலகில் உனது இச்சைப்பயிரை வளர்த்து, என் வாழ்வின் பாட்டு உனது பேரின்பக்கடலிற் கலந்து கொண்டே யிருக்கட்டும்.

## 5. இவ்வுடலில்

தூயனே, இவ்வுடலில் நீ குடியிருக்கிறாய் என்றறிந் தேன்; இது உன் மாசற்ற கோயிலாகுக. இறைவனே இவ் வுயிர் உன்னிச்சையால் உயிர்க்கிறதென் றறிவேன்; இது உனது அன்புவிளக்காகுக. ஐயனே, இம்மனம் உனது புரவி என்றறிவேன்; இது பகை, அச்சம், சிறுமை, பொறா மை, ஆசையாணவக் காட்டில் அலையாது, நீ நடத்தும் நேர் வழியில் அடங்கிச் செல்லுக. எனது நரம்புகளில் நீ உணர் வாயிருக்கிறாய். அவை உனது மங்கல வீணைத் தந்திகளா குக. எனது இதயம் உனது அரியணை; அதில் நீ என்றும் வீற்றிருந்து என்னை ஆண்டருள். அரசே, எனது மூலா தாரத்தில் உனது சக்தி விழித்தெழுக. எனது சுவாதிட்டா னத்தில் வீறு பெருகுக. எனது மணிபூரகத்தில் அமைதி பரவுக. எனது அனுஹதத்தில் உனது சாந்தமும் பரிசுத்த மும் நிறைக. எனது சிதாகாசம் உனது சிற்சபையாகுக. எனது மதிமண்டலத்தில் உனது இன்பத்தேன் பொழிக. யோகியே, எனது ஸஹஸ்ராரத்தில் சுத்தசக்தியாக வீற்றி ருந்து எல்லாம் நீயாகி, உண்மையறிவின்பத்தில் அமுதநிலை பெற்று வாழவருள்!

## 6. உன்னையே தேடுகிறேன்

உன்னுடன் கூடி விளையாடவே இந்த எல்லையற்ற வாழ்வுத் தோட்டத்திற்கு வந்தேன். நீயே யழைத்து

வந்தாய். காதலா, எங்கு மறைந்தாய்? குயில்களுடன், 'கண்ணு, கண்ணு' என்று கூவுகிறேன்! இந்த அந்திப்புட்களுடன், 'சிவ சிவ' என்று உன்னைப் பாடுகிறேன். தென்றல் யாழில், 'ஓம் ஓம்' என்று உனது உட்பொருளையே மீட்டுகிறேன்! 'ஹரி, ஹர' என்று அந்த அருவியில் உன்னை முறையிடுகிறேன். அந்தக் கோயிலில் வழிபடும் ஆயிரக்கணக்கான அன்பர் உள்ளத்தெல்லாம் உன்னையே தேடுகிறேன். இந்த மசூதியினின்று உன்னை, 'அல்லா' என்று கூவுகிறேன். மாதாகோயில் நண்பருடன், 'அப்பனே அருள்செய்' என்று உன்னை வேண்டுகிறேன். அத் தபோவனத்தில் உட்குவிந்திருக்கும் தூயர் மனத்தில், 'ஓம் தத் ஸத், ஓம் தத் ஸத்' என்று உன்னையே நாடுகிறேன். ஆ, அந்தக் கதிரவனுடன் கனிமுகங்காட்டிக் கடலிற் குதித்து மறைந்தது நீயா? மாயாவீ, வானில் நட்சத்திரத் தோகை விரித்தாடும் மயில்மேலிருந்து மதிநகை புரியும் குமரன் நீதானே? காதலா, புட்கள் கூடடைந்து கண்ணுறங்கின; இந்த அன்புக்கனிகளை உனக்காக வைத்துக் காத்திருக்கிறேன்.

## 7. வாராயோ?

விண்ணெல்லாம் நினது காதற் கடிதமே; மீன்களெல்லாம் நின் பொன்னெழுத்துக்களே; மின்னெழுத்தாணியால் கையெழுத்திட்டுக் கடிதங்கள் அனுப்புகிறாய்; நட்சத்திரக் குளத்தில் தவழும் மதியன்னத்தைத் தூதனுப்புகிறாய்! முல்லையை முத்தமிட்டு வரும் இத்தென்றலில் ஏறிவருவாயென்று எதிர்பார்த்தேன். காதலா, எல்லையற்ற இந்த உலக வீட்டில், உனக்காகவே காத்திருக்கிறேன். இந்த இரவின் மௌனத்தில் உனது பேச்சைக் கேட்கவே தனித்திருக்கிறேன். உலகமெல்லாம் உறங்குகிறது; உனக்காக விழித்த

ருக்கிறேன்; மனக்கதவை உனக்காகவே திறந்து வைத்தி ருக்கிறேன். காதலா, கடிதமும் தூதும் செய்திகளும் வேண்டேன்; என்னவா, என்னுயிரே, உன்னையே வேண்டு கிறேன். என்னுள்ளம் உன் பாசத்தால் துடிக்கிறது; என் சித்தம் நின்னழகையே நினைத்து ஏங்குகிறது; என் அன்பு நின்னையே எங்கும் நாடுகிறது. உடல்களில் நீயே உயிர். கோயில்களில் நீயே கடவுள். கண்ணிற்கு ஒளியே, உயிரு க்கு உயிர்ப்பே, என் அன்பின் கனலே! நின்னையே வேண்டித் தனித்திருக்கிறேன். வாராயோ? காதலாகிக் கண்ணீர் கசிந் தழைத்தால் வாராயோ?

## 8. யார் என்னுள்?

உன்னை எங்கே தேடுவேன்? உன்னை எப்படி யழைப் பேன்? கோடிக்கோடிக் கணக்கான பெயர் வடிவங்களில் மறைந்து நிற்கும் ஒருவனே, இந்த எல்லையற்ற இடத்தில் இச் சிறிய காலத்தேரைக் கொண்டு உன்னை எங்கே தேடு வேன்? விண்ணின் வைரமணிப் பந்தலில் ஒரு அன்னம் உலாவுகிறது. அதைக் கேட்டால், "நானும் இந்த இரவின் மௌன ரகசியத்தில் அவனைத் தேடுகிறேன்" என்கிறது. கோயில்களில் உன்னைத்தேடினேன். அங்குப் பூசாரியின் மணிச்சத்தங் கேட்டேன்; உன் சத்தங் கேட்டிலேன். மன்னர் மாளிகையில் உன்னைத் தேடினேன். ஆடம்பரங் களைக் கண்டேன்; உன் அழகைக் காணிலேன். சாதி சமயங் களில் உன்னைத் தேடினேன். அந்தோ, எத்தனை ஏடுகளைப் புரட்டிப் புரட்டி நாட்களை வீணாக்கி மூளை கலங்கினேன்! எத்தனை சாத்திர கோத்திர விதிகள் உன்னைக் கட்டிப் பிடிக்கத் துள்ளுகின்றன! ஒன்றிலும் அகப்படாது எங்கே ஒளிந்திருக்கிறாய்? இனி, வெளியே தேடும் முயற்சிகள்

சலித்தன. கண்ணை மூடுகிறேன். 'யார் என்னுள்?' என்று கேட்கிறேன். 'நான்' என்று பதில் வருகிறது. நீதானோ என்னுட் பேசுகின்றாய்?

## 9. "நான்?"

உன்னைக் கண்டுபிடித்தேன்! கண் மூடினால், 'நான், நான்' என்று இதயத்தில் நடமாடுகிறாய். கண் விழித்தால் உலகெல்லாம், 'நான், நான்' என்று எண்ணற்ற உடல்கொண் டுலாவுகிறாய். இனித் தேட்டமொழிந்தது. யார் தேடுவது? யாரைத் தேடுவது? இருப்பது நீயே. பலவேடம் போட்டு ஆடும் உலகக் கூத்தனே, இந்த மானிடம் பூண்டு நீயே உயிர்க்கிறாய். "உடல் என்னது; நான் உடலல்ல. மனம் என்னது; நான் மனமல்ல. மூளை என்னது; நான் மூளை யல்ல. உலகம் என்னது; நான் உலகமல்ல. இந்த மனை என்னது; நான் மனையல்ல. அரசு என்னது; நான் அரசல்ல, நான் அரசன். கதிர் என்னது; நான் கதிரல்ல, நான் கதிரவன். நான் நானே! காண்பது, உணர்வதெல் லாம் எனது உடைமைகளே யொழிய, நான் அல்ல" என் கிறாய். அறிந்தேன் உண்மை. உன்னை 'நான்' என்றே அழைக்கிறேன். இந்த உள்ளத்தில் துடிப்பது நான். நாவிற் சுவைப்பது நான். மனத்தில் நினைப்பது நான். கண்ணிற் காண்பது நான். கண்ணாற் காணும் எண்ணற்ற உயிரினங்களும், இயற்கைப் பொருள்களும் நான். என்னுள் நானுயிருக்கும் சுத்தனே, அன்னியமாயத்தை ஒழித்து உன் னுடன் நீயாயிருக்கவருள்!

## 10. யாரவன்?

யாரோ என்னுள் சஞ்சலப்பட்டு வருந்திக்கொண்டே யிருக்கிறான். பெரிய மாளிகைச் செல்வம் எனக்குள்ளது.

பொன்னும் பொருளும் ஏராளமாயுள்ளன. பட்டும், சரிகை யும் அணிகிறேன். தங்கமும் வைரமும் என் மேனியிற் குலுங்குகின்றன. இலட்டு பாயசத்துடன் விருந்துண்கி றேன். பூமெத்தையிற் படுக்கிறேன். எனக்குப் பலர் கை கட்டிச் சேவகஞ் செய்கின்றனர். பாவலரும் நாவலரும் என்னைப் புகழ்ந்து பரிசில் பெற்றுச் செல்லுகின்றனர். யாழும், குழலும், விறலியர் ஆட்டமும், பெண்டிர் தோளும் என் புலன்களுக்கு இன்பமளிக்கின்றன. இந்த சுகபோகங் களையெல்லாம் என்னுள் ஒரு கண்ணீர் வெள்ளம் அடித்துக் கொண்டு போகிறதே! உலகில் எத்தனை இன்பங்கள் உண் டோ அத்தனையும் அனுபவித்துப் பார்த்தேன். ஒவ்வொரு இன்பமலரைப் பறிக்குந்தோறும் சுருக்கென்று ஒரு முள் குத்துகிறதே. போகமலரில் ஒரு சொட்டுத் தேன் உண் டேன். ஆ, நறுக்கென்று ஒரு வண்டு கொட்டிவிட்டது! 'இன்பம் இன்பம்' என்று என் புலன்கள் என்னை யிழுத்துச் செல்லும்போதெல்லாம், 'துன்பம், துன்பம்' என்று யாரோ என்னுள் ஒருவன் அழுதுகொண்டே யிருக்கிறான்! யாரவன்?

## 11. மனச்சாட்சி

'யாருக்குந் தெரியாது' என்று நான் செய்வதையெல் லாம் உள்ளேயிருந்து ஒருவன் கணக்காகக் குறித்துவைத்து, "ஏனிதைச் செய்தாய்? ஏன் அதைச் செய்தாய்?" என்று சூடுகொடுக்கிறான். யாரிவன்? 'யார் பார்க்கப்போகிறார்கள்?' என்று என் புலன்கள் திருடுகின்றன. கண் கள்ளப்பார்வை பார்க்கிறது. வாய் நிந்திக்கிறது. காது பொய்யுங் கோளும் கேட்கிறது. கை செய்யத் தகாததைச் செய்கிறது. மனம் பிறர்மேல் சினங்கொண்டு பாய்கிறது. இத்தனையும் நான் இரகசியமாகச் செய்யும்போதே யாரோ ஒருவன் எனக்குச்

சவுக்கடி கொடுக்கிறான். 'ஏன் பொய் சொன்னாய்? ஏன் பிற மாதரை இச்சித்தாய்? ஏன் பிறர் உடைமையைத் திருடினாய்?' என்று என்னைக் குடைந்தெடுக்கும் இவன் யார்? மையிருட்டில் அவன் என்னைப் பார்க்கிறான். நான் உறங்கும்போதும் என்னுள் அவன் விழித்திருக்கிறான். நினைவில் நடந்ததைக் கனவில் காட்டிக் கண்டிக்கிறான். என் நெஞ்சத் துடிப்பை நிறுத்தினாலும் அவன் வாய்த்துடிப்பை நிறுத்தமுடியவில்லை. அவனே என் மனச்சாட்சி, என் உண்மையான நண்பன். ஒழுங்காக நடந்தால் தட்டிக்கொடுப்பான். நெறிதப்பிச் சென்றால் சவுக்கடி கொடுத்துத் திருப்புவான். அவனே என் அரசன், என் அறநெறி, என் அந்தர்குரு.

## 12. தெவிட்டாத இன்பன்

தேனும் பாலுந் தெவிட்டிப் போகின்றன. கனிரசமும் கைத்துப்போகிறது. கட்டிக் கரும்பும் எட்டிபோலாகிறது. விரும்பிய போகமும் வெறுத்துப் போகிறது. இளமையின் உல்லாச யாத்திரைக்காக இச்சிறு படகை இக் கடலில் ஓட்டினேன். அந்தோ, எத்தனை ஆசைப்புயல்கள் அதைக் கவர்ந்தன! எத்தனை காமக்ரோதத் திமிங்கிலங்கள் அதை வளைத்துக்கொண்டன! ஐயோ! எத்தனை திருடர் திடீரென்று வந்து என் பொருளைக் கொள்ளை கொண்டனர்! நான் நம்பின நண்பரும் வஞ்சனை செய்தனர். சித்தத் திரைகள் கொந்தளிக்கின்றன. படகு இங்கொரு சுழியில், அங்கொரு சூழ்ச்சியிற் சிக்கி வருந்துகிறது. கவலைப்பாறையில் மோதிப் பக்குவிடுகிறது. ஒரு மாய முதலை என்னை விழுங்க வருகிறது. 'இறைவா, தலைவா, முதல்வா, அருட் கடலே' என்று அப்போதுதான் அலறுகிறேன். 'இதோ இருக்கின்றேன்; அஞ்சாதே' என்று நீ யென்னுள்ளிருந்து வெளி வருகிறாய்; கை தருகிறாய்; தோன்றாத் துணையாயிருந்து

எப்படியோ என்னை மீண்டும் கரை சேர்க்கிறாய். எல்லாம் பார்த்தாயிற்று; எல்லாம் கைத்தது. நீ ஒருவனே இன்பன். நான் உன் அன்பன்.

## 13. கருணையே!

என் மனப்பயிர் வாடும்போது, 'இதோ நான்' என்று கர்ஜித்துக் கார்மேகமாய்ப் பொழிந்து, என் வாட்டந் தவிர்க்கிறாய். கானலில் நான் வேர்த்து அயரும்போது, மெல்லிய பூங்காற்றாக வந்து என் அயர்வை நீக்குகிறாய். தாகத்தால் நான் தவிக்கும்போது, தெள்ளிய நீரோடையாகப் பாடி வந்து விடாய் தீர்க்கிறாய். நான் பசியால் வருந்தும்போது, அன்னையாய் அமுதளிக்கிறாய். நான் அனாதையாகத் திரிந்தேன். 'வாடா மகனே' என்று என்னை வாரியணைத்து உன் வீட்டிற் கழைத்துவந்து வளர்த்தாய்! 'நான் ஏழை, சிறியன், மெலியன், கையாலாகாதவன். அறிவிலி, படிப்பில்லாதவன், பஞ்சை, பேதை, யாரும் என்னை விரும்பவில்லை; என்னையே நான் வெறுக்கிறேன்' என்றெல்லாம் தளர்ந்து நொந்து போனேன். உலகம் எனக்குப் பிடிக்கவில்லை. உடல் வாழ்வு அசங்கியமாகத் தோன்றியது. நான் தற்கொலை புரிந்துகொள்ள ஒரு மலைப்பாறையின் உச்சியினின்று இருட்கணவாயிற் குதிக்கக் காலெடுத்தேன். நீ என்னைப் பிடித்திழுத்து, 'நானல்லவா உன்னுள் உள்ளேன்; நான் சாகாப்பொருள்; இவ்வுடல் கொண்டு உலாவுவது நானல்லவா? உன் ஆசையாணவங்களைக் கசக்கிப் பிழிந்துவிட்டேன். இனி நானே நீ; நானே உன் வாழ்வை நடத்துகிறேன் என்று தடுத்தாண்டாய்......கருணையே!

## 14. உணர்ச்சி

அப்பனே, உயிர்க்குயிரே, உன்னை புணர்ந்த பிறகே எனக்கு உயிர் வந்தது. உன்னைக் கண்ட பிறகே விழி பெற்

றேன். உன் பொன்மொழி கேட்ட பிறகே எனக்கு வார்த்தை வந்தது. உனக்காக எனது நெஞ்சம் துடித்த பிறகே நான் வாழ்ந்தேன். உன் புன்னகையைப் பருகிய பிறகே சூரியனில் ஒளிகண்டேன். உன்னைக் காணுதவரை யில் நான் குருடனுயிருந்தேன். உன் மொழி கேளாத வரையில் நான் செவிடனுயிருந்தேன். உன்னைப் பாடாத வரையில் நான் ஊமையாயிருந்தேன். அப்பனே, இனி என் சித்தம் அலையாது உனது அன்பில் ஊன்றி நிற்கட்டும். பேய்கொண்ட குரங்குபோல என் மனம் அங்குமிங்கும் வெறிபிடித்தலையாது உனது திருவடி நிழலில் விளையாடட் டும். உன் இச்சையை நிறைவேற்றவே ஆற்றலருள். உன் பணி புரியவே கையில் வலிவு தா. உன்னைப் புகழவே சொல்வரந் தா! உனது திருவடியில் என்னைப் பிணைத்தி ருக்கும் அன்புத்தளை போதும். அப்பனே, வேறு தளை களையெல்லாம் அறுத்தெறி. உனது அருட் செல்வமே எனக்குப் போதும். மற்ற உடைமைகளெல்லாம் பறித்துக் கொள்.

## 15. இடர்கள்

என் மாயச்செருக்கை மண்கௌவ வைத்தாய். தனி யகந்தையைத் தலையிலடித்தாய். ஆணவப் பேயை நாணச் செய்தாய் துன்ப நெருப்பில் போட்டு வாட்டி என்னைப் புடம் வைத்தாய். இந்த உவர் மண்ணில் போட்டுப் புரட்டி என் மாயமனத்தை வைராக்கியப் பாறையில் சக்கையாக வெளுத்தாய். அப்போதெல்லாம் உன்னைக் கொடியவ னென்று வைதேன். உன்மேல் நம்பிக்கை யிழந்தேன். 'ஏன் என்னை இவ்வளவு இடர்களிற் போட்டு வாட்டுகிருய் தெய்வமே; உனக்குக் கண்ணில்லையா, கருணையில்லையா, இரக்கமில்லையா; உன்னை தீனரட்சகன் என்போர் முழு

மூடர்கள்' என்று கண்டபடி திட்டினேன், நாத்திகம் பேசினேன். மேன்மேலும் எனக்கு நல்ல பூசை கொடுத்தாய். ஒரு நாள் இந்த மனம் நன்றாக வெளுத்து உலர்ந்து பரிசுத்தமாயிருந்தது. உடனே அதை நீ அணிந்துகொண்டாய். அதன்பின் என் இன்பத்தை என்னென்றுரைப்பேன். அறியாமையால் உன்னை நிந்தித்தேன். அப்பனே என் பிழைகளைப் பொறு. நீ கொடுத்த அடியெல்லாம் என் அழுக்கை நீக்கின. பூசைகொடுத்து புத்தி வரச்செய்தாய். என்னைப் பெற்ற அப்பனே, இன்னும் கோடானுகோடி இடர்கள் தந்தாலும் பொறுக்கிறேன். நீ தரும் இடர்கள் இன்பத்திற்கு வழி யென்பதறிந்தேன்!

## 16. துணைவனே

துணைவனே, எல்லாரும் கைவிட்டாலும் நீ என்னைக் கைவிடமாட்டாய். அந்தத் துணிவுகொண்டே உலகில் நடக்கிறேன். அருளையா, எல்லாப் பொருள்களையும் நான் இழந்தாலும், உன்னை நான் இழக்கமாட்டேன். நீ போதும்; வேறு செல்வம் வேண்டேன். உன்னுடன் ஒரு சிறு குடிலில் வாழ்வதே அரண்மனை வாழ்வினும் பெரிது. உன்னுடன் கூழ் குடிப்பதே மன்னன் விருந்தினும் இனிது. உன்னுடன் தனித்திருப்பதே சத்ஸங்கம். உனது நாம ஜபமே என் படிப்பு. சுத்தனே, அனுபவ மென்னும் உலையில் உருக்கி யுருக்கி வாழ்வைச் சொக்கத்தங்கமாக்கி உனது திருமுடியாகச் சூட்டிக்கொள். எனது அகம்பாவத்தை நையப்புடைத்துக் கிழித்துத் தைத்து உனது மிதியடியாக மாட்டிக்கொள். என் சித்தத்தை அலையாதபடி உனது காற் சதங்கையாக்கிக்கொள். உலகின் சுகதுக்கங்கள் என்னை மோதும்போது உன்மீது பழி கூறாமல், எனது பிழைகளைக் கண்டு திருத்திக்கொள்ளப் பொறுமைதா. என்னை வறுமை

சூழும்போதும் வாய்மையை விடாது உன்னையே அன்பு செய்யும் திறமையைத்தா. எனது அன்பெல்லாம் உனது அருட்பணியாக விரிந்து பரவுக, துணைவனே!

## 17. அரசே!

உலகாளும் அரசே, இந்த அற்பக் குடிலிற் புகுந்தாய், என்னுடன் நெருங்கி வாழ்ந்தாய். என் இன்பதுன்பங்களை யெல்லாம் சகித்தாய். எனது கூழை அமுதென உவந்தாய். எனது தனிமை தீர்க்கக் கதைகள் சொன்னாய். என் விதியை நோகும்போது மதியைக் காட்டினாய். நான் இருட்பணியில் வாடும்போது இரவியாய் வந்தாய். அருங்கோடையில் மலர் வனமானாய். எனது வயல் வாடும்போது மேகங்களை மின்னலால் சூடு கொடுத்து ஓட்டி மழைபொழியச் செய் தாய். அரசே, அரசே, என்னே யுன் கருணை என்று நான் பூரித்தேன். திடீரென்று ஒருநாள் எனது சிறுமனக் குடிலைத் தீவைத்தழித்தாய். என் பீற்றற் பாயைக் கிழித் தெறிந்தாய். தனிமையினின்று இழுத்துவந்து என்னை நடுச்சந்தியில் நிறுத்தினாய். 'அரசே, இது தகுமோ?' என்று முறையிட்டேன். 'பார் சுற்றி; குறுகிய எண்ணங் களை விடு; உலகெலாம் உன் வீடு; இடமெலாம் உன் பாய்; சுடரெலாம் உன் மணி விளக்கு. உயிரெல்லாம் உன் உளத் துடிப்பு. மாந்தரெல்லாம் உன்னவர். சிறு குடிலும் சிறு வாழ்வும் ஒழிந்தன. என்னுடன் பெருவாழ்வு வாழ்க' என் றாய் அரசே!

## 18. மணாளா!

மணாளா, நாண்மலர் மாலையைத் தொடுத்துக்கொண்டே, 'நாதா நாதா' என்று உன்னை மெல்லக் கூவுவேன். காலையில் தொடுத்த மாலை இரவில் வாடிப்போகும். அதன் தேனை வண்டுகள் உறிஞ்சிச் செல்லும். என் மாலையை அணிந்து

கொள்ள நீ வருவாய் என்று கிழக்கும், மேற்கும் பார்த்து ஏங்கித்தவிப்பேன்; பிறகு உனது காதல் கனலும் இந்த மார்பிற்கே அதைச் சூட்டுவேன். இரவில் திறந்த வெளியில் அமர்ந்து விண்மீன் கூட்டங்களை நோக்குவேன். 'எனது காதலனைக் கண்டீர்களா?' என்று ஒவ்வொரு நட்சத்திரத்தையும் கேட்பேன். பால்வெளியில் சந்திரப்படவுடன் சென்று விண்ணெல்லாம் உன்னைத் தேடுவேன். ஊரெல்லாம் உறங்கும். என்னுள்ளம் உனக்காகத் துடித்து விழித்திருக்கும். இரவின் மௌன ரகசியத்தில் நீ ஒளிந்திருப்பாய் என்று நானும் மௌனமாகத் தேடுவேன். திடீரென்று என் முன் வந்து தங்க நகை புரிவாய். வனம் வனமாக நாண்மலர்களணிந்து காண்பாய். உலகெலாம் உன் மணம் வீச நிற்பாய். உலகிருள் மறையும்; மீன்கள் மறையும்; கவலை மறையும்; என் மனம் மறையும்; நான் உன்னுள் மறைவேன். மணாளா! நீ என்னை அணைத்துக்கொள்ளும் விளையாட்டு நன்று, நன்று!

## 19. மையல்

அறியாப் பருவத்தில் என் கையைப்பற்றி மையலேற்றினாய். மலர்களிலெல்லாம் உனது புன்னகையமுதை வீசி யென்னை மயக்கினாய். சூரியசந்திரரில் கண்வலை வீசி என் மனத்தைக் கொள்ளைகொண்டாய். தோழியருடன் விளையாடும்போது யாருக்குந் தெரியாமல் பின்னேவந்து என் கண்ணைப் பொத்தி 'நானார்?' என்றாய். உனக்காக நான் நாணி ஒளிந்தால், எனக்கு முன்னே நீ அதேயிடத்தில் கைபரப்பி நின்று என்னை மார்புறத் தழுவிக்கொண்டாய். காதலா, எனது நாணமழித்தாய். பருவம் வந்ததும் உன்னைக் காணோம். மாயாவீ, எங்கு மறைந்தாய்? கடலலைகளுடன் என் ஆசையலைகள் பொங்கியெழுந்து உன்னையே

கூவுகின்றன. அருணத்தேரில் நீயே வருகிறாய் என்று ஆசையாகப் பார்ப்பேன். தேர் வான்வெளியிற் சென்று மேற்கே மறைந்து போகும். அங்குமிங்கும் பறந்து இரை தேடிவந்து கூட்டிற்சேர்ந்து கிச்கிசிகொட்டும் பறவைகளைக் கேட்பேன். அந்தி மயங்கியதும் பாட்டடங்கிப் பறவைகளும் கண்மயங்கும். விண்பனியுடன் கண்பனி சோர்ந்தழுவேன்! எத்தனை நாள் உனக்காகப் பித்தாகித் தவிப்பேன்? காதலா, வா; என் உயிரைக் காக்க வாராவிட்டாலும் உன் கையால் இந்த வாழ்வு மலரை வெடுக்கென்று கிள்ளியாவது கொண்டுபோ, வா!

## 20. ஊன்குடில்

அரசே, இந்த ஏழையை உன்னோடு அமர்த்திக்கொண்டாய்! என் வறுமையைச் சீதனமாகப் பெற்றுக்கொண்டாய். என் கவலைத் திரளையே வரதட்சிணையாக வாங்கிக்கொண்டாய். திடீரென்று இந்த மண்வீட்டிற் புகுந்தாய். 'அரியணை தாங்கும் அரசே, என் எளிய வீட்டில் கட்டில்கூட இல்லையே; எங்கு நின்னை அமர்த்துவேன்?' என்று வெட்கினேன். 'உன் உள்ளமே என் அரியணை' யென்று என்னுட் புகுந்தாய். 'அரசே, இந்த ஏழை தொழில் செய்து சம்பாதித்துத்தானே கூழ் சமைக்கவேண்டும். உனக்கு எதைத் தருவேன்?' என்று ஏங்கினேன். 'உனது அன்புள்ள மனத்தைத் தா, போதும்' என்று ஏற்றாய். 'நான் பொறுமையுடன் வாழும் இந்த வெறுமைக் குடிலில் என்ன இருக்கிறது?' என்று முணுமுணுத்தேன். இதில், 'உன்னுடன் நான் இருக்கிறேன்' என்றாய். ஐயனே, அக்கணமே இந்த மட்கலம் அமுத கலசமானது; அக்கணமே இவ்வூனுடல் உனது பொன்மாளிகையானது; அக்கணமே தனிமை தீர்ந்து உன்னிற் கலந்தேன்!

## 21. உயிர்த்துடிப்பு

நீயே என்னுயிர். உன்னிச்சையே என்னுயிர்த் துடிப்பு. என்னுளந் துடிக்கும் உயிரே உலகெங்கும். உலகுயிர்களெல்லாம் என் உள்ளத்தில் துடிக்கின்றன. எனது நரம்புகளில் பொங்கும் உயிரோட்டமே அந்த அருவியிலும் பொங்குகிறது. என் சிதாகாசத்திற் பாடும் குழலே அந்தக் குயிற்கூட்டங்களிற் பாடுகிறது. என்னிடந் துளிர்க்கும் உயிர்ச்செழிப்பே அந்தச் சோலை மலர்களாகப் பூத்துச் சொரிகிறது. எனது உயிரன்பே அதோ உல்லாசமாகப் படவிற் செல்லும் காதலர் நெஞ்சினின்று முறுவலாகச் சிலம்புகிறது. இந்த ஊன்கூட்டில் கொஞ்சும் உயிர்க் கிளியே எல்லையற்ற வானுலகில் எண்ணற்ற பஞ்சபூதக் கூடுகளிற் புகுந்து, சென்று, மீண்டும் வந்து சென்று விளையாடுகிறது. என் மனத்தின் இரு தன்மைகளே இரவு பகல், இன்பம் துன்பம், இறப்பு பிறப்புகளாகக் கண்மூடி விளையாடுகின்றன. என்னுள் யானாக வாழும் நீயே அணுவணுவிலும் கலந்து நிற்கிறாய். விசுவாத்மனே, எனது ஜீவாத்மா இவ்வாறு உன்னுடன் எல்லையற்றுக் கூடி அனைத்திலும் இன்புறுகின்றது.

## 22. காலவோட்டம்

ஒவ்வொரு நாளும் உலகம் புதுப்பிறவி யடைகிறது. உயிரோட்டத்தில் புதுப்புது வெள்ளம் பொங்கி வருகிறது. இயற்கை, 'செல் முன்னே' என்று அனைத்தையும் ஓட்டிச் செல்கிறது. முன் சென்ற காலவெள்ளம் பின் செல்வதில்லை.

நீலமணிப் பந்தல் போன்று தெளிந்து விரிந்த வானைத் திடீரென்று கார்மேகங்கள் மதயானைக் கூட்டம்போல வளைத்துக்கொள்ளுகின்றன. சுடரும் மதியும் மீன்களும் அந்த முகிற்படலத்திற் புதைகின்றன. ஆயிரம் தேர்ப்படை

நடப்பதுபோல பளிச்சுப் பளிச்சென்று மின்னி இடி இடிக் கிறது; மடமடவென்று மழை பொழிகிறது. இருளும் குளிரும் உலகைக் கௌவுகின்றன. பனி கொட்டுகிறது.

திடீரென்று ஒருநாட்காலே வானந் தெளிகிறது; மந்த மாருதம் வீசுகிறது: புட்கள் இன்பமாகக் குயிலுடன் பாடு கின்றன. கன்றுகள் துள்ளித்துள்ளிக் குதிக்கின்றன. இயற்கை பொன்னும், பசுமையும், பூவுங் கனியும் பொலிந்து அழகு சொட்டுகிறது. உலகில் மணக்கோலங்கள் காண் கின்றன. காதலர்—உள்ளம், ஒன்றிய வாழ்வில் இன்புறு கிறது. இந்த வசந்த வனப்பு நிலைத்து நிற்கிறதா? இல்லை; இக்காட்சி மறைகிறது. எட்டுக்கண்ணும் விட்டெறிகிறது ஞாயிறு! வெயில் பொறுக்க முடியவில்லை. குளத்தாமரை கள் குன்றிப் போகின்றன. ஆறுகள் வற்றிப்போகின்றன. இரவில் காற்றில்லாது புழுக்கமாயிருக்கிறது. இக்கோடைக் காட்சியும் மாறுகிறது.

காற்று வீறிடுகிறது. சூறுவளி சுழன்று சுழன்று மண்ணை வாரியடிக்கிறது. வசந்தப் பசுமையில் அழகு மினுக்கிய மரங்களெல்லாம் மொட்டையாகின்றன. இலை கள் பழுத்து, உதிர்ந்து, உலர்ந்து காற்றிற் சுழன்றோடு கின்றன.

## 23. உடற் பருவம்

இவ்வாறுதான் உடற்பருவமும் நடக்கிறது. கொஞ்சுங் குழந்தையின் பால்வடியும் முகம் வயதாக வயதாக எத்தனை விகாரங்களை யடைகின்றது? ஐந்தாறு வயதுமட்டும் செல்லம் விளையாடுவது, பெற்றோருக்கு இன்பமாயிருக்கிறது; பிறகு, “போடா, பள்ளிக்கூடத்திற்கு, என்ன விளையாட்டு?” என்று ஓட்டுகின்றனர். பையன் உபாத்தியாயருக்குப் பயந்து அடக்கவொடுக்கமாகக் கல்வி கற்கிறான். பாடக்கவலையும்

பரீட்சைக் கவலையும் அவனைப் பற்றுகின்றன; பதினாறு வருகிறது; வாலிபன் மனத்தில் ஒரு புதிய உணர்ச்சி யெழுகிறது. பையன் காதலனாகிறான். தக்க பருவத்தில் ஒரு காதலியை அடைந்து மனைவாழ்விற் புகுந்ததும் சுகதுக்கப்படலங்கள் அவனைச் சூழ்கின்றன. செழுமை, வறுமை; மகிழ்வு, மயக்கம்; தெளிவு, கலக்கம்; நலம், நோய்; பெருமை, சிறுமையாகிய இருவிகாரங்களினூடு ஜீவநதி யோடுகிறது. வாலிபன் தந்தையாகிறான். மனைவிமக்கள் தேவையை நிரப்ப ஓயாது பாடுபட்டுப் பொருள் தேடுகிறான். நாளுக்கு நாள் கட்டுகள் வலுக்கின்றன. சம்ஸாரம் சலித்துப்போகிறது. வாழ்வுப்போரில் இளைத்துக் களைத்து மெலிகிறான். ஐம்பது வயதாகிறது. தந்தை தாத்தாவாகிறான். தான் சொக்கி மயங்கிய அழகி கிழவியாகிறாள். முகம் மடிப்புவிழுந்து விகாரமாகிறது, பழுத்து உலர்ந்த திராட்சைப்பழம்போல உடல் திரைத்துப்போகிறது. தலை கொக்குமாதிரி வெளுத்துப்போகிறது. கைகால்கள் ஆட்டங் கொடுக்கின்றன. சாவின் முத்திரை முகத்திற் காண்கிறது. முதுகு எமராஜனுக்கு வணங்குகிறது. குரல் நடுங்குகிறது. உடல் தள்ளாடுகிறது. ஒருநாள் நடக்கக்கூட சிவனற்றுக் கிழவன் படுக்கிறான். வாத பித்த கபங்கள் அவனைக் கொல்லுகின்றன. உறக்கம் வருவதில்லை, கவலை விடுவதில்லை, வீட்டுப்போர், மனப்போர், உயிர்ப்போர் உடற்போர்களூடு அவதிப்பட்டு, ஒருநாள் அவன் ஆவி கருமமூட்டையைக் கட்டிக்கொண்டு உடலைப் பிணமாக்கிச் செல்லுகிறது. தாத்தா பிணமாகப் பாடையிற் செல்லுகிறார். அழுகுரல்தான் முதுகாடுமட்டும் வருகிறது. உடல் தீக்கு இரையாகிறது. மறுநாள் சஞ்சயனத்திற்கு எலும்புகள் அகப்படுகின்றன. இவ்வளவுதான் உடல் வாழ்வு.

## 24. நித்திய வுணர்வு

இவ்வுடலில் வாழ்ந்தது எது? அதுதான் சுத்தான்மா. அது பாடையில் ஏறுவதில்லை; கூட்டுக்கிளிபோல உடலில் வந்திருந்து செல்லுகிறது. 'எங்கிருந்து வருகிறது, எங்கு செல்லுகிறது, இந்த ஆன்மக் கிளி' என்று யார் சொல்ல முடியும்? 'நான்' என்பது ஆன்மா; அது நித்தியப் பொருள்; 'அதுவே நான்' என்னும் நித்திய உணர்வில் வாழ்ந்தால், உடலின் இன்பதுன்ப வேறுபாடுகள் மனத்தைப் பற்ற. உடல் வரும், விழும்; உயிரோட்டம் என்றுமுள்ளது. விளையாடுமட்டும் பந்தில் காற்றிருக்கிறது. ஆட்டம் முடிந்ததும், காற்றை அவிழ்த்து விடுகிறோம்; வெறும் பந்தை மடித்துக்கொண்டுபோகிறோம். பந்திலுள்ள காற்று ஆகாயத்திற் கலந்துபோகிறது. அதுபோலத்தான் உடலுயிரும். இறைவனே, காலம் இடம் காரணங்களூடு நடக்கும் இந்தக் கட்டுண்ட உடல்வாழ்வில், கட்டற்ற நீ ஆன்மாவாக இருக்கிறாய். உனது சுத்த சுதந்திரத்தில் உன் உணர்வுடன் நான் வாழுகிறேன். ஆயிரம் பிறவி தந்தாலும், ஆயிரம் எமபாசங்கள் சூழ்ந்தாலும், ஆயிரம் இடர்கள் வந்தாலும் எனக்குக் கவலையில்லை, கட்டில்லை, அச்சமில்லை, அச்சமில்லை, துன்பமில்லை, துயரமில்லை. நான் சுத்தான்மா, நான் சுதந்திரான்மா, நான் சுகான்மா, நான் அமரான்மா!

## 25. இயற்கைக் கடவுளே

வானம் வளைத்தணையும் உலகெலாம் உன் கோயில். ஒவ்வோருயிரும் உனது சந்நிதி. சுடரும், நிலவும் உனக்கு ஒளி வழிபாடு செய்கின்றன; பகல் உனக்கு மலர்மாலை சூட்டுகிறது; இரவு உனக்கு விண்மணி மாலை சூட்டுகிறது; மேகங்கள் உன் கருணையைப் பொழிகின்றன; ஆறுகள் உனது

அருளைப் பாடி, உனது அருட்கடலை நோக்கி யோடுகின்றன; கடல்கள் நின் எல்லையற்ற பெருமையை ஆர்கலிக்கின்றன; மலைகள் நின்னைத் தியானஞ் செய்துகொண்டிருக்கின்றன; புட்கள் நினது திருப்பெயரைப் பாடுகின்றன; சோலைவனங்க ளெல்லாம் உனது அழகின் பசுமாளிகைகளே! இயற்கையில் உனது இதயந் துடிக்கக் காண்கிறேன்: கல்லில் நீ உறங்கு கிறாய். மரத்தில் உணர்கின்றாய். விலங்கில் ஐம்புலன் கொண்டு உலவுகின்றாய். மானிடத்தில் மனமாக நினைக்கின் றாய். யோகியருள், ஆன்மாவாக விளங்குகின்றாய். அறிவுக் கடவுளே, சடத்தில் சித்தாக விளங்கும் தத்துவனே, எங்கும் பரந்து விரிந்த பரமாகாயனே, இந்தக் காற்றை உயிர்க்குந் தோறும் உனது ஆற்றல், உனது பிராணசக்தி, யெம்முட் கலந்து பரவுக! இயற்கைக் கடவுளே வணக்கம்!

## 26. உட்பசி

கற்றேன், கேட்டேன், பேசினேன், எழுதினேன், புகழ் பெற்றேன்—அமைதி பெறவில்லையே! சித்தப்புயல் அமைதியை உடைக்கிறது. மோகக்கடலைக் குடித்தேன்; தாகந் தணியவில்லையே! மனத்தினவைத் தீர்க்க வலைப்புள்ளா னேன்! உட்பசி கிண்டுகிறது. பாயச விருந்து, பஞ்சணைச் சுகம், பணக்குவை, படிப்பு வல்லபம், பட்டம் பதவி, பெயர் புகழ், எவையும் உட்பசி துடைத்திலவே: உள்ளே எந்தாய் சக்தி அமுதம் வைத்தழைக்கிறாள்! இந்த மனம் புலன் வழியே சாக்கடை எச்சிலுண்ண நாய்போல ஓடுகிறது. "அடா, அது நாற்றம், நரகம்" என்று நீ புத்தி சொல்லுகிறாய். 'அதுதான் சுகம்' என்று விழுந்து புரளுகிறதே மனப்பன்றி! 'குரங்கை நினைக்காதே' யென்றால், பேய்க்குரங்காகத் துள்ளு கிறது. 'மனமே, அடங்கு, துள்ளாதே, வா உள்ளே.

நான் கடல்; நீ எனது அலை. என்னுள் அடங்கு' என்கி றேன். "நீயார் கேட்பது?" என்று ஆங்கரிக்கிறது; விளைந்த வழியிற் சென்று விலங்கு மாட்டிக்கொள்ளுகிறது; கண்ட தைச் செய்து கவலைச் சிறை வருந்துகிறது; அறிவை யறியாது ஆகாச ரகசியம் பேசுகிறது. பொட்டைக் கண் ணன் கட்டழகை வர்ணிப்பதுபோலிருக்கிறது இதன் பேச்சு. இந்த வாழ்வுக் குடிலில் ஒரு மாயப் பாம்பு விளையாடுகிறது. உனது பிரசாதத்தை அது உண்டு நஞ்சுமிழ்கிறது. அப்ப னே, உனது மோகனக் குழலூதி அதைப்பிடித்து வெளியே விட்டோட்டு. அப்போதுதான் இம்மனம் அடங்கும். உனது பிரசாதத்தால் எனது உட்பசி தணியும்.

## 27. அருள்

அல்லும் பகலும் அபயமிடுகிறேன். பரம்பொருளே, எனக் கிரங்காயோ? கல்லுக்கு முறையிட்டும் காளியைக் கண்டார் ஸ்ரீ பரமஹம்ஸர். உயிர்துடிக்கும் உள்ளத்தில் உள்ள உனக்கு நான் முறையிடுகின்றேன்; மாயப்பித்தர் மண் பொன் வேண்டுவர். நான் மண்பித்தனல்லேன்; நான் உன் பித்தன்; உன்னையே வேண்டுகிறேன். என் உள்ளக் கோயிலில் சுத்தச் சுடர்வடிவாக உன்னைத் தியானித்து, அன்பு மலர் தூவி வழிபடுகின்றேன். அப்பனே உன்னருளால் தான் உன்னைக் காணமுடியும். தீயில் சூடு, கதிரில் ஒளி, பாலில் வெளுப்பு, தண்ணீரில் தண்மை, கனியில் இனிமை, பாட்டில் ஓசை, அறிஞரில் அறிவு, அன்பரில் அன்பு எல் லாம் உனது அருட்சக்தியே. நானுலகும் உனதருளின் நாமரூப வேடமே: ஆறுகள் பல; அலைகடல் ஒன்று. உடல்கள் பல; உயிர் ஒன்று. சுடர்கள் பல; வானம் ஒன்று. மணிகள் பல; மாலை ஒன்று. மரங்கள் பல; மண்ணிலம்

ஒன்று. இவ்வாறு ஒன்றிற் பல கூடுவதும், ஒன்று பல வாவதும், உனது அருள் விளையாட்டே. இருப்பது சுத்தன், இயங்குவது சக்தி; இருப்பது சத்து, இயங்குவது சித்து; இயக்கம் ஆனந்தம். உனது சந்நிதிமாத்திரத்தில் நின்னருள் ஐந்தொழில் புரிகிறது. சச்சிதானந்த சுத்த சக்தியாய் விளங்கும் ஒருவனே, உனதருள் என்னுள் விளையாடுக!

## 28. ஆண்—பெண்

வயலும் பயிரும் போல நீ சக்தியுடன் விளங்குகிறாய். இயற்கைத் தலைவனே, ஆணும் பெண்ணுமாக விளங்கி உலகாடலை நடத்துகிறாய். மலரும் மணமும், கனியும் சுவையும், தண்ணீரும் தரையும், உடலும் உயிரும், அறிவும் அழகும், †ஏகுமினலும் ஆகுமினலும் போன்றது ஆண் பெண் தத்துவம். ஆணில் பெண் காணும் இன்பம் உன்னின்பமே: ஏனெனில், நீயே ஆணுடல் பூண்டிருக்கிறாய். பெண்ணில் ஆண்காணும் இன்பம் உன்னின்பமே: ஏனெனில், உன் அருளே அழகைப்போர்த்துப் பெண்ணாக விளங்குகிறது. பெண்களை அம்மன் கோயிலாகவும், ஆண்களைச் சுவாமி கோயிலாகவும் வணங்குகிறேன். பால் வேற்றுமை, தோல் வேற்றுமைகளுக்குள்ளே நிர்விகாரியான உன்னையே கண்டு, என் மனம் தோற்றங்களாலும் வேடங்களாலும் வேறுபடாதிருக்கும் உறுதி தந்தருள். தூலவுடல் தகழி, சூக்குமம் நெய், காரண சரீரம் திரி, சுத்தான்மச் சோதியே சுடர். விளக்கு எவ்வடிவானாலும், எந்நிறமானாலும், மாசற்ற சுத்தான்மச்சுடரான நின்னெழிலை, நின்னழகை, நின்மயத்தை யாதிலும் காணவருள். வேற்றுமை விழிகளாற் காணாது சர்வாத்ம சமரஸ விழிகளால் உன்னைக் காணவருள். அந்தர்யாமியே!

---

† Passive and negative electric currents

## 29. பொது வணக்கம்

பொதுநிலைப் பொருளே, சாதிமதபேதமணுகாச் சமரஸப் பொருளே, உயிர்க்குயிரே, ‘பிரமம், சிவன், திருமால், நாரணன், அகாலன், அல்லா, யஹோவா, அஹுரான், பரமபிதா’ என்று சமயங்கள் போற்றும் சத்தியமே, ஓவ்வோருள்ளத்திலும் நீ வீற்றிருந்து, உலகெங்கும் உன் அருள் விளையாடுகிறது. எங்கும் உன் விழிகள் எம்மைக் காண்கின்றன. உன் விசுவதரிசனங் காண எமது உள்விழி திறந்தருள். உயிர்க்குலத் தந்தை நீ; தாய் உன் அருள். இந்த வுணர்வில் நாங்கள் எல்லாரும் அன்புடன் ஒருகுல சகோதர சகோதரிகளாக வாழவருள்; தனியகந்தையை மாய்த்தருள். மனச்சாட்சியாயிருந்து நீ நடத்தும் அறவழியில் நாங்கள் அச்சமில்லாது, தளராது நடந்து வாழ்வுப் போரை வென்று உன்னருளரசை அடையவருள். எங்கள் கல்வி கேள்வி, அறிவு, கலை, ஆற்றல், நினைப்பு, பேச்சு, செயல், நடை, அனைத்திலும் உன்னொளி வீசுக! எமது வாழ்க்கை உனது உண்மை விளக்கமாகுக. இவ்வுடலை உனது கோயிலெனக் கருதி எப்போதும் நாங்கள் சித்த சுத்தியும் அருட்பணியுமாக வாழவருள். உள்ளத்தில் உன்னை வணங்கிப் பயனுள்ள உழைப்பால் உலகாலயப்பணி புரியவருள்.

## 30. தன்மயனே

தன்மயனே, உன்மயமாக உலகைக்காணும் சமநோக்கருள். எனது மனத்திரையை நீக்கு; உனது சந்நிதியை உள்ளே துலக்கு. உன்னை உன்னருளாற் கண்டு, உன்னறிவாகி, உன்னுடன் இரண்டறக் கலந்து, உன்னின்பமே எனது வாழ்வாகுக! வாய்மனங் கடந்த தூயனே, உணர்வால் உன்னை

வழிபடுகிறேன். பலவான உலகிற்கு ஒரு தனிமுதல்வனே, நீ என்னுள் உயிர்; அதனால் உயிர்க்கிறேன். நீ என் னுள்ளத்தில் நடமாடுகின்றாய்; அதனால் நான் உலகில் நடமாடு கின்றேன். தோல், சதை, எலும்பு, குடல், நாடி நாளம், நரம்பு, இரத்தம், விந்துக்களாலான இந்தத் தூலவுடலும், மனம் புத்தி சித்தம் அகங்காரமான அந்தக்கரணமும், புத்தியும், புலன்களும் கூடிய இயற்கைச் சட்டையைப் போட்டுக்கொண்டு உன்னருளே உலாவுகிறது. கண் உறங் கும்போதும் என்னில் விழித்திருக்கும் ஒளியே, உயிரே, உயிர்க்குயிரே, எனது மொழியெல்லாம் உன் மந்திரநாத மாகுக! என் நினைப்பெல்லாம் தியானமாகுக; என் செயல்க ளெல்லாம் வழிபாடாகுக; என் உணவெல்லாம் உனக்கு நிவேதனமாகுக; என் உறக்கம் உன்னுடன் கலந்தின்புறும் சமாதியாகுக! ஓம் சுத்த சக்தி!

## 31. உயிர் மேனியனே

உயிர் மேனியனே, வானுலகரசே, உனக்கே யாங்கள் குடி. நீயே எமக்கரசன். வேறு யாருக்கும் நாங்கள் அடிமை யாகாது சுதந்திரமாக மனச்சாட்சியின் நெறிபற்றியே ஒரு வருக்கொருவர் உதவியாக அன்பாக வாழுவோமாக! உலகம் உனது அகண்டமான சிற்சபை, ஆடரங்கம். அதில் உனது விளையாட்டுத் தோழராக நாங்கள் வாழும் இன்பந் தந்தருள். உன் இன்பத்தில் எழுந்து, உன் இன்பத்தில் இயங்கி, உன் இன்பத்தில் மறையும் உலகை வெறுக்காமல் உனது சக்தி விலாசமாகக் காணவருள். அகண்ட யோகியே, கல்லில் உறங்கிப் புல்லில் துளிர்த்து, விலங்கில் உயிர்த்து, மனித னில் நினைத்து, தேவரில் அறிந்து விளங்கும் உண்மை யறிவின்பக் கடவுளே, இடம் காலம் காரணங்களிற் கட்டுப்

படாத சுதந்திரனே, வினையுடலில் ஜீவசாட்சியே, கடலாவி மழையாகி, மழை ஆறாகி, ஆறு கடலுக்கே வந்துசேருவது போல, உன்னருளால் எழுந்த உயிருலகம், உன்னுணர் வெய்தி, உன்னிற் கலக்கிறது. இயற்கையழகின் சிற்பியே, உனது கைத்திறனை என்னென்றுரைப்பேன்! ஆ, கோடிக் கணக்கான வடிவங்கள் உனது அருளால் விளங்குகின்றன! உன் அற்புதத்தின்முன் உரையிழந்து, மனமிழந்து, உளந் துடித்து மௌனவியப்புடன் நிற்கிறேன்!

## 32. எல்லாம் வல்லவனே

யார் எப்பெயரால், எவ்வடிவால் வணங்கினாலும், பெயர் வடிவில்லாத அருவாக தியானித்தாலும், அனைவருடனும் நான் உன்னைக் கலந்து மனங்குவிந்திருக்கிறேன். 'எல்லாம் வல்ல பராசக்தி, அல்லா, பெரியசாமி, அஹுரான், அச்சுதன், பரமபிதா, அருட்பெருந்தந்தை, இன்பசிவன், அழகன், என்றும் இளம்பொலிவுள்ள முருகன், எங்கும் நிறைந்த நாரணன், தடைகளை நீக்கும் விநாயகன்' என்று எப்பெயரிட்டு யாவர் சிரத்தையுடன் வணங்கினாலும் யானும் அவருடன் உன்னை உள்ளத்தில் வணங்குகிறேன். 'நான் அவன், நான் நீ, நீயின்றி நானில்லை, என்றும் ஒன்று நான்' என்று உன்னை உணர்ந்து, கலந்து, நிட்டையிலிருக்கும் யோகிகளுடன் யானும் மனமிறந்து, வாயிறந்து மௌனமாகி, உள்ளபடி உள்ளத்தில் உன்னைக் கலந்து துரியானந்தம் அனுபவிக்கிறேன். எனது இதய கமலத்தில் உனது அன்புத் தேன் பொங்குக. என் உச்சித்தாமரையான ஸஹஸ்ராரத்தில் உனது அறிவொளி சுடர்க! உன்னைப் பிரிந்து எனக்கு உயிரில்லை, உலகில்லை, உணர்வில்லை, இருப்பில்லை. நீயின்றி யாதுமில்லை. தோன்றாத்துணைவனே, இதயத்தேரில் வழி

என்னை நடத்து. உன்னிச்சை என்னுள் நிறைவேறுக! என்னிச்சை யெதுவுமில்லை. உனக்கே இங்கு உயிர்க்கிறேன். எனது உடையுணவுத் தேவைகளை ஒழுங்கான ஒரு தொழிலால் ஈட்டி, மீதி நேரமெல்லாம் அறிவும், அன்பும், அருட்பணியும், சுத்தான்ம சாதனமும் செய்து மேலோங்கவருள்.

## 33. அறிவுக் கூத்தனே

அறிவுக்கூத்தனே, உன்னுடலுக்கு என்னையொரு பாத்திரமாக்கிக்கொள். அதில் உனது சக்தியமுதம் பொழிக! உனது அன்பு வெள்ளம் நிறைக! இருளொழிக, இன்பம் எழுக! பொய்யொழிக, மெய்துலங்குக! அகந்தைவழிச் செல்லாது உன் அன்புவழிச் செல்க வாழ்வு. சுத்த முக்த சமத்வ சக்தி யென்னுள்ளும் புறமும் பொலிக. 'யான்' 'எனது' என்னும் ஆணவம் உனதுண்மைக்கு ஊனாகியொழிக. வாழ்வின் பாதையில் இடர்களும் துயர்களும், இகழ்ச்சியும் பிறர் தீமைகளும் நேர்ந்தாலும் தளராமல், நீயொருவன் என்னுள்ளும் புறமும் இருப்பதை எண்ணித் தீரனாக நடக்கவருள். என்னை யறிந்தவன் நீயே. என்னைக் காக்கும் காவலன் நீயே. எனக்கு ஆறுதல் சொல்லும் நண்பன் நீயே. கவலை, துராசை, ஆணவம், மோகம், சினம், பகை, பொய், பிணி, வஞ்சம், சூது, பொறாமை, திருட்டு, உருட்டு, கொலை, கள், காம வெறிகள் என்னிடமும் என்னவரான மனித சமுதாயத்திடமும் அணுகாது துரத்தியருள். உன்னன்பு, உன்னின்பம், உன்னுண்மை, உன்னொளி, உன்காட்சி, உன்னிறைவு, உன்மயத்திலேயே என் உடலும், உயிரும், புலனும் கருவிகரணங்களும், புத்தியும் சீவனுந் தோய்ந்து பூரணம் பெறுக!

## 34. உலகம் பலவிதம்

எல்லையற்ற வான்வெளியில் ஒரு சக்தியாற் சுழன்றோடும் கோடிக்கணக்கான நட்சத்திரங்களும் கிரகங்களும் உள்ளன: அவற்றில் இம் மண்ணுலகம் ஒரு அணுமாத்திரம். அதில் முக்காற்பங்கு கடல்; காற்பங்கு தரை. அதில் ஐந்துகண்டம். அதில் சுமார் 75 நாடுகள். அவற்றிலெல்லாம் சேர்த்து சுமார் 150 கோடி மாந்தர். அவர்களுள் நிறம், மனம், நடையுடை பாவனை, மதம், தொழில் வேறுபாடுகள் அனந்தம். உலகின் ஆதிமக்களான தமிழர், ஒருவகை. இந்திய ஆரியர் ஒருவகை. வெள்ளை ஊணர் ஒருவகை. துருக்கியர், சீனர், ஜப்பானியர், யூதர், பல வகை. ஜரதுஷ்டிரம், யூதம், கிறிஸ்துவம், கத்தோலியம், புரோதஸ்தாந்தியம், இஸ்லாம், ஷியா, சுனி, அஹமதியம், பஹாயம், கொன்பூசியம், லவோதியம், பௌத்தம், மகாயானம், ஹீநயானம், ஜைனம், திகம்பரம், ஸ்வேதாம்பரம், ஸ்தானகவாசியம், இந்து தர்மம், வேதாந்தம், சித்தாந்தம், பாஞ்சராத்ரம், அத்வைதம், விசிட்டாத்வைதம், துவைதம், வீரசைவம், காபாலிகம், சாக்தம், வாமாசாரம், தட்சிணசாரம், ஸௌர்யம், காணபத்யம், கௌமாரம், கபீர் பந்தா, சீக்கியம், உதாஸி, கால்ஸா, சைதன்யம், ராமபக்தி, கிருஷ்ணபத்தி, பிரமஞானசங்கம், ஆரிய சமாஜம், பிரம சமாஜம், ஆதிபிரம சமாஜம், சாதாரண பிரம சமாஜம், இராமகிருஷ்ண சங்கம், சமரஸ சன்மார்க்க சங்கம்—ஆகிய பலப்பல சமயப்பிரிவுகள் உள்ளன. ஒவ்வொன்றும் கோட்டை கட்டிக்கொண்டு தானே உண்மை யென்னும். அப்பனே, எந்தச்சமய முத்திரையும் எனக்கு வேண்டாம். எச்சமயத்திற்கும் பொதுவான பரமாத்மனே, நீயே எனக்கு வேண்டும். ஒவ்வொரு சமய மலரிலும் தேனுண்

டேன்: பூக்கள் பல; தேன்சுவை ஒன்றுதான். கிளைகள் பல; மரம் ஒன்றுதான். தேவாரம், திருவாசகம், தாயுமானவர், குறள், அருட்பா, கீதை, உபநிடதம், திருவாய்மொழி, பைபிள், குரான், புத்த தருமம், தத்வார்த்த சூத்திரம், ஜெந்தவஸ்தா, தவோ வேதம், சத்யார்த்தப் பிரகாசம், பரமஹம்ஸோபதேசம் அனைத்தையும் கற்றுச் சிந்தித்தேன். அனைத்திற்கும் பொதுவான தருமசாதனம் ஒன்றுள்ளது; அதுவே சுத்தமூக்த சமரஸ தர்மம். மதங்களுக்கு முன்பே அறம் இருந்தது. அன்பு, வாய்மை, தூய்மை, சமரஸம், ஈகை, இரக்கம், ஒப்புரவு, தன்னறிவு, இன்சொல், அஞ்சாது நலம்புரிதல், ஆசையாணவங்களை அடக்கியாளல், ஒரு யோக்கியமான தொழிலால் வாழுதல், நல்லொழுக்கம், ஒற்றுமை, உள்ளமைதி, அறிவுவளர்ச்சி, ஆத்மசாதனம் இவை மனிதசமுதாயம் முழுதும் சாதிமத வேறுபாடில்லாது பயிலத்தக்க பொது நெறிகள். இவற்றைச் சாதனஞ் செய்கிறேன். இறைவனே, உன்னைத் தந்தையாகக் கருதினேன். மனித சமுதாயத்தை உடன்பிறப்பாக நேசிக்கிறேன். உள்ளத்தில் உன்னுடன் கலந்து யோகத்தில் ஆழ்ந்து, உனக்கு வழிபாடாகவே எனது ஆற்றலுக்கும் இயல்பிற்கும் ஏற்றபடி, நீ ஏவிய பணியைப்புரிந்து பலனை உனக்கே நிவேதிக்கிறேன். உள்ளமட்டும் இவ்வாறே அடக்கமாக, அமைதியாக, ஆன்ம சுதந்திரத்துடன் சுத்த நிலையிலிருந்து, அனைத்தையும் சமமாகப்பார்த்து, இயன்ற பணி புரிந்து உன்னுடன் யோகத்திற் கலந்து வாழவருள், பரமாத்மனே! வணக்கம். ஓம் சுத்த சக்தி.

## 35. ஆசி

திருவருள் வாழ்க; விரிநிலம் வாழ்க! இன்னுயிர்க்கெல்லாம் இன்பம் நிறைக! அறிவொளி சுடர்க; அமைதி நிலவுக!

உண்மை வெல்க; ஒற்றுமை ஓங்குக! ஆற்றல் பெருகுக; ஆண்மை வளர்க; பெண்மை மகிழ்க! அழகு விளங்குக; அருங்கலை பிறங்குக! செல்வம் குவிக; சீர்மை திகழ்க! பயிரினந் தழைக! உயிரினம் பொலிக! உழைப்பும் பிழைப்பும் செழிப்புற்றோங்குக! அறம் உயர்க; அன்பு பொங்குக! ஆன்ம வுணர்ச்சியில் யாவரும் வாழ்க! வானமுதாறு வாழ்விற் பாய்க!

## 36. காத்தருள்

நலமெலாம் பொலிக, நச்சிருள் ஒழிக. தீமை விலகுக. போர்வெறி பொன்றுக! பொறாமை நலிக. பொறுமை வளர்க. வேற்றுமை நீங்குக. வீறு பெருகுக. ஆத்தும வுணர்வில் அனைவரும் ஒன்றுக. சிறுமன மாயம் சிதறி யொழிக. அடிமைநோய் தீர்க. வறுமை கெடுக. மடமை மடிக. சுயநல மொழிக, பொதுநலஞ் செழிக்க. விலைவாழ் வழிக, விடுதலை கனல்க. வீரம் நிமிர்க, அச்ச மொழிக. அகந்தை வீழ்க. வண்மை தழைக. வாழ்வெலாம் உனது வாய்மையூற் றுறுக. இயலின்பக்கடவுளே, காத்தருள்.

## 37. வாழ்க

தூயர் வாழ்க, கடவுளைத் துலக்குவர். சத்தியர் வாழ்க, தருமங் காப்பர். நல்லோர் வாழ்க, நன்மை புரிவர். சாந்தர் வாழ்க, சக்தி பெறுவர். மாதவர் வாழ்க, மங்கலஞ் செய்வர். அறவோர் வாழ்க, ஆருயிர்க் கினியர். அறிஞர் வாழ்க, அகவிரு ளொழிப்பர். வித்தகர் வாழ்க, விண்ணர சாளுவர். தீரர் வாழ்க, தேவராவர். வீரர் வாழ்க, வேதனை தீர்ப்பர். அன்பர் வாழ்க, அருட்பணி வெல்வர். சுதந்திரர் வாழ்க, துன்ப மொழிப்பர். ஈகையர் வாழ்க, இரவை யொழிப்பர். சமரசர்

வாழ்க, சண்டை யொழிப்பர். யோகியர் வாழ்க, உள்விழி திறப்பர். ஆண்டவன் அருளால் அனைத்தும் வாழ்க!

## 38. தியானம்

உண்மையாய் உள்ளாய்; அறிவாய் விளங்குகிறாய்; இன்பமாய் விளையாடுகிறாய்; உயிர்க்குயிரே, உலகவடிவே, பலவாய் விரிந்த ஒன்றே, உள்ளந்தோறும் ஒளிருஞ் சுடரே, மன மொழி கடந்த மாண்புக் கடவுளே, பெயர்வடிவ பேதங் கடந்த சுதந்திரப் பொருளே, சுத்த சச்சிதானந்தனே, துரிய பரிபூரண நிறைவே, உன்னை உணர்வாற் கலந்து நிற்கிறோம். அதுவே தியானம். உள் வழிபாடே தியானம். உலகம் உனது கோயில். ஆருயிர்கள் உனது திருமேனி. ஆருயிர்ப் பணியே எமது புற வழிபாடு.

## 39. வணக்கம்

எங்கும் நிறைந்தவனே, எல்லாம் ஆனவனே, அன்பு மயனே, அறிவுச் சுடரே, இன்ப வெள்ளமே, அருட் கதிரவனே, வணக்கம். ஐந் தொழிலாளியே வணக்கம். எத் தொழிலும் இல்லாத முத்தனே வணக்கம். சக்தியால் அனைத்தையும் ஆக்கியளித்துத் தாக்கற் றிருக்குந் தனி முதலே வணக்கம். மனச்சாட்சியாகப் பேசி எம்மை நடத் தும் நீதியரசே வணக்கம். சாதிமதம் சாத்திரம் கோத்திரங் கடந்த சர்வசமரஸப பொருளே வணக்கம். தத்துவங் கடந்த சத்தியப் பொருளே வணக்கம். அறிவாய் விளங்கும் இறைவா வணக்கம், வணக்கம்!

நூல் 1. ஆர்வக்கனல்

முற்றிற்று.

---

# நூல்—உ

## தினசரி

---

(1) அன்பனே பொழுதைப் பொன்னுக்கு. ஒரு நிமிஷங் கூட வீணுக்காதே. யோசித்துப் பார். நாளைக்கு 24 மணி நேரம். அதில் சுமார் 8-மணி நேரம் இளைப்பாறலாம். தேகப்பயிற்சி செய்ய, குளிக்க, துவைக்க, உண்ண வுடுக்க, 4 மணி நேரம் வைத்துக்கொள். வயிற்றுப் பிழைப்பிற் காகத் தொழில் புரிய 8-மணி நேரம் போகட்டும். இந்த 8 மணி நேரத்தைப் பெண்கள் வீட்டுவேலைகளிலும், ஆண்கள் வெளியே சென்று கச்சேரி அல்லது தொழிற்சாலைகளிலும் கழிக்கலாம். மீதி 4-மணி நேரம் உள்ளது. அதை வீணுக்காதே. அறிவுப் பயிற்சியிலும், ஆன்மப் பயிற்சியி லும் அதைச் செலவிடு. மனச்சாட்சியைக் கேள். காலை அரை மணி, மாலை அரை மணி, தியானி.

(2) இன்றளவில் எத்தனை நாட்கள், எத்தனை மணிகள், எத்தனை நிமிடங்கள் உனது வாழ்வில் கழிந்துபோயின! இந்த ஓட்டைக் குடத்தினின்று துளித்துளியாக உனது ஆயுள் வெளியேறிச் செல்லுகிறது. போனது வராது!

(3) உனது உள்ளத்திலேயே குடிகொண்டிருக்கும் ஒரு சுகப்பொருளை, சுத்த முக்த சமத்வானந்தப் பரம்பொருளை மனங் குவிந்து நினைக்க நாளைக்கு ஒரு மணி நேரம் கிடைக்க வில்லையா? வெட்கம்! வெட்கம்!

(4) காலை 5-மணிக்கு எழுந்திரு. குச்சிபோட்டுப் பல் விளக்கு; நாக்கையும் மூக்கையும் நன்றாக சுத்தம் செய். நாக்கு நாறினால் சிக்கு. ஒரு பஞ்சபாத்திரம் குளிர் நீர் குடி. தனியாக வெளியே புறப்படு; பொன்னும் பச்சையும் குலுங்

கும் இளங் காலையில் நல்ல காற்றை உட்கொண்டு சுமார் ஒரு மைல் தூரம் உலாவு. இதனால் குடல் சுத்தியாகும். உலாவுமிடத்தில் வரி, குளம், ஆறு, கிணறு இருந்தால் தேய்த்துக் குளி. தும்பைப் பூ மாதிரி ஆடையைத் துவைத்து உலர்த்தி உடுத்து.

(5) சூரியோதயத்தின் முன்னே மனமடங்கி பத்மாஸனத்தில் உட்காரு; உலகையெல்லாம் உனது உடலாக பாவித்துக் கொள்; சூரியனை உனது ஆத்மாவாக பாவித்துக் கொள்; கண்ணை மூடு.

(6) 'உலகம் பஞ்சபூதத் தோற்றம். இவ்வுடலும் பஞ்சபூதப் பஞ்சரம். இந்த ஊன்குடில் எதனால் உயிர்க்கிறது? ஆம், உள்ளே ஒரு உயிர் அசைகிறது. அது உள்ளத்தில் 'படக்,' 'படக்' என்று அடிக்கிறது. இந்த தேகேந்திரத்திற்கு இதயமே சக்தி நிலயம். அதில் ஒரு சுத்த சக்தி கனலுகிறது. அதனால்தான் நான் அசைகிறேன், உணர்கிறேன், நுகர்கிறேன், மொழிகிறேன், நினைக்கிறேன். அதில்லாவிட்டால் இவ்வுடல் பிணம், இவ்வுடலிலிருந்து "நான், நான்" என்று பேசுவது அதுவே. அதுவே எனது உண்மை. அதில் அடங்கியிருப்பதே சுகம். சீ, மனமே, என்னைச் சந்திக்கிழுக்காதே; போ உள்ளே; எனக்கு அடங்கு. நான் ஆன்மா. இதோ உள்ளத்தில் உள்ளேன்!' என்று உள்ளே மனத்தை யிழுத்து உள்ளத்தில் இருத்து.

(7) 'நானா செய்தேன்! நான், யார் தெரியுமா?' எனும்போது எங்கே கை வைக்கிறாய்? அதுதான் உள்ளம். அங்கேதான் ஆன்ம தேவதை யுள்ளது.

(8) உன் உடல் கோயிலானால் உள்ளம் சந்நிதி ஆகும். அதில் ஆத்ம தேவதை குடியிருக்கிறது. அந்த சுத்தான் மாவை நீ, 'கடவுள்' என்று அழைத்தாலும் சரி, 'சிவன், விஷ்ணு, அல்லா, அப்பா, அம்மா, சகி, குழந்தை' என்று பாவித்தாலும் சரி, அது உன் வழக்கத்தைப் பொறுத்தது. ஆனால் இந்த நாமரூப பேதங்களைப் பாராட்டிச் சண்டை போடாதே; சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் சிண்டு முடிக் காதே.

(9) ஒரு மணி நேரம் ஆத்ம விசாரத்தில் ஏகாந்தமா யிரு. வீட்டில் சௌரியப்பட்டால் தனியான அறையில் விளக்கேற்றி மலரால் அலங்கரித்து மேற்கூறியவாறு தியானி.

(10) இது முடிந்ததும், அத்யாத்ம நூல்கள் ஏதாயினும் ஒன்றில் இரண்டொரு பக்கம் படி. அதன் கருத்துக் களையே சிந்தனை செய்து மனத்தில் ஊறிப்போகும்படி செய். இரண்டொரு வாக்கியங்கள்கூடப் போதும்.

(11) இதற்குள் மணி 7½ ஆகிவிடும். பொன்னு வாரம்பூ, கொத்தமல்லி, இஞ்சி, நார்த்தம் இலை—நாலும் போட்டு கஷாயமாக்கி, அதில் பனங்கற்கண்டு போட்டு, பால் விட்டுக் காலையில் சாப்பிட்டால் நல்லது; பித்தத்தைத் தணிக் கும். வாயுவைச் சமப்படுத்தும்: ஏதேனும் நல்ல கனிகள் உதவும். மற்றப்படி மாவும், பணியாரமும், காப்பியும் போட்டு கெட்டித்தால் வயிற்றப்பருக்குக் கோபம் வரும்; அஜீரணம், மந்தம், வாயு, பித்தங்களைக் கிளப்பி உபத்திரவப் படுத்துவார். வரிச்சுமைக்கும் வயிற்றுச்சுமைக்கும் வலுத்த புரட்சியே பலன்.

(12) சாப்பிட்டதும் சுமார் 15 நிமிஷம் இளைப்பாறு. * ஜபமாலையிருந்தால் இஷ்ட மந்திரத்தை அப்போது ஜபிக்கலாம். பிறகு உனக்குரிய தொழில் முறையில் ஈடுபட்டிரு; அதில் சோடை போகாதே; தொழிலைக் கருத்தூன்றி சிரத்தையாகச் செய்; விசுவேஸ்வர பூஜையாகச் செய்.

(13) வீடு திரும்பியதும் சுமார் 10 நிமிஷம் வெயிலில் உலாவு. ஒரு சூரியனால் உலகம் நடக்கும் அற்புதத்தைக் கவனி. வேர்த்ததும் உடலை நன்றாகச் சுத்தம் செய். ஜபமாலையில் இஷ்டமந்திரத்தை 100 தரம் ஜபித்துச் சாப்பிட உட்காரு.

(14) மணி 12-க்குத் தாயாரும் தரும பத்தினியும் சமைத்த அமுதை மகிழ்ந்து சாப்பிடு. சாப்பாட்டில் சுசி ருசி, ஆசாரம் வேண்டும். வாய்க்கும் மனத்திற்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. சாதம், காய்கறி, கனிகள், பருப்பு, தயிருடன் நன்றாக இருந்து மென்று சாப்பிடு. சாப்பிடும் போது பேசாதே.

(15) சாப்பிட்டதும் அரைமணி எந்த வேலையும் வேண்டாம்; நிம்மதியாயிரு; சங்கீதம் கேட்கலாம் பாடலாம். பிறகு தொழில் முறையை ஊன்றிக் கவனி.

(16) மாலையில், காலை செய்தது போலவே வெளியில் உலாவி வரலாம், அல்லது தேகப்பயிற்சிக்காக விளையாடலாம்.

---

* மனத்தை ஏகாக்கிரப்படுத்த மந்திரம் பயனும்; சத்தம் பிறக்கும் இடமே ஆன்மா வுள்ளது. பொருளறிந்து மந்திரம் ஜபிக்கவேண்டும். மந்திரம் சுருக்கமா யிருக்கவேண்டும். ஓம், ஓம் தத்ஸத், தத்வமஸி, சுத்தோஹம், ஓம் சுத்த சக்தி, நமசிவாய, சிவோகம், நமோ நாராயணாய, ஹரிஹி ஓம், ஓம் சக்தி, ஓம் ஹ்ரீம் ஓம், ஸோஹம், ஹம்ஸஸ் ஸோஹம், முதலியன நல்ல மந்திரங்கள்.

(17) மணி $6\frac{1}{2}$-க்கு அஸ்தமன சூர்யன் முன்பு சுமார் அரை மணி உட்கார்ந்து ஆதித்யத்யானஞ் செய். சூரியனைக் கடவுளின் பிரதிநிதியாக பாவித்து நாட் கணக்கை அவனிடம் ஒப்புவி.

(18) 7-மணிக்கு வீடு திரும்பு. கை கால்களை சுத்தம் செய்துகொண்டு, குடும்பம் முழுதும் சுமார் அரை மணி நேரம் பஜனை செய்யட்டும்; மஹான்களின் அருள் வாக்குகளை இணைசேர்ந்து பாடுக. பிறகு இரவில் பசிக்குத் தக்க உணவை நிலைமைக்குத் தக்கபடி சாப்பிடலாம். அதன் பின் 15 நிமிஷம் 'ஹாயாக' இரு. பிறகு கல்வி, கலை வளர்ச்சிக்கு வேண்டியதைச் செய்யலாம்.

(19) இரவு 10-மணிக்குக் குடும்பம் முழுதும் ஒருங்கே கூடி, அன்று விவகாரங்களைப் பேசி, நாளைச் செய்யவேண்டியதைத் தீர்மானிக்கட்டும். பிறகு 15 நிமிஷம் நிம்மதியாக எல்லாரும் மனங்குவிந்து இதயத்தில் தியானித்து உறங்கலாம். இது, சுலபமாகச் செய்யத் தக்கதே. நாளடைவில் பலன் காணலாம்.

(20) பெண்கள் காலை $4\frac{1}{2}$ மணிக்கே எழுந்து வீட்டைச் சுத்தம் செய்து, பாத்திரங்களை விளக்கி, பிறகு தேக சுத்தி செய்துகொண்டு, பூஜையறையில் விளக்கேற்றி, ஜப மாலையில் 500 தரம் இஷ்ட மந்திரத்தை ஜபித்து வீட்டுக்காரியம் தொடங்கலாம். கணவன் வந்ததும் சுமார் 10 நிமிஷம் இருவரும், தனியே பரிசுத்தமாக அமர்ந்து தியானம் செய்தல் நல்லது. காலை யுணவு ஆனதும் பாத்திரங்களை உடனே கழுவி வைத்து, அரை மணி நேரம் ஓய்வெடுத்துக் கொண்டு பிறகு மத்யான்ன போஜனம் தயாராக்கவேண்டும். அடுப்புக் காரியம் செய்யும்போதே அருள் வாக்குகளைப் பாடலாம். நம் வீட்டில் வயது சென்ற பெண்டிர் அவ்

வாறு பல இனிய வேதாந்தப் பாட்டுகளைப் பாடிக்கொண்டே சமைப்பர். அந்த உணவு அமுதமாகும்.

(21) நாலைந்து பெண்கள் இருக்கும் வீட்டில் குடும்ப வேலையைப் பகிர்ந்து செய்யவேண்டும். மாட்டுப் பெண்—மாமியார் சண்டைக்கு அடுப்பங்கரையிலே தான் துவஜாரோகணம் நடக்கும். ஆதலால் இங்கிதம் அறிந்து, ஒருவர் உடல் நிலைமையை மற்றவர்கள் கவனித்து அதற்குத் தக்கபடி வேலையைப் பகிர்ந்து பொறுத்தால் நல்லது.

(22) "அத்தை நான் இன்று சமைக்கிறேன்; நீங்கள் தண்ணீர் கொண்டுவாருங்கள்; மீனாக்ஷி, நீ இன்று முற்றத்தைப் பெருக்கிப் பற்று விளக்கு; நான் அடுப்புக் காரியத்தை கவனிக்கிறேன். காமு, நீ குழந்தையைப் பார்த்துக்கொள்; நான் அடுப்பைப் பார்த்துக்கொள்ளுகிறேன். சீதா, நீ வயிற்றுப் பிள்ளைக்காரி;சிரமப்படாதே; அப்படி உட்கார்ந்து பக்தவிஜயம் படி; இல்லாவிட்டால் பாடு. கேட்டுக்கொண்டே நான் காரியம் பார்க்கிறேன். நீலு, தலைவலித்தால் படுத்துக்கொள், இதோ உனக்கு பற்றுப்போடுகிறேன்" என்று இவ்வாறு சமயா சமயந்தெரிந்து அன்பு ஆதாரவாயிருந்தால் ரவிக்கை ராஜ்யத்தில் (Petticoat government) நடக்கும் யுத்தத்தை எளிதாகத் தடுக்கலாம். "செய்யட்டுமே, சுமக்கட்டுமே, கழுந்து மாதிரி என்ன வேலை......!" என்றெல்லாம் மாற்சரியப்பட்டால் வெருகும், கோழியும், முட்டுக்கடாவும், மதயானையும், வெறிநாயும்போலக் குடும்பம் கலகஞ் செய்யும்.

(23) ஆகாயத்தில் அத்தனை தாரா மணிகள் சந்திரனுடன் குடித்தனம் செய்கின்றனவே; ஒரு பேச்சு மூச்சுண்டா! பெண்மணியே, அதுபோல நீ குடும்பத்தில் வாழு.

நீ வீட்டிற்கு அரசி. உன் அரசாங்கத்தில் அழகும், இன்பமும், அமைதியும் விளங்கச் செய். நீ வீட்டிற்கு லக்ஷ்மி என்பதை நினை.

(24) மத்யான்ன போஜனம் ஆனதும் சுத்தி செய்து, அரை மணி நேரம் ஓய்வுகொண்டு, பிறகு பழைய அல்லது புதிய தர்மஸாதன நூல்களையும் கதைகளையும் அவரவர் மனோ தர்மத்திற்குத் தக்கபடி படிக்கலாம். நாட்டு வளப்பங்களை விசாரிக்கலாம். ஒரு பெண் படித்து மற்றவர்கள் கேட்கலாம். அல்லது புதிதாக ஏதேனும் கற்கலாம். நல்ல பாட்டுக்களை ஒருவர் சொல்லத் திருப்பிச்சொல்லி மனனஞ் செய்யலாம்.

(25) $4\frac{1}{2}$ மணிக்கு, வீட்டிற்கு வேண்டிய சாமான்களைக் குறித்து கணவனிடம் தரலாம். பிறகு வீட்டுவேலை, வீடு சுத்தம், பாத்திர சுத்தம், படுக்கையறை சுத்தம் செய்து இரவுக்கு வேண்டியதைத் தயார் செய்க: 6-மணிக்கு உடம்பைச் சுத்தம் செய்துகொண்டு ஜபம். கணவன் வந்ததும் 15 நிமிஷம் தியானம். பிறகு பஜனை—சாப்பாடு. சாப்பிட்டதும் நல்ல விஷயங்களைப்பற்றிப் பேசல், படித்தல், கற்றல். பிறகு படுக்கை. பெண்மணியே, உனக்கு இப்படி ஒழுங்கு முறையாக வாழுவதில் ஏதாயினும் ஆக்ஷேபம் யுண்டா?

(26) பொதுக் கூட்டங்களுக்குச் செல்லவேண்டுமா? காலையில் வீட்டு வேலை செய்; 5-மணிக்கு இன்னொருவரிடம் மாலை வேலையை ஒப்புவித்து நீ கூட்டத்திற்குச் செல். பெரும்பாலும் கணவனுடன் அவ்வாறு செல்வதே உத்தமம். உன் கண்ணுங் கருத்தும் வீட்டிலேயே இருக்கவேண்டும்.

மற்றதெல்லாம் உபரி. உன்னுல்தான் நாட்டில் வீரர்களும் அறிவாளிகளும் பெருக வேண்டும். வீடு தானே நாடு; கவனி.

(27) இவ்வாறு காலத்தை வீணுக்காது, உடல், உயிர், மனம், அறிவு, கலே, ஆன்ம வளர்ச்சியில் செலவிடு. செய்வதெல்லாம் வழிபாடாகச் செய். அதுவே கர்ம யோகம்.

(28) உன் உள்ளத்தில் ஆத்ம தேவன் உள்ளான். உன் பேச்சு, நடத்தை, நினைப்பு, போக்குவரத்து எல்லாம் அவன் கவனிக்கிருன். அவன் உனது தலேவன். எஜமான் நேரேயிருந்து கவனிக்கும்போது சேவகன் எவ்வாறு காரியம் செய்கிருன்? அவ்வாறு வாழ்வின் பணிகளேச் செய். இன்ஸ்பெக்டர் வரும் நாளில் பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் எந்த மாதிரி அக்கரையாக காரியம் செய்கின்றனர்? அந்த மாதிரி வாழ்வின் வினேகளேச் செய்.

(29) நன்ருக அறிந்துகொள். ஆகாயத்தைப் பார். சூரியன் சந்திரன், நட்சத்திரங்கள், மேகம், இடி, காற்று, மின்னல், வானவில் எல்லாம் ஒரு சக்தியால் ஆடுகின்றன. உன்னுள் இருந்து உன்னே நடமாடச் செய்வதும் அந்த சக்திதான். அந்த சக்தியை ஈஸ்வர சைதன்யம், அல்லது அறிவு என்பர். அதை யோகிகள் எப்போதும் கனல்போல உணர்வார்கள் அதுதான் உன்னிடம் உள்ள கடவுள்; அதுதான் உலகில் உலாவும் கடவுள். அதைப் பலர் பல விதமாக பாவிக்கின்றனர். பாவிக்கட்டுமே. ஆனுல் எல்லாம் ஒரே சுத்தான்மாவைத் தான் குறிக்கிறது. அவரவர் உள்ளத்தில் காணலாம்.

(30) அன்பனே, மீண்டும் சொல்லுகிறேன். பெயர் வடிவு சாதிமதச் சண்டை வேண்டாம். அவரவர் இஷ்ட தெய்வங்களே, இஷ்ட பூஜை செய்யட்டும். எதில் சிரத்தை பிறக்கிறதோ, அதனின்று தொடங்கு. ஆனல் முடிவில் உள்ளக் கோயிலில் ஆத்மதேவதையை வழிபட்டால்தான் இன்பம். மற்றதெல்லாம் அதன் படிகளேயாகும்.

(31) சிவன், கண்ணன், ராமன், உமாபதி, ராதா கிருஷ்ணன், சீதாராமன், லக்ஷ்மீநாராயணன், இல்லல்லா, பரமபிதா, தவோதே என்று எப்படி வேண்டுமென்றாலும் கூப்பிடுக! பொருள் ஒன்றுதான்.

(32) வீட்டில் தாத்தா இருக்கிறார். பிள்ளே 'அப்பா' என்கிறான்; பாட்டி, 'உங்களேத்தானே' என்கிறாள்; நாட்டுப் பெண், 'மாமனர்' என்கிறாள். பேரன், 'தா...த்த்......தா' என்று மடியில் தத்திக் குதிக்கிறான். தம்பி 'அண்ணு' என் கிறான். அண்ணு 'தம்பீ' என்கிறான். பல்லு விழுந்த கொள்ளுப்பாட்டி 'அதே நாவாயணு' என்கிறாள் — ஆள் ஒன்று. முறை பலவிதம். யோசித்துப்பார். அப்படியே ஒரே பொருளுக்குப் பல பெயரிட்டுப் பலவித வழிபாடுகள் நடக்கின்றன.

(33) அதனல்தான் நமது பாரத ரிஷிகள் இஷ்ட தெய்வ ஆராதனேகளே வகுத்தனர். ஒன்றுக்கொன்று சண் டை மூட்டாதே! உனக்கு ஹனுமார் பிடித்தால் அதையே ஆன்மாவாகப் பாவித்து தியானி. சிவன் பிடித்தால் ஆன்மா வைச் சிவனுக தியானி; உடம்பைச் சிவன் கோயிலாக எண்ணு; சுத்தான்மாவில் சிவனே தியானி. பெருமாள் பிரிய மா? உடம்பைப் பெருமாள் கோயிலாக நினே. ஆன்மாவைப் பெருமாளாக தியானி. அல்லா பிரியமா? வா; உடம்பையே

மருதியாக எண்ணு. ஆன்மாவை அல்லாவாகக் கருது. பரம பிதா வேண்டுமோ? வா; உடம்பையே சர்ச்சாகக் கருது. ஆன்மாவைப் பரம பிதாவாகக் கருது. அப்பனே, மூலஸ்தானம் உன் உள்ளந்தான். அது முக்கியம்; எந்தப் பெயர் வடிவில் நீ பாவித்தாலும் ஒன்றுதான்.

(34) பாவனை எப்படிப் பரமன் அப்படி! ஓம், ஓம் சக்தி, ஓம் சுத்த சக்தி, நமச்சிவாய, நமோ நாராயணுய, வாசுதேவ மிதம் ஸர்வம், ராம, ராம, க்ருஷ்ண, க்ருஷ்ண, ஹரி, முருகா, ஷண்முகா, புத்தா, நித்யா, ஸாஹம், ஸோஹம், ஓம் தத்ஸத், தத்வமஸி, அல்லாஹோ அக்பர், பிஸ்மில்லா, பரம பிதாவே வணக்கம், பரமாத்மனே நமஹ ......இன்னும் எத்தனை மந்திரம் வேண்டுமென்ருலும் சரி, குசாலாக உன் மனவிருப்பப்படி ஜபி. ஆனுல் உனக்கு மிகவும் பிரியமான ஒன்றையே ஜபி. ஒன்றை உருவேற்றினுல் அதுவே யாவாய்.

(35) 'அதுவே ஆன்மா' என்ற பாவனையை மட்டும் மறக்காதே. உலகெல்லாம் சுற்றினுலும் வீட்டிலேதான் சுகம்!

(36) உன் வீட்டில் நல்ல விருந்திருந்தால் விலைச் சோற்றிற்கு அலைவாயா? உன் வீட்டில் தங்கம் குவிந்து கிடந்தால் ஊரில் பிச்சை வாங்கப் போவாயா?

(37) அப்பனே; உன்னிடம் சுவர்க்கம் உள்ளது; தெய்வம் உள்ளது. அறி! உட்கண் விழி! வெளிக் கதவைச் சாத்தி உள்ளே புகுந்துபார்! அற்புதத்தை!

(38) அன்பனே, உனக்கு நீயே துணை; உனக்கு நீயே கோயில்; உனக்கு நீயே உலகம்; உனக்கு நீயே தெய்வம்; உனக்கு நீயே இன்பம். நீ ஆன்மா; உடல் கோயில்.

நூல் உ. தினசரி

முற்றிற்று.

---

## நூல்—௫

## சாதன வாழ்வு

---

### உணவை உழைத்துண்க

1. நாம் நமது வறுமையை முதலில் போக்கிக் கொண்டுதான் உலகின் வறுமை தீரப் பாடுபடவேண்டும்; உணவுடைத் தேவைகளுக்கு எவரையும் சார்ந்திருக்கக் கூடாது. உழைத்தே உண்ணவேண்டும் என்பது எமது முதற் கொள்கை.

2. ஒரு அறவோன் (தர்மஸாதனம் புரிவோன்) எவரிடமும் எதுவும் இனமாகப் பெற்றுக்கொள்ளக் கூடாது. யாரேனும் வற்புறுத்திக் கொடுப்பினும், தனது அறிவால், அன்பால், தருமோபதேசத்தால், ஈடு செய்யவேண்டும். ஒரு வீட்டில் அறவோன் சாப்பிடச் சென்றால் வீட்டோருக்கு தர்மஸாதனத்தை ஒரு முறை ஓதிய பிறகே உணவு கொள்ளவேண்டும். ஆதி காலத்தில் நம் நாட்டில் உஞ்சவ்ருத்தி எடுத்தவர்கள் கீதை, அஷ்டபதி, பாடிக்கொண்டே வருவதுண்டு. இது ஒரு அத்யாத்மக் கல்வி தருவதாகும். அதுபோல, வாழ்வின் உயர்ந்த உண்மைகளை மாந்தர்க்கு ஓதி, அவர்கள் எண்ணத்தையும் ஒழுக்கத்தையும் உயர்த்த அறவோர் கடமைப்பட்டுள்ளனர். புத்தர்கால பிக்ஷு ஒரு வீட்டில் உணவருந்தியபின் தருமோபதேசம் செய்துவந்தான். ஒரு நொடிகூட வீண் போகக்கூடாது: நம்மிடை வந்தவர்களெல்லாம் தருமஸாதனத்தை அறிந்து பயிலவேண்டும்.

### அருளறிவே அறிவு!

3. அன்பனே! நமக்கு சாதி மதம், நாடு நகர வேற்றுமை இல்லை. நமது அகராதியில் பிராமணனும் இல்லை;

நீண்டாதானு மில்லை. நமது கொள்கைகள் பழையனவல்ல; புதியனவல்ல; அவை என்றுமுள்ள தருமம்; வேதம், சாதி மதம் ஏற்பட்டதற்கு முன்பே ஆத்ம தருமமிருந்தது. சூரியன் உதித்த அன்றே ஆகாயத்தில் அதற்கொரு வழி ஏற்பட்டுள்ளது.

உயிர்கள் அறிவுத் தொகுதிகள், மாட்டிற்கும் மனிதனுக்கும் வேற்றுமை என்ன? அறிவு! மனித அறிவு ஐம்புலன்களுக்கு மேற்பட்டு ஆறுவது புலனாகிய நுண்மனத்தறிவு. இந்த அறிவினால்தான் நெப்போலியன், மாஜினி போன்ற வீரரும், கம்பன், ஹோமர், ஷேக்ஸ்பியர் முதலிய புலவரும் உலகில் விளங்கினர். இதற்கு மேலே ஒரு அருளறிவு உள்ளது; அதுதான் உண்மையறிவு. இந்த அருளறிவை மனிதனிடம் தூண்டுவதே நமது வேலை. அந்த அறிவு மலர்ந்தால் எல்லாம் எய்தலாம்; ஓதாதுணரலாம்; எதையும் புரியலாம்.

4. இதற்கு நீண்ட யோகசாதனமும் தூய வாழ்வும் வேண்டும். கவலை, கட்டற்ற இடத்தில் இந்த சாதனம் புரியவேண்டும்.

5. ஒரு நல்ல ஆற்றுப்பாசனம்; அதனருகே அழகிய தோட்டம். அதில் தென்னை, மா, பலா, கொய்யா, மாதுளை, வாழை, அப்பிள், தக்காளி, பசுங் காய்கறிகள், கடலைகள், கேழ்வரகு, முதலியன விளைவிக்க வேண்டும். அதற்கு ஏற்றம் போட ஒரு கேணி; உழுது பயிரிட நான்கு மாடுகள்; பாலுக்கு இரண்டு பசுக்கள். மாடு பசுக்களுக்கு மேனாட்டு முறையில் புல் விளைவிக்கவேண்டும். ஆடைக்கு இராட்டினங்கள். ஒரு தறி. நூல்கள் வெளியிட ஒரு அச்சுக் கூடம். இவை வேண்டும்.

தியானம், யோகஸாதனத்திற்குத் தூய மாடியில் அகல மான ஒரு அறை. அச்சு, நூல்களுக்குக் கீழே ஒரு கட்டிடம். நெசவிற்கு ஒரு தனி அறை. சமையல் சாப்பாட்டிற்கு ஒரு தனியறை. இரண்டு வேளை புஷ்டியான உணவு போதும். உணவு நன்றாக இரத்தத்தில் கலக்கக் கூடியதா யிருக்க வேண்டும்.

6. இத்தகைய தயாரிப்புகளுடன் சுத்த நிலயம் தொடங்கவேண்டும்; சுமார் 10-அறவோர் போதும். திட வுறுதியுடன், தருமஸாதனம் செய்வோரே அறவோர். அவர் கள் எதற்கும் எவரையும் எதிர்பாராது, தமது உழைப்பால் தேவைகளை எய்துவர். காலை 3-மணிக்கு எழுந்து, தரும ஸாதனத்தில் ஒரு அத்யாயம் ஓதி, அதே சிந்தையுடன் சிறிது தியானம் செய்வர். 4-மணிக்கு வெளி வாசலுக்குச் சென்று, பல்விளக்கி, தேகப்பயிற்சி, ப்ராணாயாமம் செய்த தும், ஒரு பெரிய தொட்டியில் முறைப்படி இருவர் நீர் இறைப்பர்; எல்லாரும் குளிக்கையில், தண்ணீர் பயிர்களில் பாயும். சிலர் உரங்களைச் சேர்ப்பர்; சிலர் வீடுகளை சுத்தம் செய்வர்; சிலர் அன்று சமையலுக்கு வேண்டியதை எடுத்து வைப்பர்—இது ஒரு மணி வேலை. இதானதும், குளித்துத் தோய்த்து, தூய கோவணமும் ஒரு கதர் துண்டும், மேலே ஒரு துண்டும், குளிர்காலமாயின் ஒரு தடித்த கதர் போர்வை யும் போர்த்து $5\frac{1}{2}$ அல்லது 6 மணிக்கு அனைவரும் அருண னின் செம்முகத்தைப் பார்த்து, ஒரு பசு மாத்தடியில் இனிமையாகக் கருவிகளுடன் அரை மணி நேரம் பாடுவர். எல்லாம் ஆன்மக்கனலை எழுப்பும் பாட்டுக்களே. அஃதான தும் மாடியில் தியானம் ஒரு மணி நேரம்: அப்போது தான் குருவின் சக்தி அன்பர்க்குப் பாயும். அதற்குச் சில சாதனங்கள் உண்டு.

7. தியானமானதும் காலையில் சிறிது பாலும் ஒரு மூலிகையும் உணவு. சமையல் வேலைக்கு இருவர்; தண்ணீர் வடிகட்டல், விறகு வெட்டல், தேங்காய் துருவல், காய்கறி திருத்தல், தானியங்களைக் கழுவல், மண் பானைகளைக் கழுவல், அறையை சுத்தம் செய்தல்; விறகு அல்லது கரியால் தீ மூட்டி, ஒரு பானையில் சோறு சமைத்தல்; மற்றொன்றில் கிடைத்த காய்கறிகள், கடலை, பருப்பு, தேங்காய் எல்லாம் வேகவைத்து, மிளகு, இஞ்சி, எலுமிச்சம்பழம் சேர்த்து இறக்குதல். இதுதான் சமையல். இது புஷ்டியான உணவு. பத்து மணிக்கெல்லாம் சமையல் முடியும்; உடனே மணியடிக்கும். அதற்குள் சிலர் அச்சு வேலை, எழுத்து வேலை, தோட்டப் பயிர் வேலை, வீடு கூட்டும் வேலை, வெளியே போய் வாங்க வேண்டியவற்றை வாங்கி விற்க வேண்டியவற்றை விற்றுவரும் வேலை—முதலிய பல வேலைகளில் ஈடுபட்டிருந்து 10-மணிக்குச் சரியாக வந்து சேருவர். உடனே எல்லாரும் 15-நிமிஷம் சூரியன் கதிரில் முறைப்படி குளிப்பர்; வேர்த்தவுடன் மீண்டும் குளித்து தியான அறை சேருவர். அங்கு மலர்களும் நறுமணமும் கமழும். தியானம் 15-நிமிஷம்; தருமஸாதனம் 15-நிமிஷம். அஃதானதும் எல்லாரும் வட்டமாக உட்கார்ந்து இலைகளைப் பரப்பி மெதுவாக உண்ணல்; ஒருவர் மட்டும் முன்னே உண்டு, புனித நூல்களை ஓதிக்கொண்டேயிருப்பர். மற்றோர் அதையே கேட்டுக்கொண்டு வேறு பேச்சின்றி மௌனமாக, நிதானமாக உண்பர். உணவின் பின் எழுந்து, நன்கு வாயலம்பி, பல் விளக்கி, நாவைத் தூய்மை செய்து அவரவர் விடுதிக்குச் சென்று 15 நிமிஷம் அமைதியாயிருந்து நூற்கத் தொடங்குவர்; நாளைக்கு அரை மணி நூற்றால் ஆடைக்குப் போதும். நூலை உடனே தறி நெய்யும் சாதகனிடம் அனுப்புவர்.

மாதம் ஒரு முறை எல்லாரும் ஆஸ் போட்டுப் பாவு விரித்து செய்யத் துணை புரிவர். மீதி நாளெல்லாம் நூற்பர்.

8. மதியம் 1 மணி முதல் 2 மணி மட்டும் தமிழ்ப் பாடம்; 2-முதல் $2\frac{1}{2}$-மட்டும் ஆங்கிலம்; $2\frac{1}{2}$-முதல் 3-மட்டும் பிறமொழிப் பயிற்சி. 3-4 கலே, தொழில் சாத்திரப் பயிற்சி. 4-$4\frac{1}{2}$ மேதாவிகளின் நூல்களே ஆராய்தல். $4\frac{1}{2}$-$5\frac{1}{2}$ மட்டும் தோட்டம், தறி, வேறு தொழில்கள். வீண் பேச்சுக் கூடாது. $5\frac{1}{2}$-6 தொட்டி ஸ்நானம். 6-$6\frac{1}{2}$ குளித்து உடனே மேல் மாடியில், மேற்கே அந்திஅழகைப் பார்த்து, இறைவன் அருளே வணங்கி அரை மணி தியானித்தல். உடனே கீழிறங்கி, பழம், கடலே, பால் முதலிய இயலுணவுகளே அருந்தல். $7\frac{1}{2}$ மணி முதல் 8 மணி வரையில் விளக்கின் முன் மலர்களே அழகு செய்து, பாட்டால் வழிபடுதல். 8-9 சுத்தோபதேசம்—புதுயுக நினேப்பும், புது இலக்கியமும், புதுயுக எண்ணமுமே வேண்டும். 9-$9\frac{1}{2}$ மட்டும் இரவின் அழகில் இறைவனேத் தியானித்தல். $9\frac{1}{2}$ முதல் 10 மணி மட்டும் எல்லாரும் குருவின் முன் கூடி அன்று செய்த வேலேகளேயும், பிழைகளேயும் கூசாமல் சொல்லல்; அவரவர் குறைகள், வேண்டுகோள்களேச் சொல்லி பரிகாரம் தேடல். அதன் பின் நாளே வேலேகளே அணிவகுத்தல். அறவோர் களுள் ஏதாயினும் மனத்தாங்கல் ஏற்பட்டால் உடனே விசாரித்துத் தீர்த்து அன்பு உண்டாக்கல். 10-மணிக்கு பூகோளம், வான நூல், சரித்திரக் கதைகள் சொல்லிக் கொண்டே இங்குமங்கும் உலாவல். $10\frac{1}{2}$ மணிக்கு பலகை மீது பாய் பரப்பி 25 நிமிஷம் தியானித்து இடது பக்கமாக தனித்தனி உறங்கல். உறங்கு முன் தினசரிக் குறிப்பு எழுதவேண்டும். மீண்டும் 3-மணிக்கு எழுந்திருத்தல், இத்தகைய வாழ்வினல் ஆத்ம தீரராகலாம். அறிவும்,

உடலும், உள்ளமும், ஆன்மாவும் வளர்ச்சியடையும். போதுமான ஓய்வும் உழைப்பும் இதில் உண்டு. இதுதான் அறவோர் சாதனம்.

9. அறிவு இயல்பாக மலரவேண்டும். தியானத்தால் புலமை உண்டாகும். ஒவ்வொருவரும் ஒவ்வொன்றில் மேதாவியாகித் தமது புலமையை இறைவன் பணிக்கே அர்ப்பித்தல் வேண்டும். எல்லாரும் இறைவனிடமே ஈடுபட்டிருத்தல் வேண்டும். ஒருவரையொருவர் 'ஓம் சுத்த சக்தி' என வணங்கும்போது உடலையன்று—உடலிற் கோயில் கொண்டவனை வணங்கவேண்டும்! போலி வணக்கங்கள் ஒழிக! அன்பினால் ஒருவரை யொருவர் அணைக!

நூல் ந. சாதன வாழ்வு

முற்றிற்று.

---

நூல்—சு

## ஸாதன மலர்கள்

---

### 1. போதியடியில்

"தோன்றும் உலகில் எல்லாம் மாறும், அழியும். எதற்கும் இங்கு நிலையில்லை. இந்தப் பஞ்சபூதக்கூடும் அழியும். இதன் வாழ்வு துன்பக் கனவாயிருக்கிறது" என்றார் புத்தர். துன்பம் எதனால்? உண்மையறிவின்மையால். மனிதனுள் இரண்டு நான்—கள் உள்ளன. ஒன்று ஆசையாணவத்துடன் உலகப்பொருள்களைப் பற்றும் நான். இதுவே எல்லாத் துன்பங்களையும் தருவது. மற்றொன்று, கட்டின்றி பந்தபாசமின்றி, சுதந்திரமாக விளங்கும் நான். இது உள்ளத்தில் ஆழ்ந்து உள்ளது. இதுவே நமது உண்மை!

### 2. மோக மொழிக

உண்மையறிக! பொய் விலக்குக! அழியும் உடலில் அழியாதுள்ள உண்மையை நம்புங்கள். பசி தீர்வீர், தாகந் தணிவீர், இருளொழிவீர், ஒளிபெறுவீர், அச்சமொழிவீர். தீராவீர், துன்பொழிவீர்! இன்புறுவீர்! அழிபொருளை விடுத்து, அழியாப்பொருளை அடைமின்! அழியாப்பொருள் சுத்தான்மா. அதுவே ஒவ்வொருவரின் உண்மையும் ஆகும், அதற்குப் பிறப்பில்லை, இறப்பில்லை. அது என்றும் உள்ளது. அதுவே அறிவு. உண்மைய்றிவால் மோகமொழியும், இன்பம் பொலியும், அமைதி நிறையும், கட்டொழியும், முத்தி யெய்தும். உண்மையே வெற்றி!

## 3. உள்ளுண்மை

பார்க்கிறேன், கேட்கிறேன், சுவைக்கிறேன், உயிர்க்கிறேன், நினைக்கிறேன் எனும்போது, பார்ப்பது, கேட்பது, சுவைப்பது, உயிர்ப்பது, நினைப்பது யார்? சிந்தனை செய், ஒரு பிணத்திற்குக் கண் உள்ளது. பார்க்குமா? காதுள்ளது கேட்குமா? நாக்குள்ளது சுவைக்குமா? மூக்குள்ளது, உயிர்க்குமா? மூளைச் சதையுள்ளது, நினைக்குமா? காலுள்ளது நடக்குமா? இந்த அவயவங்களையெல்லாம் உள்ளிருந்து வதோ ஒன்று இயக்குகிறதல்லவா? அதுவே நான் என்னும் பொருள். அதுவே சுத்தான்மா. எத்தனை பேசும்படச் சுருள்களும், திரைகளும், பொறிகளும் இருந்தாலும் பயனென்ன? மின்சக்தி யிருந்தால்தானே இவை இயங்கும்? உடலை யியக்குவது உள்ளுண்மை.

## 4. வினை

கூட்டில் கிளிபோல ஐம்பூத வினைக்கூட்டில் சுத்தான்மா உள்ளது. ஆசைக்கதவு கூட்டை அடைத்துக்கொண்டுள்ளது. நான் கூடல்ல. நான் கட்டற்ற சுதந்திரப் புள். எனக்கு உண்மை, அறிவு என்னும் சிறைகள் உள்ளன. அவற்றால் எல்லையற்ற விண்ணில் யான் உலாவுவேன்; இருக்கிறேன், இருந்தேன், இருப்பேன் என்றில்லாது நான் காலத்தை வென்ற நித்தியப்பொருள். இந்த மாயக்கூடு இடையில் வந்தது. முன்வினைக்கேற்றபடி. இவ்வாழ்க்கை அனுபவங்கள் அமைகின்றன. பிறவிக்கு வித்து வினை. ஆசையால் வினை; வினை காரணம், பிறவி காரியம்.

## 5. 'எனது, யான்'

எனது யான் என்னும் தனியகந்தையே துராசைக்குக் காரணம். துராசையால் பாபமும் பந்தமும் வரும். மோகப்

பசி கனலும். புலன்களால் எய்தும் எல்லாச் சுகங்களையும் அனுபவித்தாலும் இந்த மோகப்பசி தணியாது. குண்டோ தரன்போன்று கொடுப்பதெல்லாம் விழுங்கி, "இன்னுங் கொண்டு வா" என்னும் மோகப்பசி. மனத்தைக் கட்டவேண்டும். 'எனது, யான்' என்னும் தனியகந்தையொழிய எல்லாவுயிர்களையும் தானாகப் பாவிக்கவேண்டும். சுயநலந்தவிர்த்துப் பொதுநலம் பேணவேண்டும். எல்லாவுயிர்களும் இன்புறத் தொண்டு செய்யவேண்டும்.

## 6. தரும ஸாதனங்கள்

நல்லறிவு, மனத்தூய்மை, மனவமைதி, நல்லுறுதி, இன்சொல், நற்பணி, நற்றொழில், நன்னினைவு, நல்லோர் கூட்டம், நன்முயற்சி, அன்பு, ஈகை, இரக்கம், அஹிம்ஸை, ஒப்புரவு, சுசிருசியான மிதாகாரம், நன்னூற்பயிற்சி, பெரியார் சேவை, மௌனம், தியானம்—ஆகிய தருமஸாதனங்களால் மனம் அடங்கும்; புலன்கள் வசமாகும்; வாழ்வு தூய்மையுறும், ஆசாபாசங்கள் ஒழியும், தனியகந்தை தணியும்; மடமை நீங்கும்; கட்டுகள் விடுபடும்; வாய்மை துலங்கும்; தன்னைப் போலவே மன்னுயிரை மதிக்கும் கருணையும் நேயமும், அருளும் உண்டாம். தன்னலவகந்தை யின்றேல் இன்னலில்லை, பந்தமில்லை, இன்பமுண்டாம்.

## 7. மின் சக்தி

கோடிக்கணக்கான மின் விளக்குகள் உள்ளன. அனைத்திற்கும் ஒரு மின்சக்தியால் ஒளி வருகிறது. ஒளி தூய வெண்ணிறமே. விளக்கின் கண்ணாடி எந்த நிறமோ அதன்படி ஒளியும் நிறம்பெயர்ந்து காட்டுகிறது. நிறம் ஒளியிலில்லை; கண்ணாடியிலேதான் உள்ளது. விளக்கின் உடல்கள் மிகப்பல. ஒளி ஒன்று; மின்சக்தி ஒன்று. மின்சக்தி

எப்போதும் உள்ளது. நம் வீட்டில் விளக்கெரிந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, மின்பொறிகளே இல்லாவிட்டாலும் சரி, மின் சக்தி இயற்கையில் பரந்து விரிந்துள்ளதல்லவா? அதுபோல, தெய்வசக்தியும் எங்கும் உள்ளது. அந்தக்கரண மாகிய யந்திரத்தில் அன்பு உண்மையுடன் கூடிய, தியானக்கம்பிகளை யிணைத்து, ஆர்வமாகிய பொத்தானை அழுத்தினால், நிலைப்பான இதயக்குமிழில் தெய்வச்சோதி துலங்கும்.

## 8. சூட்சுமப் பொருள்

கடவுள் இல்லை யென்பர் சிலர். அவர்கள் புலன் களாற் கண்டதே காட்சி யென்பர். அவர்களுடன் வாதாடி வீண்காலம் போக்காதே. ஒன்றுமட்டும் நினைப்பூட்டு. அப்பனே, உடலுக்குள் ஏதோ ஒன்று உள்ளது. உடல் பிணமானால் வாய், மெய், கண், மூக்கு, செவிகளெல்லாம் இருந்தாலும் அவற்றிற்குரிய உணர்வில்லை. பிணம் நாறிப் புழுத்து மண்ணாகிறது. ஏதோ ஒன்று உள்ளேயிருந்தல்லவா வாயால் உண்கிறது, நாவால் நவிலுகிறது, மூக்கால் மூகரு கிறது, காலால் நடக்கிறது. ஏதோ ஒன்று நெஞ்சில் துடிக்கிறது. உறக்கத்தில் சவம்போல வீழ்ந்துகிடக்கும் போதும் கனவுகாண்பது எது? உன்னுள் தூலத்திற்கப்பால் உள்ள ஒரு சூட்சுமப் பொருளல்லவா அப்படிச் செய்கிறது? அப்பொருள் இருந்தால் ஆள். வெளியேறினால் பிணந் தானே? அந்த சூட்சுமப் பொருளை நீ நம்பியே தீரவேண் டும். நமது புலன்களுக்கும், மனத்திற்கும் எட்டாத ஒன்று உடலில் இருக்கிறதென்று அறிகிறாய். அதை எந்தப் பெயரிட்டுவேண்டுமானாலும் அழைத்துக்கொள். அது, அவன், அவள் என்றாலும் சரி, சக்தி, இயற்கை, உயிர்,

ஆன்மா என்றாலும் சரி, பெயரால் பொருளின் தன்மை குறையாது. இந்தியில் மூக்கிற்குப் பெயர் நாக்: எனில், மூக்கு நாக்காகாது.

## 9. உலக விவகாரம்

"கடவுள் உலகைப் படைத்தாரா, உயிரைப்படைத் தாரா?" என்று சிலர் சரமாரியாகக் கேள்வி போடுவர். "உலகைக் கடவுள் படைத்தால் கடவுளைப்போலவே அது இன்பமாயிருக்கவேண்டுமே, பூரணமாயிருக்கவேண்டுமே. ஏன் உலகம் துன்பக்காடாயிருக்கிறது? சர்வசாந்திமானான கடவுள் படைத்த உலகம் ஏன் கடும் போர்க்களமாயிருக் கிறது? முழுமுதல் தலைவன் இருந்தபடியிருக்கிறானே. அவனுக்கு உலகைப்படைத்து சமுசாரம் நடத்தவேண்டிய அவசியமென்ன? இப்படி உலகையும் ஒன்றையொன்று கொன்று தின்னும் உயிர்களையும் இன்ப துன்பங்களையும் ஏன் அவன் உண்டாக்கவேண்டும்? வேறு வேலையில்லையா அவனுக்கு?" என்று சிலர் கேட்பர். அமைதியாகச் சிந்திக்கச் சொல்லு. கடவுள் படைக்கவில்லையென்றே வைத்துக் கொள்ளுவோமே. வேறு யாதாவது ஒன்றுதானே இயற்கை யுலகை ஆக்கியிருக்கவேண்டும்? ஆண் பெண் சேர்க்கையால் நான் பிறந்தேன். அதேமாதிரி நான் ஒரு குழந்தையும் பெற்றேன். நானே படைத்தவன்; கடவுளில்லை என்கிறாயா? சரி, உன் குழந்தை இறந்துவிடுவதாக வைத்துக்கொள். குழந்தையைப் படைத்ததாகக் கூறும் நீ அதற்கு உயிர் கொடுத்து எழுப்பிக்காட்டு; பார்ப்போம்.

## 10. நீயா உண்டாக்கினாய்?

அப்பனே, இந்த மலையை நீயா உண்டாக்கினாய்? இந்தக் கடலை நீயா நிரப்பினாய்? இக் கதிரவனை நீயா எழுந்து

விளங்கச் செய்தாய்? இந்த விதைகளை நீயா ஆக்கினாய்? இந்தக் காட்டை நீயா வளர்த்தாய்? மரஞ்செடிகளுக்கு வித வித நிறப்பூவும், கனியும், சுவையும் நீயா ஈந்தாய்? மாவைப் பலாவாக்குவாயா? நான் செடி நட்டேன், இதோ மலர் என்கிறாயே! மண்ணில்லாது நீ செடி நடுவாயா? தண்ணீரில்லாது வளர்ப்பாயா? அவ்வாறு நீ இயற்கையான விதை, தண்ணீர், மண், காற்றில்லாது ஒரு செடியை வளர்த்து, ஒரு மலரை மலர்த்தி, ஒரு கனியைக் கனிவித்துக் காட்டு பார்ப்போம்.

## 11. நுண் பொருள்

அப்பனே, நீ பிறக்குமுன்னே உலகம் இருந்தது, மலையிருந்தது, தாய்தகப்பன்மார் எத்தனையோ பேர் இருந்தனர் அல்லவா? அவர்களை நீ படைக்கவில்லையே. ஒரு பெண்ணின் உடலையும், ஒரு ஆணின் உடலையும் பொருத்தினாற்போல சிருட்டித் தொழில் நடக்குமா? பெண்ணில் உயிராக உள்ள ஒன்று, ஆணில் உயிராக உள்ள ஒன்றுடன் இயற்கையான ஏதோ ஒன்றினால் தூண்டப்பெற்றுக் கூடியல்லவா மரபு வளர்கின்றது. சிந்தனை செய்: பெண்ணில் உயிராயிருப்பதும், ஆணில் உயிராயிருப்பதுவும் ஒரு சக்தியல்லவா? அதை எந்தப்பெயரால் அழைத்தாலும் சரி, கடவுளென்றாலும் சரி, இயற்கையென்றாலும் சரி, உனது வாய்மனத்திற்கு எட்டாத ஒரு நுண்பொருள் உன்னுள் உள்ளது. அது உடலில் இருந்தாலும், உடலிற் கட்டுப்பட்டதல்ல. உடலின் இன்பதுன்பங்கள் சாராத சுத்தப்பொருள் அது. அதையே சுத்தான்மா என்பது.

## 13. அகண்ட சக்தி

அன்பனே, இந்த விளக்கிற்கு முன்பே விளக்கொளியிருந்தது; அதுபோல, உடலுக்கு முன்பே ஆன்மா

இருந்தது; அது விளங்குதற்கு ஒரு ஆதாரமே உடலம். எண்ணெய், திரி, தகழி மூன்றும் விளக்கிற்கு ஆதாரமாயிருக்கின்றன. இவையொழிந்தால் ஒளி ஆகாயத்துடன் கலந்து மறைகிறது. பந்தில் அடைபட்ட காற்று, ஒரு ஓட்டைவிழுந்தால் பந்தைவிட்டுக்கிளம்பி வெளிக்காற்றுடன் கலக்கிறதல்லவா? அதுபோல சுத்தான்ம சக்தி எங்கும் உள்ளது. அது ஐம்பூதக்கூட்டில் பிராணசக்தியாக இயங்குகிறபோதே பல உயிர்க்குலங்களைக் காண்கின்றோம். பேசும் படத்தில் காட்சிகள் பலப்பலவேனும், அனைத்தையும் இயக்கும் மின்சாரசக்தி ஒன்றுதானே. பார்ப்பவன் 'நான் திரையில் ஆடும் படத்தைத்தான் நம்புவேன். இந்தக் கட்டிடத்திற்கு வெளியே வைத்து வேலை செய்யும் மின்பொறியை நம்பமாட்டேன்' என்னலாமா? உலகாதீதமான, தாக்கற்ற ஒரு அகண்ட சக்தி, பந்தமொந்தமில்லாத ஒரு சுத்தசக்தியே உலகை நடத்துகிறது. நாம் காணும் உடல் வேறுபாடுகளெல்லாம் வினையியல் வேறுபாடுகளே, குணதொந்த விகாரங்களே. உள்ளேயுள்ள சுத்தான்மா எங்கும் அனைத்திலும் ஒன்றே.

## 13. சங்கம்

யார் நம்பிக்கையையும் கெடுக்காதே. அவனவன் மனப் பக்குவத்திற்குத்தக்கபடி கடவுளை வணங்கட்டும். எப்பெயர் வடிவால் வணங்கினாலும், வணக்கத்தை ஏற்பது ஒரு பொருளே. ஒரு சங்கத்தின் ஆண்டுவிழாக் கூட்டம் நடக்கிறது. கூட்டத்திற்கு வந்தவர் உடைகள் பலவகை; பூச்சு, பேச்சு, இயல்பு பலவிதம். எனினும், எல்லாரும் ஏகோபித்து அமைதியாகக் கூட்டத்தில் இருக்கிறார்களல்லவா? ஒரு தலைவரின் ஆணையைப் பின்பற்றிக் கூட்டம் நடக்கிறதல்லவா? பலர் பல விஷயங்களைப்பற்றிப் பேசினும்

கருத்துடன் கேட்கின்றனர் அல்லவா? அப்பனே, உலகம் ஒரு ஜீவசங்கம். தாவர சங்கமப்பொருள்களெல்லாம் ஒரு சங்கமே. அவற்றின் தலைவன் தூய தனிமுதற் கடவுள். இந்த வுணர்வுடன் எல்லா மாந்தரும் ஒன்றி வாழலாம்.

## 14. உலகாலயம்

வானளாவிய மாமணிக் கோயில் இவ்வுலகம்; அதன் அம்மை அருட்சக்தி; அப்பன் உண்மை வடிவான இறைவன். உயிர்களெல்லாம் ஒருகுல மைந்தர்; இறைவன் ஸத்து, உண்மை; சக்தி, சித்து, அருள், அறிவு, இந்த உண்மை யறிவின் இன்பவிரிவே தோற்றவுலகு. இறைவன் தூயன், சுத்தன்; அவனது ஆற்றல் சக்தி. கடவுட் கதிரவன் சக்திக்கதிர் விரித்து உயிர்க்குயிராய் நிறைந்துள்ளான். அனைத்தையும் தோற்றிப் போற்றி மாற்றி விளையாடுவது ஒரு திருவருளிச்சையே. உன்னுள்ளத்தில் ஒரு அறிவுக் கனல் எரிகின்றது. அதைச்சுற்றி மனமாயையாகிய இருப் புத்தடை மேவியுள்ளது; அந்த ஆணவத்தடையை அன்பி னால் தகர்த்தெறி; இறைவனருளைக் கூவியழை: 'அருட் சக்தியே, இந்த மனபூட்டுடைத்து என்னுள்ளத்திற் கனலும் உனது திருவொளியை விளக்கு' என்று ஆர்வமுடன் கருது. அருட்கதவு திறக்கும்; அருள் விளக்கமாகும்—உறுதி, உறுதி!

## 15. அமுத நாடி

இந்த அருட்சுடர் கனலும் உள்ளமே சிதம்பரம், தகரநிலையம், பொதுவெளி, சிற்சபை எனப் பலவாறு அருட் புலவர் கூறினர். பெட்டிப்பாம்பு மாதிரி மனம் கிளம்பாது உள்ளத்தடங்கியதும், ஒரு ஆழ்ந்த அமைதி யொளிரும்; ஒரு சக்தி (சேதனம், சின்மயம்) உன்னுள் விறு விறு வென்று தலைமுதல் கால்வரையில் பரவி விளையாடும்.

அதையே கவனி; எல்லா இன்பமும் உண்டாகும். அதுவே சாகாக் கலே; அக் கனல் வளர வளர உடலும் ஒளிபெறும். அக்கனல் எல்லாக் குறைகளேயும் விழுங்கி உன்னேப் புடம் வைத்த பொன்போலாக்கும். கண்ணில் அறிவுக்கனல் வீசும். இதயத்தினின்று உச்சிமட்டும் ஒரு அமுதநாடி யோடு கிறது; அது முழுதும் ஒளிப்பிழம்பாகக் காணும்; "ஓம்" என்ற மறையொலி எப்போதும் கேட்கும். இதைவிட அரிய காட்சியும், உணர்வும் ஆங்கே நிகழும் எனினும், இவ்வளவு தான் வாய்பேசவொண்ணும். இவ்வனுபவமே இன்பம், அமுதம், சிவம். இதைக் கற்றறிய முடியாது; உள்ளே யுற்றுணரவே முடியும்.

## 16. தில்லேக் கூத்தன்.

ஆசையாணவங்களே எரித்தவுள்ளமே தில்லே; அதில் "தான், தான்" எனக்குதிக்கும் ஒன்றே தில்லேக்கூத்தன்; ஓமொலி அவனது நாதப்பறை; புருவ நடுவே காணும் கனலே எல்லாக் குறைகளேயும் எரிக்கும் அறிவொளி. சிற் சக்தியின் ஓட்டமே கங்கை; இதயக் கடவுள்; பொதுநடத் தரசு அருட்பெருஞ்சோதியப்பனே உள்ளே யறி; பிறகு கண் விழி; உலகெலாம் ஒவ்வோரணுவிலும் அவனே நின்று நிலவி நடமாடக் காண்பாய். பிறகுதான்,

எல்லா வுலகிற் கிறைவ னொருவன்<br>எல்லா வுடலும் இறைவ னுலயமே

என்ற வுண்மை உனக்கு நன்கு விளங்கும். இந்த வுண்மை யறிவே உள்ளொற்றுமைக்கும், உயிரொற்றுமைக்கும், உல கொற்றுமைக்கும் வித்தாகும். மற்றைப்படி ஒற்றுமை பேசுவதெல்லாம் பேச்சளவில்தான் நிற்கும். உள்ளொன்றி னுல்தான் உலகொன்றும்.

## 17. அருள் விளக்கம்

உயிர்கள் இறைவனுடல்; உன்னுள் இருப்பது போலவே அனைத்திடமும் அவன் உள்ளான். அனைவரும் அவனருள் விளக்கமே; வேறு வேற்றுமைகளை ஒழி; நானெனும் தனிச் செருக்கு நீங்கும். உன்னுள் உலகளாவிய அன்பு பிறக்கும். பிறகு, 'எல்லா வுயிரும் என்னுயிர்; எல்லா ரின்பமும் என்னின்பம்' என்றுணர்வாய். அக்கணமே பேத புத்தி நீங்கும். சாதி, சமய, சாத்திர கோத்திர பேதங்க ளெல்லாம் அறியாமையால் விளைந்தன; இவற்றால் உலகைப் பாராதே.

வேற்றுமை, இடர், துன்பம், நோவு, நடுக்கம் எல்லாம் ஆணவ மாயத்தில் கண்தெரியாது தட்டுத் தடுமாறி விழுந்து பெற்ற புண்களென்றெண்ணு. எவ்வளவுக்கெவ்வளவு உன் னன்பு உலகளாவுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு உனது ஆணவம் மெலியும். அதற்காகத்தான், இறைவனன்புடன் இன்னுயிரன்பும், ஆலயப் பணியுடன் ஆருயிர்ப் பணியும் செய்யவேண்டும்.

## 18. அருட் பணி

இவ்வுலகக் கோயிலில் ஒவ்வோருயிருக்கும் ஒவ் வொரு அருட்பணியுள்ளது. எதுவும் அற்பமல்ல, ஒவ் வோருயிரிலும் ஒரு தனிப் பெருமையுள்ளது.

உன்னுள் ஆழச் சிந்தனை செய்; உன்னியல்பைக் கேள்; அது ஒரு பணியை நோக்கும்; மனச்சாட்சியைக் கேள்; அது சரியென்றால் அப்பணியே இறைவன் உனக்கிட்ட பணி யென்றறி. அப்பணியை உனது பேர் புகழுக்காகச் செய் யாதே; உலகோர் மெச்சவேண்டுமென்றும் செய்யாதே. உன் மனச்சாட்சி மகிழும்படி அமைதியாக இறைவனுக்கே

வேள்வியாகப் பணி செய். அச் செயலே வழிபாடாகும்; அது ஆண்டவனுடன் கூடிச்செய்யும் யோகமாகும். இவ் வகையாகவே சிவனடியாரும், மாலடியாரும் பணிபுரிந்து இறைவனருளைப் பெற்றனர்.

## 19. அடக்கம்

கடலினின்று கதிரவன் ஆவிநீரிழுத்து மேகப்பட்டாடை நெய்கிறான்; ஒரு சத்தம் போடுகிறானா! மழை பொழிகிறது, காற்றடிக்கிறது, பூ மலர்கிறது, மதி நிலவு பொழிகிறது; சற்றும் தானெனும் செருக்கும் விளம்பரமும் செய்கின்றனவா? இந்த இயற்கைபோல இயல்பாகச் செயல்புரி. அது உலகிற்கெல்லாம் பயனாகும். உலகம் வைதாலும், வாழ்த்தினாலும் பாராட்டாதே. இறைவனிச்சையைச் செய்.

## 20. பரீட்சைக் கூடம்

உலகம் ஒரு பரீட்சைக் கூடம்; ஒவ்வொருவனுக்கும் ஒரு கேள்விக் காகிதம் (ஒரு அருட்பணி) தரப்பட்டுள்ளது; அதை முடிக்கக் குறித்த ஆயுளும் அளந்து தரப்பட்டுள்ளது; வினையளவே தோற்றம். சிலர் சுறுசுறுப்பாக மன மூன்றி வந்த வினையைப் பார்க்கின்றனர்; சிலர் சோடா வேண்டும், காப்பிவேண்டும் என்று கேட்டுத் தீனியில் பொழுதைப் போக்குகின்றனர். சிலர் வேறெதையோ கவனித்து வீண் பொழுது போக்குகின்றனர். சிலர் சுற்று நோக்கி மந்தமாக மூளையோடாது வீற்றிருக்கின்றனர். சிலர் அடுத்தவன் முதுகைச் சொறிந்து திருட்டுத்தனமாக விடையெழுத முயலுகின்றனர். கால அளவில் மணியடிக்கிறது; உடனே பரீட்சைக் காகிதங்களை வைத்து ஒரு பேச்சின்றிச் செல்ல வேண்டியதுதான். கருத்தூன்றி வந்த காரியத்தைக் கவனித்தவன் வெற்றியுடன் முன்னேறுகிறான்; வீணை

பொழுதுபோக்கியவன் சுன்னம் வாங்குகிறான்; இவன் மீண்டும் இந்தப் பரிட்சைக் கூடத்திற்கு வரவேண்டியது; இவ்வுலகில் மீண்டும் பிறக்கவேண்டியது. தன்னை யறிந்து, அறிவில் வாழ்பவன் அறிவேயாகி, உடலும் உயிரும் ஒளி நிரம்பிப் பிறப்பிறப்பில்லாப் பேரின்பமடைகிறான்.

## 21. வாழ்வை வீணாக்காதே

ஒரு நொடிகூட வீணாக்காதே; ஒருகாரியம் செய்யுமுன், 'நாம் ஏனிதைச் செய்கிறோம்; இது நமக்குரியதா? அருட் பயனுடைத்தா?' என்று வினவு; ஒவ்வொரு மூச்சும் இறைவனை வழிபடும் தூய பொன்மலராகக் கருது. வாழ்வென்பது இப் பொன்மலர் மாலை; அதை இறைவனுக்கே சூட்டு, அறிவே அதன் மணம்; இன்பமே அதன் தேன்; உண்மையே அதன் பொலிவு. உலகை அஞ்சாதே; உலகை வெல்.

## 22. தவ நிலயம்

வாழ்வைத் தவநிலயமாகக் கருது. ஒருநொடி வீணானால் இச்சிறிய வாழ்வுக் குடத்தினின்று ஒருதுளி ஓடிப் போயிற்று. உள்ளறிவு, உலகறிவு; உள்ளே கடவுளுணர்வு, உலகிற் கடவுளுணர்வு; உள்ளே கடவுட்கலப்பு, உலகிற் கடவுட்கலப்பு; உள்ளே கடவுள் முயற்சி, உலகிற் கடவுட் பணி; உள் வாழ்வு, புறவாழ்வு—இது வாழ்வின் இணை பிரியாத இரண்டு இயல்புகள். இதன் சேர்க்கையே வாழும் யோகம்.

> தாழாத சக்தித் தவநிலைய மேயவணி
> வாழ்வெல்லாம் யோக வளம்.

இதை நன்கு சிந்தை செய்.

## 23. உலக வாழ்வு

ஆண்டவன் திருக்கோயிலில் உலவுவதுபோல உலகில் நடமாடு. அணுவணுவிலும் அவனே நிறைந்துளான். அன்பனே, உலக வாழ்வு ஒரு ஊருணி; அதை அறமெனும் காவற்காரன் மாசறக் காக்கிறான். "இது பலருக்குப் பயனுவது; இதைத் தூயதாக வைத்திருங்கள்; இதில் அழுக்குப் படியாமல், பாசம் பிடிக்காமல், கவனமாயிருங்கள்" என்று எச்சரிக்கிறான் அறக்காவலன். பொய், அகந்தை, பேராசை, களவு, காமவெறி, சினம், பகை, பொறாமை, சோம்பல்—இவையே இந்தக் குளத்தைக் கெடுக்கும் அழுக்குகள். நல்லோர் இயல்பாகவே குளத்தைச் சுத்தமாக வைத்துக்கொள்ளுகின்றனர். சிலர், காவற்காரன் சொல்லைக்கேட்டுத் திருந்துவர். சிலர் மறைவாக, இருளில் அக்கிரமஞ் செய்வர். சிலர் காவற்காரனையே வெருட்டித் துணிந்து தீமை செய்வர். இவர் தீமையால் குளமே கெட்டு, துர்நாற்றமெடுத்துப் பாசிபிடிக்கிறது. அப்போது இவ்வாழ்விற்கிறைவன் குருமாரை உலகிற்கனுப்பிக் குளத்தைத் தூர்வையெடுத்து மீண்டும் அருள் மழை பொழிந்து உண்ணீராக்குகிறான். இக் குருமாரையே அவதாரம் என்கின்றனர்.

## 24. நன் மதிப்பு

உலகிற்குதவிய ஒவ்வொரு அருட்பெரியோரையும் நன்கு மதி. அவரவரிடம் பளிச்சிடும் நலங்களை உன் வாழ்விற்குச் சூட்டு. சோக்ராத்தனின் உண்மையுறுதி, ஜாரதுஷ்ட்ரனின் (Zoraster) விடாமுயற்சி, கிறிஸ்துவின் பேரன்பு தியாகம், நபிமணியின் கடவுளுறுதி, லவோத்சன்னின் (Leo Tse) தன்னறிவு, கோன்புத்சன்னின் குணநலம், புத்தரின் அமைதி, மஹாவீரரின் அஹிம்சை, சங்கர

ரின் அறிவொளி, நம்மாழ்வாரின் கடவுட் காதல், ராமாநுஜ ரின் அடைக்கலத் திறன், மத்வரின் சதாசார பக்தி, ஞான சம்பந்தரின் ஒப்பற்ற அருளறிவு, அப்பரின் அன்புண்மை, மணிவாசகரின் மாசற்ற சிவப்பேறு, வள்ளற்பெருமானின் சமரஸம், ஔவையின் யோகநெறி, வள்ளுவரின் தூய இல்லறம், இவையெல்லாம் உன் வாழ்வில் ஊறட்டும் இவர் கள் மொழியமுதைப் பருகு.

## 25. பணி செய்வதெப்படி?

எவரையும் நிந்திக்காதே, தூற்றாதே; உனக்குத்தான் எல்லாந்தெரியும், பிறர் மடையர் என்று எண்ணாதே; அவரவ ரளவில் அவரவர்க்கு அறிவு உள்ளது. உன்னிடம் ஏதே னும் நலமிருப்பின் அதைப் பொதுவாக, அமைதியாக, தன்னலச் செருக்கின்றி, சூரியன் ஒளிதருவது போலும், ஆறு தண்ணீர் தருவதுபோலும் உலகிற்குத் தா; இயற்கை வன்மைகளைப்போல இயல்பாகச் செய். நீயும் வாழு; பிறரையும் வாழவிடு. எவன் எல்லாந் தெரிந்ததாகப் பிதற்றுகிறானோ அவன் ஒன்றுமறியான்; எவன் அமைதி யாக ஆணவச் சளசளப்பின்றி யிருக்கிறானோ, அவனே நிறை யமுதக் குடம். பிறரைத் தூற்றாமல், தானெனும் செருக்கில் லாமல் நீ சொல்லவேண்டியதை உள்ளுணர்ந்து சொல்லு; நீ உணர்ந்ததையே சொல்லு; அதுவே பயனுள்ள சொல். ஆயிரம் மேற்கோள்களைச் சண்டமாருதம்போலக் கொட்டு வோனைவிடத் தான் பயின்று முயன்று கண்டவோருண்மை யை நடந்துகாட்டுவோன் கோடிப்பங்குமேல். நபிமணி, சொக்ராத்தன், ஏசுநாதர், பரமஹம்ஸர்—முதலிய பெரி யோர்கள் தங்கள் அனுபவத்தையே உள்ளுணர்ந்து பேசி னர்—கற்றறிவினாலல்ல; அருளறிவால். அவர்கள் வாழ்வே அருமறை. அமுதை அள்ளியுண்டால்தான் பசி நீங்கும்.

அமுதைப்பற்றி அழகாகப் பேசினாலும் எழுதினாலும் பசி நீங்குமா? எவ்வளவு வர்ணித்தாலும் சர்க்கரை இனிக்குமா? ஒரு துளி ருசித்தால் அத்தனை பேச்சிற்கும் எழுத்திற்கும் மேலே இனிக்கும். அதுபோல உண்மையை அமைதியாக, புலனடக்கி, முறையோடு பயில்; உனக்குள் ஒரு இன்ப முண்டாகும், அப்போது பேச்சுச் சுருங்கும். உண்மை விளக்கே உன்னைப்பற்றிப் பேசும். உண்மையை விளக்கு; உண்மை உன்னை விளக்கும்.

## 26. அறிந்தடங்கு

அன்பனே! எவன் மீதும் அருவருப்படையாதே; ஒருவன் அழுக்காயிருந்தால் அவனுக்கு சுத்த நெறியைச் சொல்லு; பிறருக்குச் சொல்லுமுன் உன்னைச் சுத்தனாக்கு; அப்போது உன்னைச்சுற்றி ஒரு சுத்த சக்தி விளங்கும். அளவற்ற அன்பை வளர். 'இவன் நாமம் போடுகிறான்; அதனால் வைணவன். நான் சைவன், நீறு பூசுகிறேன்; மற்றொருவன் முத்திரை யடித்துக்கொள்ளுகிறான்; இன்னொருவன் சூனிய நெற்றியோடிருக்கிறான்; இவன் மொட்டை, இவன் குடுமி வைத்திருக்கிறான்; இவன் பொடியன், இவன் தடியன்; இவன் கறுப்பன், இவன் வெளுப்பன்; இவன் மேல், இவன் கீழ்; இவன் காணலாகாது, தீண்டலாகாது' என்று காண்பது பேதபுத்தி, காமாலைக்கண். இந்த மேல்கீழ் வேற்றுமை களால்தான் உலகில் சாதிசமயச் சண்டை சச்சரவுகள் வளரு கின்றன. அருட்புலவர் இவ்வேற்றுமையை வெறுத்தனர். அன்பு, உண்மை, ஒற்றுமை, சமரஸம், தன்னறிவு, அருட் பணி, மனமொழி மெய்த்தூய்மை—இவை எல்லாச் சமய குரவரும் ஆய்ந்த உண்மை. இவற்றைப் பயிலாமல் மாந்தர், சாதிசமயக் கோட்டைகளை எழுப்பிக்கொண்டு உண்மையை விடுத்துத் தோற்றத்தைப் பிடித்து மோதிப்

பொருது நிழலுடன் போர் புரிகின்றனர்! மதவெறி வடித்த இரத்தம் மண்வெறி வடித்த இரத்தத்திலும் வெள்ளமாகப் பெருகியோடுகிறது.

தன்னுள்ளே தானன தத்துவமாய் நின்றிடுக;
பின்வேண்டாம் பல்சமயப் பேச்சு.

புறவேடங்களால் ஒருவனை மதிக்காதே; வெறுக்காதே; ஒருவன் கெட்டால் அவன்மீது இரக்கப்படு; நல்வழி தெரிந்தால் சொல்லு; தெரியாவிடில் சும்மா இரு; தெரிந்தாற் போலப் பேசி இன்னுந் தீயவழியில் அவனைப் புகுத்தாதே. அவன் திருந்த இறைவனை வணங்கு; அறியாமையின் சண்டப்பிரசண்டத்தைவிட, அறிவின் மோனமே ஆயிரம் பங்குமேல்; கற்றால் மூளை பெருகும்; அறிந்து, தெளிந்தால் தான் இன்பம் பெருகும். வேதப்பொருள் உன்னுள்ளத்திலும் உள்ளது.

## 27. உலக உண்மை

உலகம் மெய்யென்பர், பொய்யென்பர், கனவென்பர், நினைவென்பர்; நீ எதுவும் பேசாதே. உனக்குமுன் உலகம் இருந்தது; பின்னும் இருக்கும். அதன் அற்புதம் சிற்றறிவிற்கெட்டாது. அது மாறி மாறி நிலைபெறும். நீ உள்ள மட்டும் உலகமும், அதன் உறவும் உனக்கு இருந்தே தீரும்; ஆதலின், உள்ளமட்டும் உண்மையெனக் கொள்; பூரணம் பெறுதற்கு ஒரு நிலைக்களனாகவே உலகை யெண்ணு. உலகை ஒரு அகண்ட யோகவனமாகக் கருது; வாழ்வை யோகமாகக் கருது; வாழ்வு வட்டம் இறைவனிடமிருந்து போந்து இறைவனுக்கே திரும்பிச் செல்கிறது. இந்த வாழ்வுத் தேரை அறிவென்னும் சாரதி ஓட்டுகிறான். இது

மனமெனும் குதிரைபூட்டிய தேர். அறிவு, தனது முதிர்ச்சிக் கேற்றபடி மனத்தை யடக்கிபாண்டு தேரை நிலை சேர்க்கும்.

## 28. கால நெருக்கடி

பழைய வர்ண கர்மங்கள் ஆசாரங்களெல்லாம் பேருக்குத்தான் இருக்கின்றன. முற்கால ஆசிரம நியமங்களும் சாதி வகுப்புப் பாகுபாடுகளும் இக்கால அதிர்ச்சியிற் சிதறுண்டன. சுதர்ம சிரத்தை போய் சமதர்மப் பசியெடுத்துள்ளது. தனிவாழ்வு போய் ஒருகுல வுணர்வும் சங்க வுணர்வும் மாந்தரிடையே பரவியுள்ளன. இக்கால நெருக்கடியில் நித்திய கர்மானுஷ்டானங்கள் பழய விதிப்படி செய்ய முடிவதில்லை. நேரமெல்லாம் பொன்விலையாயிருக்கிறது. வாழ்வு விரிந்துவருகிறது. தொழில்களும் விவகாரங்களும் பெருத்துவருகின்றன. போட்டி அதிகமாயிருக்கிறது. மனம்பற்றாத போலியாசாரங்களும் நடிப்புக்களும் பூச்சுக்களும் பயனில்லை. குணகர்மவிபாகங்களான நாற்சாதி இப்போது நாலாயிரம் சாதியாகப் பெருகி பாரத தர்மத்தைச் சில்லறை மாற்றிவிட்டன. புதிய பிறசமயங்கள் நாட்டில் வேரூன்றிக்கொண்டன. இப்போது பாரத தேசம் என்றால், சைவர், வைணவர், சாக்தர், ஜைனர், பௌத்தர், சீக்கியர், பாரசிகர், இஸ்லாமியர், கிறிஸ்துவர், ஆரிய சமாஜிகள், பிரம்ம சமாஜிகள் முதலிய பல வகுப்பினர், இன்னும் பல கொள்கையினர் சேர்ந்த ஒரு தேசமாகவே கருதவேண்டும். இத்தனைபேரும் மனமொப்பிப் பயின்று ஒன்றுபட்டு வாழக்கூடிய ஒரு பொதுநெறிதான் இனி நமக்கு வேண்டும்.

## 29. ஆத்மத்யானம்

ஆத்ம தரிசனம், ஆத்ம ஸமதரிசனம்—இவையே வேதம், கீதை, உபநிடதம், பிரம்ம சூத்திரம், பதஞ்சலி

யோக சூத்திரங்களின் சாரம். 'உன்னைக் காண், உன்னைப் போல பிறரைக் காண்' என்று எல்லா மதங்களும் வற்புறுத்துகின்றன. இந்த ஆத்மஞானத்தினால் தான் மாந்தர் உள்ளொன்றி வாழமுடியும். மதவாதங்களெல்லாம் இரவில் மினுக்கிடும் நட்சத்திரம் போன்றவை. சுத்தான்ம ஞானம் அவற்றையெல்லாம் தன்னுள் ஐக்கியப்படுத்தித் தானே தானாக எல்லையற்ற வானில் விளங்கி உலகை சாட்சியாயிருந்து நடத்தும் கதிரவனைப் போலாகும். மேகங்கவர்ந்த சந்திரன்போல இந்த இன்பப்பொருள் மனத்தழுக்குகளால் புலப்படாமலிருக்கிறது. சுரங்கக்கட்டியைச் சுத்தம் செய்து மாற்றுத்தங்கம் ஆக்குவதுபோல, தினந்தோறும் தியான வைராக்ய ஸாதனங்களால் சித்த சுத்தி பெறவேண்டும். மனம் மாசற்றுக் கண்ணாடிபோலானால் ஆத்ம ஸ்வரூபம் துலங்கும். மண்டிநீரில் தேற்றும் விதை யுறைத்து அப்படியே அலுங்காது வைத்திருந்தால் நீர் தெளியும். அது போல 'நான் ஆன்மா' என்னும் மந்திரத்தை நினைத்து சித்தம் அலையாதபடி மௌனமாக நின்றால் மனந்தெளியும். இதுவே தியானம். அமைதியாகக் காலை மாலை கவலையற்று அரைமணி தினந்தோறும் தனியாயமர்ந்து தியானம் செய்து வந்தால் சித்திபெறலாம். இந்த ஒரே ஸாதனம் போதும். வேறு எவ்விதமான சடங்குகளும் வேண்டியதில்லை.

## 30. சர்வமத ஸாரம்

வேதம், "ஓம் தத்ஸத், தத்வமஸி" (அது ஆன்மா, உண்மை, அது நீ) என்கிறது. கீதை "உள்ளங்களில் எல்லாம் நான் ஆன்மா; அதுமயம் உலகு; இந்த ஆத்மஸமத்வமே யோகம்" என்கிறது. சித்தாந்தம், "எல்லாம் சிவமயம்" என்கிறது. வைணவம், "எல்லாம் அவன் உடைமை,

எல்லாம் அவன் ஆடல்" என்கிறது. கிறிஸ்தவம், "அவனன்றி ஒரு இலையும் அசையாது. ஆன்மாவைக் கண்டவன் அவனைக் காண்பான். ஆன்ம பூரணம் பெறுக; கடவுளரசை அந்தராத்மாவிற் காண்க" என்று அன்பும் பொறுமையும் கொண்டு உபதேசிக்கிறது. திருக்குரான், "அவனே பெரியான். அவனுக்கிணையில்லை. அன்பும், உறுதியும், அடைக்கலமும் கொண்டு அவனருளைப் பெறுக" என்கிறது. ஜரதுட்டிரம் சுத்த சோதியாக அவனை வழிபடுகிறது. "ஆசையாணவக்கட்டுகளை யொழித்து, தன்னலந்தவிர்த்து இரக்கமும், உயிர்க் கருணையுங்கொண்டொழுகினல் மனமாசறும்; ஆத்ம சாந்தியும் முத்தியும் எய்தும்" என்று பௌத்தம் வற்புறுத்துகிறது. சமணமோ, தூயகாட்சி, நல்லறிவு நல்லொழுக்கங்களால் வினைத்தளையுதிர்த்து ஆத்ம சித்திபெறும் வழியைக் காட்டுகிறது. மனமொழிக்கெட்டாத ஒரு சுகப்பொருள் நம்முள் இருப்பதை எல்லா மகான்களும் அனுபவத்தால் அறிந்து, அந்த சுத்த சுகநிலை பெறுவதற்கு அன்பு, உண்மை, தன்னறிவு, மனமொழிமெய்த்தூய்மை ஆகிய சாதனங்களைச் சொல்லிப் போந்தனர்.

## 31. அமைதி

வீதிவீதியா யலைந்தாலும் வீட்டிலேதான் அமைதி கூடும். சாதிமதங்கள் சாத்திரங்கள் பிறக்கு முன்பே சுத்தான்மா இருந்தது. அதை அடையும் சுத்தமுக்த சமத்வ சத்ய தர்மமும் இருந்தது. எல்லையற்ற சத்ய தர்மச் சோலையிற் பூத்த சில மலர்க்கொத்துக்களே உலகின் மதநூல்கள். எந்த மதத்தைச் சேர்ந்தவராயினுஞ் சரி, மதமற்றவராயினுஞ்சரி, வாருங்கள். நேராக சத்யதர்மச் சோலையிலேயே சென்றுலாவி தெய்வமணத்தை நுகரலாம். தனது செங்கோன்மையினல் அரசன் தனது நாட்டிலுள்ள ஒவ்

வொரு ஊரிலும், தெருவிலும், வீட்டிலும், மாந்தர் மனத்திலும் பரவியிருக்கிறான். அதுபோல, நித்தியமான ஆத்மதர்மத்தால் பரமாத்மா ஒவ்வொருவர் வாழ்விலும் விளங்குகிறான். ஐம்புலக் குதிரைகள் அடங்கி நடந்தால், மனத்தேர் நம்மை அவனிடம் சேர்ப்பிக்கும். பரமாத்மா எப்போதும் இதயத்தில் விழித்திருக்கிறான். கண்ணிருப்பவர் காண்க! உறுதியிருப்பவர் அடைக! அவரவர் சாந்தம் அவரவருள்ளே. அவரவரின்பம் அவரவருள்ளே. அவரவர் கோயில் அவரவருள்ளம். அவரவர் கடவுள் அவரவர் உள்ளத்தில் உயிர்க்குயிராயிருக்கும் சுத்தான்மா. தியானத்தினால் சித்த சுத்தியும் மனச்சாந்தமும் அடைவதே சுத்தான்ம சித்திக்கு ஒரே சாதனம்.

## 32. ஆன்மச் செல்வம்

அறிவு, அன்பு அருட்பணி இம்மூன்றையுமே எல்லா மதங்களும் பலவகையாக உபதேசிக்கின்றன. ஞானயோகம், பக்தியோகம், கர்மயோகம் மூன்றும் சேர்ந்த அத்யாத்ம யோகவாழ்வே சுத்தான்ம வாழ்வு. பாரதநாட்டின் மதிக்கரிய செல்வம் தன்னறிவுச் செல்வமே; ஆத்மஞான பொக்கிஷமே. இதைத் தேடியே மேனாடும் இங்கு யாத்திரை வருகிறது. இதுவே வேதாந்தச் சிங்கமாக அமெரிக்காவில் கர்ஜித்து பாரதநாட்டின் பெருமையை விளக்கியது. ஆத்மஞானமில்லாத பாரத சமுதாயம் தித்திப்பில்லாக் கரும்புபோலாகும். இந்த ஆத்மஞானமே நம்மை மீண்டும் விடுதலைசெய்து சுத்தமுக்த சமத்வ சக்திவீரராக்க வல்லது. இதுவே சோர்வை யகற்றி, வேறுபாடுகளை யொழித்து, ஒற்றுமையும் சமநோக்கும் சுதந்திரமும் அளித்து, மனித வாழ்வை தெய்வ வாழ்வாக்கவல்லது. இதுவே சர்வாத்ம ப்ரேமையைத் தூண்டி, ஏழை பணக்

காரன் என்ற வேறுபாடுகளையும் தனி யகந்தையையும் வீழ்த்தி, சமரஸத்தை நிலைநிறுத்தி, உலகின் பொருட்செல்வத்தை உழைத்தவர் அனைவரும் பொதுவாக அநுபவிக்கும் சுத்த சமதர்மத்தை இயல்பாக்கவல்லது. உன்னை ஆன்மா என்றறி. உன்னைக் காண்பதுபோல உலகைக்காண். உன்னிடம் உள்ள உண்மையே உலகிலும் உள்ளது. உன்னுயிர்த் துடிப்பே உலகுயிர்த் துடிப்பு! ஓம் சுத்த சக்தி.

## 33. சங்கிலித் தொடர்

அன்பனே, உன்னை நேசிப்பதுபோலப் பிறரை நேசி. உன் பசிபோலப் பிறர் பசி யுணர். உன் புண்போலப் பிறர் புண்ணை யுணர். உன்னுடல்போலப் பிறவுடல்களும் ஐம்பூதக் கூண்டுகளே. பெயர் வடிவில்தான் வேற்றுமை. உள்ளேயுள்ள பொருள் ஒன்றே. மிட்டாயெல்லாம் ஒரே சர்க்கரைதான்; கொக்கு கோழி, மயில் குயில் வடிவங்களாக அது ஆக்கப்பெற்றிருக்கிறது. சகவுயிரெல்லாம் ஒரே சங்கிலித்தொடர். ஆன்ம வுணர்வென்னும் நாரினால் இதய மலர்களையெல்லாந் தொடுத்து பரமாத்மனுக்கே யணிவோம். உன்னை நீயறி. உன்னைப்போலப் பிறவுயிர்களை மதித்து நட. வேறு சாதிமதச் சடங்குகள் வேண்டாம். வாழ்வு தூய்மையுறும். உன்னுள் இணைபிரியாத ஒரு நண்பன் உள்ளான். அவனைக் கண்டுபிடித்தால் உலகெல்லாம் உனது நண்பர் கூட்டமாகும். ஏனெனில், அந்த நண்பனே எல்லாவுயிர்களிலும் உள்ளவன். மனித வடிவாகச் செய்த விக்கிரகங்களை சாமியென்று கும்பிடுகிறார்கள். கடல், கதிர், தீ, காற்று, நிலம், மலை, நதி, உயிர்க்குலம் அனைத்திலும் கடவுளைக் காணவேண்டும். இயற்கை உடல்; இறைவன் உயிர். இவ்விரண்டும் சேர்ந்தே வாழ்வு.

## 34. மனப் பயிற்சி

ஒரு நிலத்தைத் தரிசாகப் போட்டால் அதில் கண்ட முட்புதர்கள் முளைக்கும்; விஷப்பூண்டுகள் உண்டாகும்; பாம்பு, தேள், பூச்சி, நரிகள் வந்து குடிப்புகும். அது வாழ லாயக்கில்லாதுபோகும். அதுபோலத்தான் தியான மற்ற மனமும். பக்தி, வைராக்யம், ஜபம், பரோபகாரம், ஆத்மவிசாரம், தியானம், மோனம் முதலிய சாதனங்களால் மனத்தைச் சுத்தப்படுத்து. சித்த அலைகளை நிறுத்து. புலன் களின் சேட்டைகளை அடக்கு. நீ சுத்தான்மா, உடல் வீட்டிற்கு எஜமான் என்றறி. அந்தக்கரணம், தசேந்திரி யங்கள், உடல் எல்லாம் உன் சொன்னபடிதான் கேட்க வேண்டும். நீ அவற்றிற்கு அடிமைப்படக்கூடாது. மனத் தைத் தினந்தோறும் பண்படுத்தவேண்டும். இல்லாவிட்டால் காமக்குரோத லோப மோக மதமச்சர விலங்குகள் வந்தடை யும். இவை விஷப்பாம்பினும் தேளினும், நரி புலி கரடி சிங்கம் முதலை திமிங்கிலங்களினும் மிகமிகக்கொடியன. கவனம். செப்புப்பாத்திரத்தை விளக்காதிருந்தால் துருவேறி விடும்; மனமும் அவ்வாறே. மனம் மாசற்றுத் தங்கமாகு மட்டும் ஸாதனங்கள் தீவிரமாகச் செய்யவேண்டும். வீட்டைக்கூட்டி மெழுகாது சாமான்களைக் கண்டபடி போட் டிருந்தால் எப்படியிருக்கும்? மூதேவிதான் அந்த வீட்டில் வசிப்பள். அதுபோல, மனத்தை சுத்தம்செய்யாது கண்ட தை நினைத்துத் திரிந்தால் உடல் பாழாகும், உயிர் வருந்தும்!

## 35. நீதிகள்

நாரின்றி மாலையில்லை. அன்பின்றி ஒற்றுமையில்லை. நிலமின்றி மனையில்லை. அறமின்றி நலமில்லை. வானின்றி வளமில்லை. அருளின்றி உலகில்லை. இரவில் எத்தனை

கோடி நட்சத்திரங்கள் மினுக்கினும் இருளை ஓட்ட முடிவ தில்லை. ஒரு சூரியன் உதித்தால் இருள் உடனே மறைந்து போகிறது. அதுபோல, எவ்வளவு செல்வத்திரளும், அழகும், பகட்டும் இருந்தாலும் மனவிருள் போகாது. ஆத்மசூரியன் எழுந்து ஞானக்கதிர் வீசினல் மடமையும் செருக்கும் ஒழி யும். தாழ்ந்து வரும் ஆறுதான் கடலுடன் கலக்கும். பணிந்துவரும் மனந்தான் பகவானை யடையும். நேர்மை யான பணிவு நிறைகனியால் வணங்கும் மாங்கொம்புபோல நன்மதிப்பெய்தும். வெறுந்தண் வார்த்து நாற்ற எருப் போடுகிறோம். பூவுங் கனியுந் தேனும் நிழலுந் தருகிறது மரம். இயற்கை எவ்வளவு நன்றியுள்ளதா யிருக்கிறது? சிறு வுதவிக்கும் பெரிய நன்றி செலுத்துவர் நல்லோர். மரம் தான் வேரூன்றித்தான் கிளைவிடுகிறது. முதலில் தான் சன்மார்க்கத்தில் ஊன்றிக்கொண்டுதான் ஒருவன் பிற ருக்கு சன்மார்க்கம் போதிக்கவேண்டும். சீர்திருத்தம் நல்லது. தன்னைச் சீர்திருத்திக்கொள்ளல் மிக நல்லது. மலை யைச் சூறுவளி அசைக்கமுடியாது. மனவுறுதி கொண்ட பொறுமையாளனைத் துன்பங்கள் தளர்த்தமுடியா. பொறுமை வலிமை! உண்மை வெற்றி!

## 36. அறவுரைகள்

வாளினுங் கொடியது வன்சொல். கனலினுந் தீயது காமவெறி. நரகினும் பொல்லாது மடமை. நஞ்சினுந் தீயது பொறாமை. நகையும் அகந்தையும் நாசஹேது. திருடரிற் கொடிது தீவினை. உண்மை உயர்த்தும்; பொய் தாழ்த்தும். என்றுமுள்ளது உண்மை. பொய், கோள், வெற்றுரை, குத்தல், கிண்டல் இவையெல்லாம் நாவாற்செய்யும் பிழை களாகும். திருட்டு கொலை விபசாரம் உடற்குற்றங்கள்;

பகை, தீமை, பொறாமை, பேராசை மனக்குற்றம். எச் சமயத்தைச் சேர்ந்தாலும் சரி, இவற்றை ஒருவன் ஒழிக்க வேண்டும். ஒரு சிற்பி சிலையைச் செதுக்குவதுபோல அறிவாளி நாடோறும் தன்னையே சோதித்துத் திருத்திக் கொள்ளவேண்டும். உடல் வீழும். மனந் தொடரும். ஆதலால் மனத்தூய்மை பெறுக. ஆழ்ந்த ஏரிக்கு அலையால் தீதில்லை. உள்ளமைதி பெற்ற ஆழ்ந்த அறிவாளிக்கு உலகின் முக்குணப் போராட்டத்தால் மாறுட்டமில்லை. முதலில் மனத்தை அடக்கி வெல்லவேண்டும். கத்திப் போரைவிடச் சித்தப்போர் வலிது.

## 37. சுத்தமே

சுத்தமே கடவுள். சுத்தமே அவனை அடையும் வழி. மனமாசு நீங்கினல் உள்ளம் பளிங்குபோலாகும். அப்போது புறப்பொருளைக் கண்ணாற் காண்பதுபோலக் கருத்தால் உட்பொருளைக் காணலாம். புலன்களை வெளிச் செலுத்திப் புறப்பொருள்களை உணர்வதுபோலப் புலன்களை உட்குவித்தே உட்பொருளைக் காணமுடியும். உடலைக் கோயிலாக்கு; உள்ளத்தைச் சந்நிதியாக்கு; தூயமனத்தைப் பூசாரியாக்கு; அன்பை மலராக்கு; தியானத்தையே வழிபாடாக்கு; அறிவையே மணிவிளக்காக்கு; ஆர்வத்தையே மஞ்சனமாக்கு; சுத்த பரிபூரணத்தையே கடவுளாக்கு; வாய்மையே மந்திரமாக்கு! மசூதியில் யாரைத் தொழுகிறாயோ, சர்ச்சில் யாரை வழுத்துகிறாயோ, கோவிலில் யாரை வழிபடுகிறாயோ, அவனை இதயத்தில் தியானி. படித்துறைகள் பலவானாலும் ஆறு ஒன்றுதான். சமயங்கள் பலவானாலும் சத்தியப்பொருள் ஒன்றுதான். தங்கக் கோயில் கட்டி இரத்தின மலர் தூவித் தொழுதாலும், அன்பும் சமதரிசனமும் இல்லாவிட்டால் பயனில்லை. அழுகையைவிடத்

தொழுகை மேல். தொழுகையைவிட தியானம் மேல். தியானத்தினுல் உள்மோனம், அதனுல், ஆத்ம ஞானம் எய்தும். குவிந்த மொட்டைக் கதிர் மலர்த்துவதுபோல உட்குவிந்த மனத்தை அருளொளி மலர்த்தி ஆன்ம மணமும், ஞானத்திருவும், அன்புத்தேனும் பொங்குவிக்கும். பேசாமல் உள்ளடங்கி, சுத்தான்ம சித்தி பெறு. சுத்தான்மா உன் மூலம் பேசும். அதுவே உண்மை வேதம்.

## 38. வினை வேள்வி

வாழ்வு வினை வேள்வி. யக்ஞம் அல்லது வேள்வி பலவிதம். கடவுள் வழிபாடு, ஆருயிர் வழிபாடு, புலனடக்கம், மனத்தூய்மை, ஓசையொளி முதலிய தன் மாத்திரைகளினின்று புலனை வசமாக்கல், புலன், உயிர்ச் செயல்களனைத்தையும் பரமாத்மாவிற்கு அர்ப்பித்தல், தவம், யோகம், கற்றல், கேட்டல், பிராணுயாமம் ஆகார நியமனம் முதலிய பலவித யக்ஞங்களால் சுத்தமுறலாம். ஞான வேள்வியே சிறந்தது. சிரத்தை, அடக்கம், உறுதியால் எய்தும் ஞானம் பரமசாந்தியைத் தரும். கடவுளின் செல்வச் சித்திர மாளிகையான இவ்வுலகையே வானளாவிய கோயிலாகக் கொண்டு, அவன் மயமான மனித சங்கத்தையே—சீவலிங்கத்தையே, பிரேமானந்த மலரால், அருட்பணிக்கரத்தால் வழிபடுதலே உயர்ந்த வழிபாடு. எனினும், உரு, குறி, சிலை, பெரியோர்களை அவரவர்கள் இதய விருப்பிற்குத் தக்கபடி வழிபடுவதை நாம் எள்ளலாகாது. வழிபாடுகளில் பலபடிகளும் பலவகைகளும் உள்ளன. அகத் தொழுகையின் விரிவை எட்ட முடியாதவர்கள் புறத் தொழுகையாயினுஞ் செய்க! தான் உண்பது உடுப்பது நினைப்பது செய்வது அனைத்தையும் தான் வழிபடும் உருக் கடவுளுக்கு ஈந்தே

நுகர்க; மருதைவீரன் முதல் மஹாவிஷ்ணுவரை, மாடக் கறுப்பன் முதல் இரண்யகருப்பன் வரை, பாவாடை முதல் பரமன்வரை தத்தம் உறுதிக்குத் தக்கபடி தொடக்கத்தில், இலை, பூ, கனி, நீர், எத்தாலுந் தொழுது, பின்னே படிப்படியாக அகண்டமான பிரம்மோபாசனைக் குயர்க; எவரெவர்கள் எப்படி யெப்படி வழிபடுகின்றனரோ அவரவர்களுக்கு அவ்வவ்விதம் ஆண்டவன் அருள்பாலித்து மேன்மேலும் அவர்களை நடத்துவான். கண்மலர் சூட்டிய கண்ணப்பனுக்கும், கன்மலர் வீசிய சாக்கியனுக்கும், அருள் சுரந்த கண்ணுதல் எங்குமிருந்து அடியாரைப் போற்றி முன்னேற்றுகின்றான்!

வினைவேள்வியில் அன்பும், அறிவும் சேர்ந்து நிலவ வேண்டும். 'ஞாபகம்' என்னும் ஒரு மொழியை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். அதில் 'ஞா' என்பது ஞானம், 'ப' என்பது பக்தி, 'க' என்பது கர்மம், 'ம்' என்பது ஓங்காரமென எங்கும் நிறைந்த ஆண்டவன். ஞானம், பக்தி, கர்மத்தால் எங்கும் நிறைந்த கடவுளில் நாம் என்றும் ஒன்றி வாழுகிறோம், என்பதை நினைவில் வைத்து, அவனுடைய சத்யஜோதியிற் கலந்து, அதனால் உலக வாழ்வைத் தெய்வ வாழ்வாக்கவேண்டும்.

ஒவ்வொருவருள்ளும் ஆண்டவன் பேசுகிறான்:— "உன்னதென்று நீ அகந்தையால் எண்ணுவதனைத்தும் என்னது! உன் அகந்தைத் திரையை நீக்கு! அனைத்தும் என்னதென்பதையும், யாவும் யானேன்பதையும், உயிரும் உலகும் யானின்றி இல்லை என்பதையும் காண்! யானே பலவாக விரிந்தேன்! உலகாயுள்ளேன்! என் சக்தியை உலகிற் காண்!"

அவனுக்கே ஆளாவோம்! அவனுட் கரைமினோ! அமரராய் வாழ்மினோ!

## 39. முவ்வகை வீரம்

வீரம் வேண்டும். வீறு வேண்டும். வீரம் என்றால் வீறு, சக்தி, அறத்தை நிலைநாட்டும் ஆற்றல். வீரர் மூவர்— ஞான வீரர், தர்ம வீரர், கர்ம வீரர். வியாஸர், வால்மீகி, அப்பர், புத்தர், சம்பந்தர், சங்கரர், நம்மாழ்வார், பரமஹம்ஸர், அருட் பிரகாச வள்ளலார் போன்றோர் ஞான வீரர் அல்லது ஆத்ம வீரர். இவர்கள்தான் மனித சமுதாயத்தின் பொற்கனிகள்! இவர்கள் நாட்டிய அருளாட்சி சாகாவரம் பெற்றது. நாட்டைப் பிடித்த மடமைத் துயரை வீழ்த்த அவ்வப்போது தோன்றி அறத்தை நிலைநிறுத்துவோர் தர்ம வீரர். சிவாஜி, பிரதாப சிங்கன், குருகோவிந்தன் எல்லாம் தர்ம வீரர். கலையாலும் மதிப்பொலிவாலும், உடலுழைப்பாலும் மனித சமுதாயத்திற்குப் புதுப்புது நன்மை புரியும் நிபுணர் கர்ம வீரர். எடிஸன், ராமன், போஸ், போன்றோர் நல்ல கர்ம வீரர். இம்மூவகை வீரரையும் பாரத தேவி ஏராளமாகப் படைத்திருக்கிறாள். இந்த மூன்று வீரக் கனலையும் அவளே உலகிற்கு அளிக்கமுடியும். மேனாட்டில் கர்ம வீரர் உள்ளனர்; தர்மமும் ஆத்ம ஞானமும் அவர்கள் வாழ்வின் அடிப்படையாகவேண்டும். அப்போதே அந்தக் கர்ம பலத்தை நல்வழியிற் செலுத்துவர். அதற்கு வழி காட்டுவது பாரத நாடே!

## 40. பாரத சக்தி தியானம்

அதனால்தான் நமது நாட்டைப் புண்ணிய பூமியெனத் தொழுகிறோம். அறிவும், அறமும், ஆற்றலும், வாழ்வின் அடிப்படையானால், அக்கணமே மாந்தர் ஒரு குலமாவர்; உலகவொற்றுமை நிறைவேறும். அவ்வெற்றிக்கே பாரத தேவி முயன்று கொண்டிருக்கிறாள்! தவம், வீரம், அறிவு,

தொழில், அருட்பணி—இவை வெற்றியின் ஐந்துயிர்களாம். அன்பர்களே, நீங்கள் எங்கிருந்தாலும், எச்சமயத்திருந்தாலும், எத்தொழில் புரிந்தாலும், ஒன்று செய்யுங்கள்: 24-மணி நேரமும் அன்னையின் வெற்றிக்காகத் தவம் புரிவோர் உள்ளனர். காலை குளித்து உடுத்துச் சுத்தமாக மனங்குவிந்து பத்து நிமிஷம் நீங்கள் மனித சமுதாயத்தின் ஒற்றுமைக்கும், பாரதாத்மாவின் வெற்றிக்கும், பாரத சக்தியின் விளக்கத்திற்கும் தியானம் செய்யுங்கள். அவ்வாறே மாலையும் திருவிளக்கின் முன்னே வீட்டோரெல்லாம் கூடி உலக நலத்திற்காக, ஆன்ம வெற்றிக்காகப் பத்து நிமிஷம் தியானம் செய்யுங்கள். பாரத தேசம் என்று நாம் பூகோளத்தில் காண்பது பாரத மாதாவின் உடல்; வேதமும் உபநிடதமும், கீதையும், திருவாசகமும், திருமந்திரமும், திருவாய்மொழியும் முழங்கும் அத்யாத்ம தர்மமே அவளுயிர். இரண்டும் வாழ வழிபடுங்கள்! அத்துடன் உங்களுக்கு இயன்ற பணியை நடத்துங்கள். பத்துப்பேர் தீவிரமாக மனங்குவிந்து எண்ணுவது திண்ணமாக நிறைவேறும். இந்த 35 கோடி பாரத மக்களும் மனங் குவிந்து, திருவருளை வழுத்தினால், அந்த வழிபாட்டின் ஆற்றல் அளவற்றது! எல்லாருக்கும் அன்பைப் பரப்புங்கள்! பகையை விலக்குங்கள்! அறஞ்செழிக்கும்! ஆற்றல் பெருகும்! உண்மை ஒளிரும்; உலகெல்லாம் நன்மை வளரும்! இருள் நீங்கும்; அறிவு துலங்கும்! வீரந் தலை நிமிரும்! ஒற்றுமை பெருகும்! அமைதி பரவும்! ஓம் சுத்த சக்தி.

நூல் சாதன மலர்கள்

முற்றிற்று

---

நூல்—ரு

# அடியார் நினைப்பு

---

## 1. கண்ணப்பன்

இறைவனே, நான் வேதம் படித்ததில்லை; நான் புலவனல்லேன்; செல்வச்சிறப்புடன் உனக்குத் திருவிழாக்கள் நடத்தச் சீமானல்லேன். என்னிடம் உள்ளது உள்ளன்புதான். உன்னையே நெக்கு நெக்கு நினைந்துருகுவேன். என் சிக்கறுத்தருள்! என்னுட் புக்குறைந்தருள். உட்கலந்துருகலே நான் செய்யும் உண்மை வழிபாடு. அன்பில் விளையும் அமுதமே, வன்புகொண்டு மலரெறிந்த மன்மதனைச் சுட்டாய்; அன்புகொண்டு கல்லெறிந்த சாக்கியனை நட்டாய். 'குடுமித்தேவர் இருக்கிறார்' என்று கேட்டதும் காதல் முறுகிப் பெருகி ஓடிவந்து உன்னை யணைந்த கண்ணப்பன் அன்பை என்னுள்ளத்தில் வெள்ளமாகப் பெருக்கு. தானுண்டதை உனக்களித்தான். வாய்க்கலசத்தால் உன்னை நீராட்டினான். தன்னை உன்னுள் மறந்தான். அவ்வாறு எனக்கியன்ற, யானறிந்த எளிய முறையில் உன்னை வழிபடுகிறேன். நான் அறியாமையாற் செய்யும் பிழைகளைப் பொறுத்தருள். நான் பெத்தன்; நீ சுத்தமுத்தன். என் ஊனக்கண்ணை யெடுத்து உனக்கு அப்புகிறேன். என் ஞானக்கண்ணைத் திறந்தருள்! என்னுயிரும் உடலும், உள்ளமும் அன்பினாற் கசிந்துருக வருள்!

## 2. அன்புறுதி

பொய்யன்பு தொடராப் புண்ணியனே, ஆனாய நாயனார் போன்று, ஊனுய நினைப்பொழிந்த அன்புக் குழலால்

"சிவோஹம், சிவோஹம்" என்று எப்போதும் இசைக்கும் இன்பத்தைத் தந்தருள். இறைவனே, உன்னினும் அருமையான பொருளில்லை. என்னுள்ளும் புறமும் உள்ள எதிலும் பற்றுது உன் மலரடியே பற்றி நிற்க வருள். திருமண நாளன்று மலரும் மணமும் பொதிந்த தமது மகள் கூந்தலையும் நீக்கி சிவத்தொண்டர் கேட்க உதவிய மானக்கஞ்சாற நாயனுர் போன்று எப்பொருளையும் உனக்காக நிவேதிக்க வருள். வறுமை வாட்டியும், தனது மனைவியின் தாலியை விற்றுக் குங்கிலியத்தொண்டு செய்தார் குங்கிலியக்கலய நாயனுர். கூலிவேலை செய்து பெற்ற நெல்லைக்கொண்டு அடியார்க்கமுது செய்வித்துத் தான் இலைகறிகளையுண்டும், வெறும் நீரருந்தியும் வருந்திய அரிவாட்டநாயனுரின் வைராக்கியத்தை எனக்கருள்.

## 3. மறவா நினைப்பு

கருதுவார்க் கெளியனே, எனக்குச் செல்வமும் சிறப்பும் பாராட்சியுங் கிடைத்தாலும், மூர்த்தி நாயனுரைப் போன்று அகப்பற்றின்றி உனது அன்பையே பற்றி, உலகில் உனதன்பு பரவவே வாழவருள். நாடோறும் என் மனமாகிய சந்தனக்கல்லில் சிவநாமமாகிய கட்டைகொண்டுரைத்து, அன்பாகிய சந்தனக் காப்பிட்டு உன்னை வழிபடச்செய்; செல்வத்தில் மயங்காது சிவத்தில் இயங்கவருள்! முருகனுர் மலர்த்தொண்டு செய்ததுபோலே, எனது நாட்களின் ஒவ்வொரு நொடியையும் திருநாம மலராக, அன்பிற் கோத்து, உலகிறைவனுகிய உனக்குச் சூட்டவருள். உருத்திர பசுபதி நாயனுர் ஸ்ரீருத்திரம் ஓதி முத்தி பெற்றுர்; நான் மந்திரமறியேன், தந்திரமறியேன், ஆகமமறியேன். 'நீ அன்பு' என்றறிவேன்; 'அன்பர்க்கெளியை' என்றறிவேன்.

அன்பினால் ஒரு பச்சிலை யீந்தாலும் பரமானந்தமளிப்பாய் என்றறிவேன். அன்பன், அன்பால், அன்பான உன்னை வழிபடுகிறேன். உன்னை மறவா வுள்ளன்பே யென்னுயிர்ப் பாகுக!

## 4. திருக்காட்சி யளித்தருள்!

உயிர்க்குயிரே, உலக வடிவே, அட்டமூர்த்தியே எல்லா வுடல்களும் ஐம்பூதக்கூண்டுகளே. அவ்வவற்றில் நீயே உயிர்க்குயிராயுள்ளாய். உனக்கு சாதிசமயத் தளைக ளில்லை. சமயங்கடந்த சுத்தனே, எனது சிதாகாசத்தில் நடம் புரியும் அருட்பெருஞ்சோதி யாண்டவனே, உன் கோயிலை நான் அறிந்துகொண்டேன். அது என்னுள் உள்ளது. என் சஹஸ்ராரமே சிதம்பரம். அக் கோயிலுக்குச் செல்ல ஆர்வமுற்று, 'சிவனே, அரனே, அம்பலவாணனே, சிற் சபேசனே, சுத்த சக்தனே' என்றலறுகின்றேன். 'நாளைப் போவேன், நாளைப்போவேன்' என்று சொல்லிக் காலம் கடத்துகின்றேன். அந்தோ! தூயனே, மனமாயங்களிற் கட்டுண்டு, மாற்றிப்பிறக்கவழியறியாது, ஆசையாணவ நீசனு யுள்ளேன். திருநாளைப்போவாருக் கருளிய சிவனே, உலகின் பழிப்புகளையும் கேலியையும் கவனியாது, இதோ உனது திருக்கோயில் முன் நிற்கிறேன். நந்தியை, 'விலகியிரும்' என்று சொல்லி நந்தனுருக்குக் காட்சியளித்த நடன ஜோதியே, என்பாசத்தளை யறுத்து, பசுத்துவத்தை நீக்கி உனது திருக்காட்சியளித்தருள். உனது அருட்கனலில் நான் மூழ்கிப் பழவினை நீங்கிப் புதுப்பிறவி யடைவேன்!

## 5. விருந்தோம்பல்

மழை யிருட்டு: காலங்கடந்த வேளை. ஒரு சிவனடியார் வந்து கதவைத் தட்டுகிறார். ஓடிப்போய்த் திறந்து அன்புடன்

வரவேற்கிறுன் இளையான்குடி மாறன், தமிழ் வேளாளன். அகாலம், 'என் செய்வோம்; வீட்டில் ஒன்றுமில்லையே' என்று மனைவியிடம் வருந்துகிறுன். 'வயலில் இன்று விதைத்த நெல்லை அரித்துவாரும்' என்கிறுள் மனைவி. இருட்டிற் சென்று தடவித் தடவி முளைக்கொண்ட நெல்லை ஒரு கூடையில் வாரி வருகிறுன் மாறன் அடுப்பிற்கு விறகில்லை; வீட்டுக் கூரை வரிச்சுக்களை முறித்துக் தருகிறுன். மனைவி அடுப்புப் பற்ற விட்டு, ஈர நெல்லை வறுத்து உரலிற் குத்தி, அரிசி புடைத்துச் சமைக்கிறுள். கொல்லைத்தோட்டத்தில் இருட்டில் தடவிச் சிறு பயிர்களைக் கொண்டுவருகிறுன் கணவன். மனைவி அவற்றைக் கறி சமைக்கிறுள்; சமயலாயிற்று. விருந்தாளி யார்? சிவனே! அடியார் வேடத்தில் வந்து அன்பரைச் சோதித்துப் பேரின்பமீந்தார்! இறைவனே, இவ்வாறு நான் அடியாரை எக்காலும் வழிபட மனவலிமை தந்தருள்.

## 6. கடவுட் பணிவு

கலியரும், கணம்புல்லரும் உனது கோயிலில் விளக்கேற்றிப் பணி புரிந்ததுபோல, நடமாடுங் கோயில்களிலெல்லாம் உனது அன்பு விளக்கையேற்ற ஆர்வமும், அறிவும் அளித்தருள். அதிபத்தர், தாம் பிடித்த மீனை, 'இது சிவனுக்கு' என்று குளத்தில் விட்டுவந்தார். தாம் பசித்தும், தமக்குக் கிடைத்த பொன் மீனை, 'இது சிவனுக்கு' என்று விடுத்தார். அதுபோலே காலவெள்ளத்திலே வினையென்னுந் தூண்டிலைப் போடுகின்றேன். அதிற் சிக்கும் நற்பயனென்னும் மீனை உனக்கே அர்ப்பிக்கவருள். என் வினைகளின் தீப்பயனை அனுபவித்தொழிக்கப் பொறுமை தந்தருள். எம்பெருமானே, உவர்பூசிய வண்ணனையும் உனதடிச்சேரன் என்று பணிந்த சேரமான் பெருமாளின் பணிவை எனக்கருள். எத்தனையோ மொழிகள், எத்தனையோ மறைகள் முழங்கும்

இவ்வுலகில் எதையென்று நான் கற்பேன்? எதைக்கேட்பேன்? உனது திருவடியே யென் புத்தகம். உன்னை வணங்குகிறேன். சேரமானுக்குச் சிலம்பொலித்தாற்போலே, என்னுள்ளே 'ஓம் சிவம்' என்னும் சிலப்பொலி கேட்கவருள். அரசர் கூற்றுவ நாயனார் பொன்முடி வெறுத்து உனது அடிமுடி சூடினாற்போலே, இவ்வுலகந்தரும் பேர் புகழ் செல்வச்செருக்கெல்லாம் மின்போலத் தோன்றி மறையும் கூத்தெனக்கருதி, எனது உள்ளத்தில் உனது திருவடியே புனைந்திருக்கவருள்.

## 7. சமய நடை

சித்தத்தை உன்பால் வைக்கிறேன். எனது ஆதாரத் தாமரைகள் மலர உனது சக்திக்கனலை மேலேற்றி, உனது முச்சுடர்க்கதிர்களால் சஹஸ்ராரத் தாமரையை மலர்வித்து, மதிமண்டலத் தேனுண்டிருக்கவருள். சஹஸ்ராரத்தில் சிவசக்திக் கலப்பினால் உண்டாகும் இன்பவெள்ளமே என் வாழ்வாகுக! உனது எல்லையற்ற அருட் கடலை நோக்கியே இந்த வாழ்வாறு அன்புடன் பணிந்தோடுக! அந்த ஆற்றின் பாட்டு, 'ஓம் சுத்த சக்தி, ஓம் சுத்த சக்தி' என்ற மந்திரவிசையாகுக! தூயனே, ஒவ்வொரு நாளும் எனது வினை மூட்டைகளும் சங்கற்ப விகற்பங்களும் உதிர்ந்து நான் ஒவ்வொரு நாளும் புதுப்பிறவியடைந்து, பிறப்பிறப்பில்லாத சுத்தான்ம நிலைபெற்றிருக்கவருள்; ஒவ்வொரு அணுவிலும் உனது திருமேனியைத் தீண்டவருள்; புறவேடங்களைப் பாராட்டாமல் உனது அன்பையும் அருட்பணியையும் அணிந்திருக்கவருள். உனது அன்புப் பேறே எனது நீறு. அதையே யான் உள்ளும் புறமும் பூசிக்கொள்ளுகிறேன்.

## 8. மனக் கோயில்

பூசலார் எம்பிரானுக்கு ஒரு பெரிய திருக்கோயில் கட்ட விரும்பினார்; மாந்தரிடம் பொருள் கேட்டார். ஒரு காசு

கூடக் கிடைக்கவில்லை. 'நீயாவது கோயிற் கட்டுவதாவது?' என்றும் ஊரார் நகைத்தனர். 'அரனே! உனக்கு செங்கற் கோயிலெழுப்பப் பணம் கிடைத்திலது. எனின் என்ன? இதோ, என் உளத்தில் உனக்குத் தங்கக்கோயிலெழுப்புகிறேன்' என்று தொடங்கினர்: வாய்மையென்னும் அடிப்படை கட்டினர்; தூய்மையென்னும் மேல்வரிசையமைத்தார்; அன்பென்னும் சந்நிதியமைத்தார்; அறிவென்னும் கோபுரமெழுப்பினர்; இடைவிடா தியானமென்னும் கருப்பக்கிரகம் அமைத்தார்; 'இன்பக்கடவுளே, இங்கெழுந்தருளுக' என்றார். அதே சமயத்தில் காடவராஜனும் காஞ்சியில் சிவன்கோயிற் கட்டினன். அதில் இலிங்கத்தை நாட்டும் நன்னாள் வந்தது. "என் கோயிலிற் குடிகொள் இறைவனே" என்று வணங்கினன் காடவன். "நில்; என் அன்பர் பூசலார் அன்பால் அமைத்த கோயிலில் இதோ எழுந்தருளுகிறோம்; பிறகு உனது கற்கோயிலில்" என்றான் இறைவன்; அவ்வாறே பூசலார் உட்புகுந்தான். காடவன் பூசலாரிடம் ஓடிவந்து பணிந்தான். "அடிகளே, தாங்கள் அமைத்த திருக்கோயில் எங்கே?" என்று வினவினன். "இங்கே" என்று இதயத்தைக்காட்டினர் பூசலார். கல்லாற் கட்டிய கோயிலினும் கருத்தாற் கட்டிய தூய கோயிலில் இறைவன் எளிதில் எழுந்தருளுவான். பொன்னும் பொருளும் வேண்டுவதில்லை, அன்பும் ஆர்வமுங்கொண்டு உங்கள் சித்தத்தில் தியானமந்திரம் எழுப்புமின்!

## 9. அடியார் வணக்கம்

அன்பிருக்கும் உள்ளத்தில் ஆண்டவன் உள்ளான். அடியார் குழுவில் ஆண்டான் உள்ளான். அப்பூதியடிகள் போலே திருவடியாரிடம் என் அன்பும் பணிவும் வளர்க! திருநாவுக்கரசின் பெயரால் அவர் மனை, மக்கள், அறநிலயங்

கள் அனைத்தையும் அழைத்தது போலவே, இறைவனே என் உடல் பொருள் ஆவி, சுற்றம், காட்சி, உணர்ச்சி, செயல், மொழி அனைத்திலும் நினது திருப்பெயரின் ஒளி திகழ்க! ஞானசம்பந்தப் பாடல்களை யாழில் மீட்டிய திரு நீலகண்ட யாழ்ப்பாணர் போல, உனது அருட்பாடல்களை எப்போதும் என் உள்ளம் நாடி வீணையில் மீட்டுக! நேய நாயனார் போன்று, நாவில் உனது திருநாமமும், நெஞ்சில் உனது திருவடிப்பற்றும், உடலில் உன்னடியார் திருத் தொண்டுமாக வாழவை; இறைவனே இவையே நான் பிறப் பெடுத்த பயன்!

## 10. வரம்

ஊன்சுமை நீத்தாள்; நுண்ணுடல் கொண்டு அன்பு செய்தாள் காரைக்காலம்மை; துன்பம் வரினும் அன்பிற் குறையாள்; ஒன்றே நினைந்தாள்; ஒன்றே யுணர்ந்தாள். அந்த ஒன்றே அறிவு, அறிஞன், அறிவிப்பான்! அந்த அறிவால் இருவினையும் வேரறுத்தாள்; கைலை யேறினாள். 'அம்மையே' யென்று இறைவன் வரவேற்றான். 'அப்பா' என்றடிபணிந்தாள். 'வரங்கேள்' என்றான். 'இறவா அன்பு, பிறவா வாழ்வு, மறவாச் சிந்தை, ஆடுந் திருவடிக்கீழ் பாடும் பேறு'- இவ்வரங்களையே கேட்டாள் அம்மை! நாமும் அத்தகைய அன்பு வரத்தையே கோருவோம்.

## 11. சிவ காமம்

'பரத்தையைக் கூடினீர். எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம்' என்றாள் திருநீலகண்ட நாயனார் மனைவி. உடனே பவகாமத்தை நீத்துச் சிவகாமரானார் நாயனார். மனத்தைச் சிவனிடம் ஊன்றிச் சிற்றின்ப விழைவின்றி

இல்லறத்தில் வாழ்ந்தார். காமம் விலகச் சிவ நாமஞ்சொல். பாசம் விலகப் பசுபதி யன்பு செய்!

## 12. அடியார்க் கன்பு

திருவடியார் தமது உடற்பற்றின்றி இறைப்பற்றுடன் வாழ்ந்தனர். மெய்ப்பொருள் உயிர்க்குயிரான பரம்பொருளே யென்றறிந்ததனாலன்றோ வஞ்ச வேடம்பூண்டு வாளுருவித் தமதுடலைச் சிதைத்த பகைவரையும் பழிவாங்காதொழிந்தனர் மெய்ப்பொருணாயனாரும், ஏனாதிநாயனாரும். நீறுபூசிய கொலையாளியையும் இவர் கூறு செய்திலர். அடியார் தம்மை அரனெனத்தொழுதார் விறன்மிண்டர். திருவாரூர் தேவாசிரிய மண்டபத்தில் எழுந்தருளிய அடியாரை வணங்காது சென்ற சுந்தரரை இவர், 'அடியார் கூட்டத்திற்குப் புறகு' என்றார். "அடியார்க்கும் அடியேன்" என்று சுந்தரர் திருத்தொண்டத்தொகை பாடியதும், 'இவர் அடியார் கூட்டத்திற்குள்' என்றார். 'உன்னடியார் நடுவுள்ளிருக்கும் அருளைப் புரியாய்' என்று வேண்டினார் மணிவாசகர். 'அன்பர் பணி' வேண்டினார் தாயுமானார். அன்பும், அன்பரும், அன்புச் சிவமும் ஒன்றே! அமர்நீதி நாயனார் திரு வடியார்க்கமுது செய்வித்துக் கோவணதானமீந்து முத்தி பெற்றார். தம்மால் இயன்றவரை உண்மை யடியார் பணி புரிக அதனால், அகந்தையொழியும், அன்பு விரியும், அருள் பெருகும்.

## 13. ஞானப் பால்

மனத்தை மாசற்ற பிள்ளைபோலாக்கு; ஆர்வப்பசி கொள். 'அம்மையே அப்பா' என்று ஆருயிர்த்தந்தையைக் கூவு. அவன் தனது ஞானப்பாலை யூட்டி யுன்னை யாட்கொண்டு ஞானசம்பந்தனாக்குவான். நீ கைத்தாளம் போட்டுத் துதி; அவன் பொற்றாளமளிப்பான். நீ காலால் நடந்து திருத்தலம்

புகு; உனக்கு முத்துப்பல்லக்கனுப்புவான். ஆனால் பல்லக் கேறவேண்டும் என்ற ஆசையுடன் அவனை வேண்டாதே. இறைவனைத்தவிர வேறொன்றும் விரும்பாதே. அவனை அடை; அனைத்தும் தம்மால் எய்தும். அவன் அன்பர்க் கன்பன், அடியார்க்கெளியன், உள்ளங் கவர் கள்வன், உன் உள்ளத்தொளிந்த கள்வன். அவனைக் கண்டுபிடி!

## 14. வணக்கம்

சம்பந்தர் 'அப்பரே' யென்றார். வாகீசர் 'அடியேன்' என்றார். எவ்வளவு தூய பணிவு, வணக்கம்! மதுரையில் சிவமுந் தமிழும் சீரோங்கப் பணிசெய்து, வெற்றி முழக்கத் துடன் அப்பரைக்காணப் பூந்துருத்திக்கருகே வந்தார் ஞான சம்பந்தர்; "எங்குற்றார் அப்பர்?" என்றார். "இங்குற்றேன்! இதோ, உனதடிகளைத் தாங்கிவரும் பேறுபெற்றேன்" என்று பல்லக்குச் சுமந்துகொண்டே சொன்னார் அப்பர். 'ஆ தாங்கள் இவ்வாறு செய்யத் தகுமோ?' என்றஞ்சி வணங்கி ஆர்வமுடன் அப்பரைத் தழுவிக்கொண்டார் சம்பந்தர். 'தரும், அரும், ஓம் சிவம்' என்று வணங்கினார் அப்பர்! அன்பும் வணக்கமும் அடியார்க்கழகு!

## 15. அற்புதங்கள்

அருள் பெறுக. அருள் அற்புதஞ் செய்யும். அற்புதஞ்செய்ய அருளைக் கூவாதே. அது பேராசையாகும். அருளுக்குப் பாத்திரமாயிரு. அடியார் அற்புதம் செப்படி வித்தையல்ல; ஆங்காரப் பொரிவாணமல்ல. அது திரு வருள் விளக்கம். ஏசுநாதர் பேயோட்டினார், பிணி நீக்கி னார். ஆணவப்பேயை ஓட்டு. ஆசை நோயை நீக்கு. திரு வருளுக்குப் பாத்திரமாவாய். அப்பர் அரவந்தீண்டிய அப்

பூதி மகனை யெழுப்பினர். சம்பந்தர் திருமருகலில் அரவந் தீண்டியிறந்த ஒரு காதலனை எழுப்பிக் காதலியின் சோகந் தவிர்த்தார். கூன்பாண்டியனின் வெப்புநோயைத் திருநீற்றல் தீர்த்தார். மனமாயத்தை நீறுசெய்து பூசினல் காமக்குரோதாதி வெப்புநோய்கள் தீரும். சமபந்தர் செத்துச் சாம்பலான பூங்கோதையை எழுப்பினர். திருவருட் சக்தி பாய்ந்தால் செத்தார் எழுவர். சுந்தரர் கடவுளைப்பாடி இழந்த கண்ணைப் பெற்றார். அருள்பெற்ற திருவடியார் தமிழ் அற்புதஞ் செய்தது!

## 16. மனச்சூலே

அகங்காரமே மனச்சூலே. அது வாழ்வைச் சித்திரவதை செய்யும். வஞ்சவகந்தையை விரட்டியடி. நெஞ்சத்தை இறைவனுக்கே யிடமாக்கு. அவனையே நினே. நினைப்பவர் மனமே அவன் கோயில். மனச்சூலே நீங்கும். வாக்குத் தெளியும். இறையொளி துலங்கும். அச்சமொழியும். அமுதம் பொழியும்.

## 17. மறை கதவு

உள்ளமே மறைக்காடு; அதனுட் சிவம் விளங்கும். அதைக் காணமுடியாமல் ஆணவக்கதவு மூடிக்கொண்டிருக்கிறது. 'உள்ளக் கடவுளே, உன்னைக் கண்ணாரக் காண வேண்டும்; கதவு திறந்தருள்' என்று இறைவனருளைக் கூவு. உனது உண்மை வடிவை மறைக்கும் கதவு திறக்கும். இதயச் சந்நிதி துலங்கும். இயல்வடிவான இறைவன் விளங்குவான்; உணரலாம்.

## 18. பித்தன்

அன்புப் பித்தேறிய அன்பர் பித்தன் இறைவன். தனக்கு அடிமையானரை, வேறு எதற்கும் அடிமையாக்க

மாட்டான் அவன்; மாயாசக்திகள் வந்து இழுக்கும்போது தனதன்பரைப் பிடித்திழுத்துத் தடுத்தாட்கொள்வான் பிடிவாதமாக. தாலிகட்டும் சுந்தரனை ஓலைகாட்டி யாட் கொண்டானன்றோ? தடுத்தாலும் அன்பரைத் தன் திரு வருட் கோயிலுள் அழைத்துச் செல்வான். அடியாரிடம் அவன் அன்பு வடிவாயிருக்கிறான். அதனால், "அடியார்க்கும் அடியேன்" என்றார் சுந்தரர்.

## 19. சிவ ஜோதி

நல்லூர் மணத்தில் ஓமத்தீ வளரும்போது, சிவநாமத் தீயை நினைத்தார் சம்பந்தர். அவர் பெண்ணைச் சேர விரும்பவில்லை. "நின்னைச் சேரும் பருவமிது" என்று காத லாகிக் கசிந்து கண்ணீர்மல்கிச் சிவனைக் கூவினார்; உலகிற் காகக் கடிமணத்தீ வளர்த்தார்; உள்ளே சிவனடி மணத்தீ வளர்த்தார். அந்த உட்கனல் எழுந்தது; சிற்சோதிமயமாகப் பரவியது. அச்சுடர் பந்த தொந்த வல்வினைகளைச் சுட் டெரித்தது; அன்பரை விழுங்கித் தன்மயமாக்கியது. ஊனை விழுங்கி, ஞானசம்பந்த வாழ்வீந்தது!

## 20. இதுவே பொருள்

சிவனடிக்கே ஆசைப்பட்டார் மாணிக்க வாசகர். உடையானுக்கே அடைக்கலமானார்; அவனடியைச் சிக்கெனப் பிடித்தார்; அன்பை யீந்தார்; இதயத்தில்லையில் ஊன்றி, தமது அன்புத்தோட்டத்திற் பூத்த அருளுணர்வு மலர்க ளால் ஞானநடத்தரசனை வழிபட்டார்; அருள்வாக்கிற் பூத்த மாணிக்கங்களை அள்ளியள்ளி இறைவன் கழலிற் பெய்தார். அவற்றை எழுதி வெளியிடவேண்டுமென்னும் எண்ணங் கூட அவருக்கில்லை. அத் திருவாசகங்களை அழகிய திருச் சிற்றம்பலவர் எழுதி சிற்சபைப் படியில் வைத்தேகினார்.

திருவாசகத்திற்குப் பொருள் கேட்டனர் தில்லை யந்தணர். "இதுவே பொருள்" என்று சிவவொளியிற் கலந்து மறைந்தார் மணிவாசகர். அன்பன் தன்னைக்கொடுத்தான்; அன்பனைத் தன்மயமாக்கினான் இறைவன். விண்மீன்கள் ஞாயிறிற் கலக்கும். ஆறு கடலிற் கலக்கும். பூமணம் காற்றிற் கலக்கும். அன்பு ஆண்டவன் அருளிற் கலக்கும். அன்பு செய்; ஆர்வங் கூறு; உடையானை யறி; உடல்பொருள் ஆவி யெல்லாம் அவனுடைமை யாக்கு; தனியகந்தையைப் போக்கு. அவனுணர்விற் கரைந்து கரைந்து, தான் தனதென்னும் ஆணவந் தேய்க! தீயுண்ட கற்பூரம்போலே அருட் பெருஞ்சோதியாய் இறைவனுடன் இருமையறக் கலக்கலாம். இதுவே திருவாசகப் பொருள்.

## 21. எங்கும் சந்நிதி

சிவனுக்கு ஐந்து முகமென்பர்: வடகிழக்கே ஈசானியம், பளிங்கு நிறம். கிழக்கே தற்புருடம், பொன்னிறம். தெற்கே அகோரம், கறுப்பு. வடக்கே வாமதேவம், சிவப்பு. மேற்கே சத்தியோஜாதம், வெண்மை. எம்முகந் திரும்பினும் இறைமுகங் காண்பர், இறைவனை உள் முகங்கண்ட ஞானிகள். எத்திசை திரும்பினும் அவன் கோயிலே காண்பர், நெஞ்சத்தைக் கோயிலாக்கிய நிமலர். ஔவைப் பிராட்டியார் ஒரு கோயிற் சந்நிதியிற் கால் நீட்டிப் படுத்திருந்தார். "கிழவீ, என்ன சந்நிதிக்கு நேராகக் கால் நீட்டிப்படுத்தாய்?" என்று அரற்றினான் பூசாரி. "பூசாரீ, சந்நிதி யில்லாத் திசையைக் காட்டு; அங்கே கால் நீட்டுகிறேன்" என்றாள் ஔவை. அப்பூசாரி திரும்பிய திசைதோறும் அவனுக்கு, "அதோ பார், இறைவன் சந்நிதியென்று" காட்டினாள் யோகினி ஔவை. அதேமாதிரி, குரு நானகர் மக்கத்தில் காபாவுக்கு நேரே, கால் நீட்டியிருந்தார்; ஒரு மௌல்வி முனிந்தார். "அப்பனே

அல்லாவின் சந்நிதியில்லாத இடம் காட்டு?" என்றார். எத் திசை அவன் கைகாட்டினும் அத்திசை சந்நிதியாயிருந்தது.

## 22. விறகிலே தீ

மாணிக்கச் சுடர் சாணைபிடிக்கும்போது தெரியும். மனம் உள்ளத்தில் உறைந்து தியானிக்கும்போது, ஆன்மச் சுடர் விளங்கும். கடையும் பாலில் வெண்ணெய் புலப்படும். அன்புறுதி நட்டுத் தியானிக்கும் உள்ளத்தில், உண்மை புலப் படும். ஆழியில் ஆழ மூழ்கி முத்தெடுப்பதுபோல, புறஞ் செல்லும் மனத்தையெல்லாம் உட்குவித்து உள்ளத்தில் ஆழ மூழ்கினால் பேரின்ப முத்துக் கிடைக்கும். அரணி கடைந்தால் விறகிலுள்ள தீ பளிச்சிடும். வேள்விக்கு வேண் டிய தீ விறகிலே யிருக்கிறது. 'நான் யார்?' என்னும் கேள்விக்கு வேண்டிய விடை நம்மிடமே யிருக்கிறது. நாம் வேண்டும் இன்பச்சுடர் நமது உள்ளத்திலே யுள்ளது. தியானசாதனத்தால் அதைப் பெறலாம்.

## 23. அன்புறுதி

அப்பர் முதிய வயதில் இமயமேறிக் கைலை செல்ல முயன்றார்; நடந்தார்; கால் தேய்ந்தது, தவழ்ந்தார்; கை தேய்ந்தது, புரண்டார்; உடல் நொந்தது; 'இன்னும் விடேன்' என்று மலையேறினார். "கைலைக்காவது, நீர் செல் வதாவது! திரும்பும்" என்றொரு துறவி கூறினார். "என்னை யாளுடை முதலவன் திருக்கைலையில் இருக்கும் காட்சி கண்டல்லது, இந்த வீழுடல் கொண்டு நான் மீளேன்" என்று உறுதிகொண்டார் அப்பர். அந்த உறுதியை வியந்து இறைவன் ஐயாற்றிற் கைலைக்காட்சியைக் காட்டினான். அது மட்டுமல்ல; உலகமெல்லாம் தான் அம்மையப்பனாக, சிவ சக்தியாக விளங்கும் காட்சியைக் காட்டினான். அன்பும்

உறுதியும், விடாமுயற்சியும் இருந்தால் உள்ளத்தில் மட்டு மன்று; உலகெல்லாம் பரமாத்மாவையும் அவனது அருள் விளையாடலையும் காணலாம்.

## 24. திருவருட் செல்வமே செல்வம்!

மந்திரிக்கோலத்துடன் பெருந்திரளான செல்வங் கொண்டு வந்த வாதவூரார், சிவகுருவின் கண்ணும் கையும் பட்டவுடனே மாணிக்கவாசகரானார்; அரசன், உலகம், அலுவல், அமைச்சு எல்லாம் மறந்தார். இறைவனைத்தவிர அரசனில்லை என்றுணர்ந்தார். இறைவன் பணியும் அடியார் பணியும் தமது பணியென்றுணர்ந்தார்; அதற்கே பொருள் என்று நினைத்தார். குதிரை வாங்கக் கொணர்ந்த பொருளைக் கோயில் கட்டிமுடித்தார்; அரசன் ஒறுத்தான்; பொறுத் தார். முடிவில் அவர் அன்பும் பொறுமையுமே வென்றன. திருவருட் செல்வருக்கு உலகோர் பாராட்டும் பணம், பட்டம், பதவி, அரசர் சலுகையெல்லாம் ஒரு பொருட் டல்ல. கடவுட் செல்வத்திற்காக அவர் உடல்பொருள் ஆவி உலகப்பற்றுக்களையெல்லாம் விடுவர். செல்வத்துட் செல்வம் திருவருட் செல்வமாம்.

## 25. அஞ்சாமை

பூவரசன் நாவரசனை அழைத்தான்; மந்திரியுடன் படைகளை யனுப்பி வரச்சொல்லி ஆணையிட்டான். "நான் அரனுக்கே ஆள், புவியரசனுக்கல்லேன். நாம் யார்க்குங் குடி யல்லோம்; நமனையஞ்சோம்; நரகத்தில் இடர்ப்படோம்; எப்போதும் நமக்கு இன்பமே. எந்நாளுந் துன்பமில்லை" என்றார் பரமனடியார். உடலையும் உயிரையும் மனத்தையும் அரனுக்கே தந்தார் அப்பர். தான் உடல், உயிர் மனம் என்ற சிற்றறிவையும் பற்றையும் விடுத்தார்; தன்னுட்

கோயில்கொண்ட பரமனையே பற்றி நின்றார். அவருக்கு நீற்றறையுங் குளிர்ந்தது. வேகும் சுண்ணமும் சிவக்கோல மாகத் தென்பட்டது. பகைவர் கொடுத்த விடமும் நீல கண்டனையே நினைக்கும் அடியாருக்கு அமுதமானது. "அஞ்சுவதியாதொன்றும் இல்லை. அஞ்சவருவது மில்லை" என்று தெய்வவுறுதியுடன் நின்ற அப்பரை வெறிமதயானை யும் வணங்கிற்று. "கற்றுணைப்பூட்டிக் கடலிற் பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சிவாயவே" என்று தியானித்தார். கழுத்திற் கட்டிய கல்லும் தெப்பமானது. இவற்றின் இரகசியம் என்ன? உலகம், உடல், செல்வம், அரசாட்சி, பட்டம், பதவி யென்று மனத்தைப்புறத்தே விடுத்து பந்த தொந்தங்களைச் சுமந்தலைவோனுக்கே உலகிடர்கள் உறுத் தும். உடலையே நினைந்து உண்மையை மறப்பவன் தனது இருவினைக்கல்லுடன் இடர்க்கடலில் மூழ்குவான். உண்மைக் கே உடல்பொருளாவி யீந்து அச்சமற்றிருக்கும் அறிவாளி க்கு, முக்குண மாயையால் வரும் இடர்க்குலங்கள் இடராகா. பரமனே உண்மை. அவனையே பற்றுக. இடர்களெல் லாம் தாமே விலகும். இறைவனை நம்பினோர் இடர்களுக் கஞ்சார்.

## 26. ஞானஸ்திரம்

உலகமாயை மோசஞஸ்திரம் விடுகிறது. 'நானார்' என் னும் வில்லை வளைத்து, 'நான் சுத்தான்மா' என்னும் ஞானஸ் திரத்தைத் (தன்னறிவுக் கணையை) தொடுத்து விடு. மதுரையை விழுங்கவந்த கடலை உக்கிர பாண்டியன் சிவ வேல் எறிந்து விரட்டினனும். உனது இயல்நிலையான சுத்தான்ம வுணர்வை விழுங்கவரும் பொய் மாயக்கடலை தவவேல் கொண்டெறிந்தடக்கவும். அன்புக்கணை துன்பக் கணையைத் தடுக்கும்.

## 27. ஆத்ம சக்தி

விருத்திராசுரனைக் கொல்ல, ததீசி முனிவர் வைரம் பாய்ந்த தமது முதுகெலும்பைத் தந்தார். மனித சமுதாயத் தைப்பிடித்த அசுரமாயத்தை வெல்ல நமது முனிவர் அருட் கனலேறும் ஆத்ம சக்தியைத் தந்தனர், வசிட்டரின் ஆத்ம பலத்தின் முன் கௌசிகன் படைவலி தோற்றது. வாயு அக்னி, இந்திரன் மூவரும் பிரமசக்தியின் ஒரு துரும்பைக் கூட அசைக்க முடியயில்லை. தசைவலி பொருது வெல்லும்; ஆத்மபலம் பொறுத்து வெல்லும். தசைவலி தளரும்; ஆத்மபலம் வளரும். சதைபலம் கொலை வழி; ஆத்ம பலம் அன்புவழி; அசுரபலம் அழிக்கும்; ஆத்மபலம் காக்கும். அசுரபலம் ஆளுவதுபோல வீழும்; ஆத்மபலம் அமைதியாக ஆளும்.

## 28. குண்டோதரன்

மீனாட்சி கலியாணத்தில் பண்டசாலையிற் புகுந்த குண்டோதரன் போல, மாந்தர் மனத்தில் பேராசை புகுந்துள்ளது. ஐம்புலன்களாற் காணும் உலகையெல்லாம் தந்தாலும் அதன் பசிதாகம் அடங்கா. அன்னபூரணி போட்ட அன்னக்குழியால் குண்டோதரன் பசி தீர்ந்தது. ஆத்ம பூரணியின் அறிவன்னமே மாய மனப்பசியை யொழிக்கும். வைகை நதி குண்டோதரன் தாகத்தைத் தீர்த்தது. தெய்வ அருட்பெருக்கே மனத்தாகந் தீர்க்கும்.

## 29. தண்ணீர்ப் பந்தல்

உலகம் பகைக்காடு. உடன் பிறந்தாரே உட்பகை கனன்று போர்த்தீ மூட்டுவர். இராசேந்திர பாண்டியன் தம்பி இராச சிங்கன், காடுவெட்டிய சோழன் மகளை மணந்

தான். உடனே சோழர்படையுடன் பாண்டிநாட்டை முற்றுகை போட்டான். இராசேந்திரன் திருவருளை நம்பிச் சிறுசேனை கொண்டு போர்கொடுத்தான். வெயிற்கொடுமையால், இருசேனைகளுக்கும் நா வரண்டது. அப்போது ஒரு சிவமுனிவர் தண்ணீர்ப்பந்தல் வைத்துப் பாண்டியன் சேனையின் தாகந்தணித்தார். சேனை தளர்வு நீங்கிப் பகைவரை வென்றது. வாழ்வு ஒரு பெரிய சதிக்கூடம், அமர்க்களம். உடன்பிறந்த மனமே தனக்குப் பகையாகி காமக் குரோதப் படைகளைக்கொண்டு வரும். எங்கும் திருவருள் தண்ணீர்ப்பந்தல் உள்ளது. அதில் அருந்தி சக்திபெற்றுப் பொருதினால் பகைவர் வீழ்வர். உண்மை வெல்லும்.

## 30. இரச வாதம்

பொன்னனையாள் ஒரு தாசி. திருப்பூவனக் கோயிலில் சிவன் முன் உருக்கமாகப் பாடி சுத்த நடனஞ் செய்வாள்; கிடைத்ததைக்கொண்டு அடியார்க்கமுது செய்விப்பாள்; சிவபெருமான் வடிவைப் பொன்னுருவில் வார்க்க வேண்டும் என்று அவள் அல்லும் பகலும் கருதி முயன்றாள். கையிற் பணமில்லாது வருந்தினாள். ஒருநாள் ஒரு சித்தர் எழுந்தருளினார். அவருக்கு அமுது செய்வித்தாள் பொன்னனையாள். சித்தர் அவள் கவலையையறிந்து வீட்டிலுள்ள ஈயம் பித்தளைப் பாத்திரங்களையெல்லாம் கொண்டுவரச் சொன்னார். அவற்றின் மேல் திருநீறு தூவினார். 'இவற்றை உருக்கிப்பார்' என்று மறைந்தார். உருக்கியதும், அத்தனையும் தங்கமாயின. இறைவனுக்குப் பொற்சிலையமைத்துப் பெருமகிழ் வெய்தினாள் உருத்திரகணிகை. நீ எச்சாதி குலமானாலுஞ் சரி; உனது மனம் புத்தி சித்தம் அகங்காரம், உடல் உயிர் எல்லாம் பரமாத்ம சித்தன் முன்னே வைத்து

விடு. அவன் அவற்றில் தனது திருவருட் பொடியைத் தூவுவான். அன்புக்கனலில் அவற்றை உருக்கு. உருக வுருக அவை மாசற்ற பொன்னாகும். அனைத்தையும் கொண்டு அவனது பொன்னுருவாக்கி உள்ளக்கோயிலில் வைத்துத் தொழு.

## 31. கல்மன யானை

அபிடேக பாண்டியன் காலத்திலே மதுரையில் ஒரு சித்தன் வந்தான்; பல அற்புதங்கள் புரிந்தான். சித்தரே 'இந்தக்கல் யானையைக் கரும்புண்ணச்சொல்லும் பார்ப் போம்' என்றான் பாண்டியன். 'யானையே, உண் இக்கரும்பை' என்றான் சித்தன். அவ்வாறே கல்யானை உயிர்க்கரும் யானைபோ லுண்டது. இக்காயாபுரியில் ஒரு சித்தன் இருக் கிறான். அவன் அற்புதன். கல்மதயானையான உள்மனத்திற்கு, 'திருநாமம்' என்னும் கட்டிக்கரும்பை ஊட்டச் சொல்லு.

## 32. காலவேடன்

ஒரு அந்தணன் மதுரைக்கு மாமனார் வீட்டிற்குப் போகும் வழியே தனது மனைவியுடன் ஒரு ஆலமரத்தின் கீழே தங்கினான். மனைவியை ஆங்கிருத்தித் தான் தாகத் திற்குத் தண்ணீர் கொண்டுவரப்போனான். அந்த ஆலமரத் தில் முன்பு யாரோ விட்ட அம்பு சிக்கிக்கொண்டிருந்தது. காற்றின் விசையால் அது பெண்ணின் அடிவயிற்றில் சுறீ ரென்று பாய்ந்தது. அந்தணன் வந்தான், அந்தோ! மனைவி பிணமாய்க் கிடந்தாள். அங்கு தற்செயலாக ஒரு வேடன் நிழலுக்கொதுங்கியிருந்தான். அவனே மனைவியைக் கொன் றவன் என்று குற்றஞ் சாட்டிக் குலோத்துங்க பாண்டிய னிடம் முறையிட்டான் அந்தணன். பாண்டியன் வேடனைச் சிறையிட்டான். "ஐயோ யான் யாதுமறியேனே" என்று

முறையிட்டான் வேடன். பாண்டியனுக்கு உண்மை விளங்கவில்லை. திருவருளாணையால் ஒரு கலியாண வீட்டிற்கு அந்தணனுடன் மாறுவேடம் பூண்டு சென்றான். வதுவரர் மணையில் உட்கார்ந்திருக்கின்றனர். அப்போது பாண்டியன் அருகே ஒருவன் "இம்மணமகன் உயிரைக் கவர்வோம்" என்றான். இன்னொருவன் "ஆள் கொட்டாப்புளிமாதிரியிருக்கிறானே; எப்படிக் கொல்லமுடியும்?" என்றான். "இன்று காலை காற்றின் விசையால் ஆலமரத்தம்பு அந்தப் பார்ப்பினி வயிற்றிற் பாய்ந்து உயிர் வாங்கியதுபோலே, அதோ நிற்கும் மாடு கயிற்றை அறுத்துக்கொண்டு இந்த மாப்பிள்ளையைக் கொம்பினால் குத்திக் கொல்லச் செய்வோம்" என்றான் முன்னவன். இருவரும் எமதூதர். மன்னன் கேட்டான். அந்தணன் கேட்டான். ஐயம் நீங்கியது. பாண்டியன் வேடனை விடுதலை செய்தான். அந்தணனுக்கு மறுமணம் நடத்தினான். உலக வாழ்வென்னும் ஆலமரத்தின் கீழ் இருக்கிறோம். காலன் கணை அதில் எப்போதும் நம்மைக் குறிவைத்திருக்கிறது. காற்றுக் கொஞ்சம் பிசகினால் கணை நம்மைக் கொல்லும். உள்ளமட்டும் பழிபாவங்களுக்கு அஞ்சி இன்னும் தீவினை பெருக்காது தூயராக வாழுவோம்.

## 33. மெய்கண்டார்

இரண்டாண்டிலேயே மெய்கண்டார் மனப்பக்குவம் பெற்றார். அவருக்குப் பரஞ்சோதிமாமுனிவர் சிவஞான போதம் உபதேசித்தார். இறைவனாணையால் வினையுடல் கொண்டியங்கும் ஆன்மா, ஆசையாணவ மாசறுத்து, அன்னியமின்றி, அன்பினாலுருகி, அருளொளி பெற்று, அறிவு மலர்ந்தே அரன் கழல் சேரும் என்பது சிவஞான

போதச் சுருக்கம். மெய்கண்டார் அன்பருக்குச் சிவஞான போதம் பயிற்றிக்கொண்டு திருவெண்ணெய் நல்லூரில் இருந்தார். அப்போது அவரது குலகுருவான அருணந்தி சிவாசாரியார் ஆங்கெழுந்தருளினார். அவர் தாம் சகலாகம பண்டிதர் என்னும் பெருமை கொண்டவர். எல்லாரும் சென்று அவரை வணங்கினர். மெய்கண்டார் மட்டும் எட்டிப்பார்க்கவில்லை. "இவன் ஏன் நம்மை வந்து வணங்கவில்லை; அறிவோம்" என்று அருணந்தியார் மெய்கண்டார் இருக்குமிடம் சென்றார். அப்போது மெய்கண்டார் மாணவருக்கு ஆணவமலத்தைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தார். குலகுருவை கவனிக்கவில்லை. குலகுரு மனம் பொறாது, செருக்குடன், "ஆணவமல வடிவம் எவ்வாறிருக்கும்?" என்று படபடப்பாகக் கேட்டார். மெய்கண்டார் ('உம்மாதிரிதான் இருக்கும்' என்னுங் குறிப்புடன்) அருணந்தியாரைச் சுட்டிக்காட்டித் தமது பணியே குறிப்பாயிருந்தார். குலகுருவிற்கு உணர்வு வந்தது. மெய்கண்டார் அடிபணிந்து சிவஞானபோதம் பெற்று அதற்கு சிவஞான சித்தியார் என்ற விரிவுரை யெழுதினார். நிறைநிலை வணங்கும். அறிவிற்கேற்ற பணிவு வேண்டும்.

## 34. சிவஞான யோகிகள்

முக்களாலிங்கன் பள்ளிக்கூடத்திலிருந்து வருகிறான். சில தம்பிரான்கள் எதிர்ந்தனர். சிறுவன் மனம் அத்துறவிகளிடம் ஈடுபட்டது. அவரடி வணங்கினான். 'அடிகளே வருக,' என்று அவர்களைத் தன்னில்லத்திற்கு அழைத்து வந்தான். "அம்மா இதோ அடியார்கள் வந்திருக்கிறார்கள்" என்னுமுன்னே மயிலம்மை "என் செல்வமே நல்ல காரியம் செய்தாய். அடியார் இங்கே அமுது செய்யட்டும்" என்றாள்.

அவர்களை மகிழ்வுடன் வணங்கி வரவேற்றாள். அறுசுவை யுணவளித்தாள். தம்பிரான்கள் அம்மையாரை "ஆனந்தக் கூத்தர் (கணவன்) அகமகிழத் தொண்டு செய்யும். கற்புடைய அருந்ததியான மயிலம்மை, அடியார்க்கு இனிய அமுதளித்தாள். இச்செல்வி வாழ்க" என்று நன்றி கூறினர். முக்களாலிங்கனில் ஒரு இளம் முனிவனைக் கண்டனர். அவனைத் தம்முடன் அழைத்துச்சென்று மெய்யறி நூல்களைப் பயிற்றினர். இந்த முக்களா லிங்கனே சிவஞான யோகிகள். இவர் தமிழுக்கும் சைவத்திற்கும் சொல்லாலும் எழுத்தாலும் செய்த தொண்டுகள் அளப்பரிய. அற்புத நாவலர், செந்தமிழ்க்கவி, கசடறு புலவர், வீரத்துறவி, சிவஞானபாடியம் இயற்றிய தவஞானச் செல்வர். பிள்ளைப் பருவத்திலே முனிவரிடம் மனம்பற்றித் தாமே முனிவரானர்.

## 35. திருக்குல வுய்வு

இறைவனே, எல்லாரும் உனது பிள்ளைகளே. ஒரு வீட்டில் தாயார் வீடு பெருக்கும்போது அவளைத் தோட்டி யென்று தள்ளிவைப்பதில்லை. தெருக்கூட்டும் உனது பிள்ளையைமட்டும் மாந்தர் இழிவாக நினைப்பதேன்? சாதி சமயக் கொடுமைகளால், மூட நம்பிக்கையால், ஒதுக்கப் பட்டும், ஒடுக்கப்பட்டும் வருந்தும் எமது உடன்பிறந்தாரை முன்னேற்ற ஒரு சக்தி தந்தருள். வேற்றுமைப்பித்தம் ஒழிய மாந்தர் மனத்திற் சமரஸ வுணர்வைப் பெய். நந்தனர் உதித்த காலத்திலேயே தீண்டாமைக்குச் சாவுமணியடித் தாயிற்று. சிவமாக நின்று நந்தனுள்ளங் கவர்ந்ததுபோலத் திருமாலாக நின்று திருப்பாணாழ்வாருள்ளத்தைக் கவர்ந்தனை. பாரமாய பழவினைப்பற்றறுத்து அவரை நின் வாரமாக்கினை. அன்பன் அறிவுட் புகுந்தனை. 'ஹரி நாராயண, ஹரி

நாராயண' என்று யாழுடன் திருநாம சங்கீர்த்தனம் செய்வதே தொழிலானார் பாணாழ்வார். அறியா மாந்தர் சாதியுணர்வால் அன்பனை வருத்தினர். நீ அன்பனை மதித்தனை. லோகசாரங்கமுனிவர் முதுகிலேறி திருப்பாணன் நினது சந்நிதி வரச்செய்தனை. அன்பினாற் கண்ணீர் பெருகி, மனமுருகத் துதித்து நிற்கும் அடியானை உனது திருவடியிற் சேர்த்துக் கொண்டாய். இறைவ, உலகையும் உயிர்களையும் படைத்த நினக்குத் தீண்டாமை, வேண்டாமை, பாராமை என்ற அசூயை இல்லை. ஏனிந்த மனிதர் இன்னும் பேதபுத்தி காட்டுகின்றனர்?

## 36. பெற்றான்சாம்பான்

உமாபதி சிவாசாரியார் சமரஸ சிவஞானி, கொற்றங்குடியில் வசித்த தில்லைவாழ் அந்தணர். சித்தாந்த சாத்திரங்களைப் பல அரிய நூல்களால் விளக்கியவர். உண்மைநெறி விளக்கம், திருவருட்பயன், சிவப்பிரகாசம் முதலிய அரிய நூல்களின் ஆசிரியர். அரனடியாரெல்லாம் ஒருகுலம் என்னும் கொள்கையர். ஒரு நாள் இவரிடம் பெற்றான்சாம்பான் என்னும் ஒரு திருக்குலமணி, ஒரு ஓலை கொடுத்தான். அதைப்படித்தார் ஆசாரியார்: "அடியார்க்கெளியவன், சிற்றம்பலவன், கொற்றங்குடியார்க்கு எழுதிய சீட்டுப் படிமிசை பெற்றான் சாம்பனுக்கு முத்தி கொடுக்க முறை." என்று திருக்கட்டளை எழுதப்பெற்றிருந்தது. உமாபதி சிவனார் முகமலர்ந்தது, சாம்பானை அன்புடனேற்று சித்தாந்த முத்திநெறி காட்டினார். இவ்வாறு இப்பெரியார் சிவஞானத்தை சாதிவேறுபாடின்றி விரும்பிவந்தவருக்கெல்லாம் வழங்கினார்.

## 37. பெரியார் சமநோக்கு

திருவியலூர் ஐயாவாள் சிராத்தத்தன்று வந்த திருக்குலத்தானுக்கு நல்லுணவளித்தார். பார்ப்பனர் செய்த கிளர்ச்சியைத் தமது அருள் வல்லபங்காட்டி யடக்கினர். கங்காஷ்டகம் பாடிக் கங்கையை வரவழைத்தார். சங்கரரோ சமரஸம் பேசிய திருக்குலனைப்போற்றி மனீஷாபஞ்சகம் என்னும் சர்வாத்ம ஸமரஸப் பாட்டைப் பாடினர். தாயுமானர் மன்னன் தமக்கீந்த சால்வையைக் குளிரால் வருந்திய ஒரு திருக்குல மாதிற்கீந்தார், "ஏன்?" எனக் கேட்டான் மன்னன். "மன்ன, சால்வையை அகிலாண்டேச்வரிக்கன்றோ கொடுத்தேன்'' என்றார் சமரஸ ஞானியான தாயுமானர். அனைத்தையும் தன்போல் மதிப்பவன் அறிஞன். இறைவனே, அத்தகைய சமநோக்கை எமக்கருள்! நாட்டில் ஒற்றுமை பெருகுக. நாங்கள் உனது ஓர்குல மைந்தராக வாழும் நாள் விரைவில் வருக!

## 38. அருணகிரிநாதர்

'குமரகுருபர முருகசரவண' என்றெப்போதும் தியானிப்பவர் அருணகிரி. விதிவசத்தால் இளமையில் விலைமாதர் வசமாகிப் பெருநோயும், வறுமையும், ஊர்ப் பழியுஞ் சுமந்தார். உடல்வாழ்வை வெறுத்தார். வல்லாள ராஜன் கோபுரத்திலிருந்து 'முருகா சரணம்' என்று முறையிட்டுத் தற்கொலை செய்துகொள்ளக் கீழே குதித்தார். முருகா, நீ அன்பனைக் காத்தனை. காட்சியளித்தனை. வினையொழித்தனை. அரிவைப்பித்தனை அறிவுச் சித்தனாக்கினை. புதுவாழ்வளித்தனை. அருள்வாக்கீந்தனை. மோனத்திருத்தி ஞானந்தந்தனை. இன்பவெள்ளமே தமிழிசையாக நடமாடிப் பொசிவதுபோலே உனதருளால் அருணகிரியின் வாக்கு

எமக்குத் திருப்புகழை யீந்தது. உனதருள் வந்தபின் அருணகிரியின் ஆசைத்தினவும், அகமாயமும் ஒழிந்தன. வேசையர் மினுக்கும் முயற்சியும் வீணாயின. முருகா, எமது மனத்தைப்பற்றி யலைக்கும் அரக்கரை உனது சுடர் வடிவேலாற் குத்தியெறி. முருகா, முருகா, முருகா!

## 39. திருமந்திரம்

நீண்டகாலம் நிஷ்டையிலிருந்து மோனத்தில் உதித்த யோகானுபவத்தைத் திருமூலர் திருமந்திரமாக எழுதினார். அது பூரணயோக சாத்திரம். ஒவ்வொரு மந்திரமும் தியானத்திற்குரியது. 'உள்ளத்தினுள்ளே யுணரும் ஒருவனை, உள்ளம் விட்டோரடி நீங்கா வொருவனை, உள்நாடி, ஒளிபெற நோக்கினால், கண்ணாடிபோலக் கலந்து நின்றானே. தன்னையறியத் தனக்கொரு கேடில்லை' என்னும் திருமந்திர வுண்மையைச் சாட்சாத்கரிக்க வேண்டும்.

## 40. பட்டினத்தார்

பட்டினத்தாரின் மனத்துறவு என்று வருவதெனக்கு, சிவனே? மகன்போல் வளர்த்த மருதவாணர் விட்டு மறைந்த காதற்ற ஊசியைக் கண்டதும் பட்டினத்தாருக்கு வைராக்கியம் பிறந்தது. 'காதற்றவூசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே' என்னும் உண்மையை உணர்ந்து உலகைத் துறந்தார். எமது நண்பர் உறவினர், ஊரார் வீடுகளில் பிணப் பறை கேட்கிறோம். தாறுபோட்ட வாழைமாதிரி மக்களைப் பெற்று முதிர்ந்தோர் பல இடர்களால் வாடிச் சோர்ந்து வீழ்வதைக் காண்கிறோம். மயானத்திற் பிணம் எரிந்து சாம்பராவதைக் காண்கிறோம். இன்னும் வைராக்கியம் வரவில்லையே! சுற்றத்தார் செய்த தடைகளையும், இகழ்வையும், இழிவையும் பொறுத்துப் பட்டினத்தார் மனைவாழ்வை

விட்டொழித்தார். கட்டறுத்தார். தன்னுள்ளே தானாக ஊன்றினர். இருக்குமிடந்தேடி வந்த பிச்சையுண்டார். திருவிடைமருதூர் கீழைக்கோபுர வாசலில் இருந்தார். ஒரு பிச்சைக்காரன் ஒரு நாள் அடிகளிடம் அன்னங்கேட்டான். 'ஐயா யான் கோவணமே சுமையென்றிருக்கிறேன். மேலைக் கோபுர வாசலில் ஒரு குடும்பியிருக்கிறான், போம்' என்றான். அக்குடும்பியே பர்த்ரகிரியார். அத்துறவிக்குக் குடும்பம் எது? ஒரு நாயும், திருவோடும். பட்டினத்தார் சொன்னதை அவர் கேள்விப்பட்டதும், நாய்மேலே திருவோட்டை யெறிந்து, "இவற்றாலல்லவா நம்மைக் குடும்பியென்றார் குருநாதர்!" என்று எல்லாப் பற்றுகளையும் அறுத்தார். முற்றத் துறந்தார்க்குப் பற்றுண்டோ? அடியார் உறவும், அரன் பூசை நேயமும், அன்புமன்றிப் படிமீதில் வேறு பயனுளதோ?

## 41. தாயுமானவர்

சச்சிதானந்த சிவமே, தமிழ் உபநிடதம் பொழிந்த ஞானானந்தப் பெருமானை தாயுமானவர் உபதேசித்த உள் மோனம் எனக்கெய்துக! 'சும்மா இரு' என்று குறித்தார் மூலன் மாபில் வந்த மோன குரு. அதுவே தாயுமானார் ஞானசாதனமானது. திண்ணை தேய்க்கும் சோம்பலல்ல சும்மா இருப்பது; கருவிகரணமடங்கிச் சும்மா இருக்கும் யோகி சோகமோகப் புயலலைக்காத ஞானமணி விளக்கு. ஆசையாணவக்காட்டைக் களைந்து, நெஞ்சைத் திருத்தி, மோனவிதையூன்றி, அன்புநீர் பாய்ச்சி, துரிய சிவானந்த போகம் விளைத்தார் தாயுமானவர். சித்தமடங்கி, உள்ளே மோனியாகி உலகில் உலாவினர் தாயுமானர்—பற்றற்று. சொக்கநாத நாயக்கர் ஊழியம் அவரைக் கட்டுப்படுத்தவில்லை. இராணி மீனாட்சி முருகார் திருவழகனை இந்த

ஞானவூழியனிடம் மோகங்கொண்டாள். 'என் அரசெல்லாம் நினதே. எனது கருத்தும் காதலும் உனதே' என்று ஆசை காட்டினாள். ஓசைப்படாமல் ஓடித்தப்பினார் தாயுமானவர். தாயுமானவர் இல்லறத்திருந்தார். கனகசபாபதியென்ற ஒரு மகனைப்பெற்று வளர்த்து ஆளாக்கினார். தனது கடமை தீர்ந்ததும் துறவுபூண்டு, தியான நிட்டையும் ஞானப்பாடலுமாக வாழ்ந்தார். பேசாப் பெருமை பெற்றார். தன்னுட் பொங்கித்ததும்பும் பூரணஜோதி வெள்ளத்தை அனுபவிக்க 'சேரவாரும் சகத்தீரே' என்று உலகையும் அழைத்தார். காடும் மேடும் சுற்றித்திரியும் மனக்குரங்கை யடக்கி, உள்மௌனியாக, பந்தந்தொந்த பாசவினையறுத்து, நான் முக்குணங்கடந்த பக்குவ ஞானியாக வருள், தேசோமயானந்தனே!

## 42. அருட்சோதி வள்ளலார்

தில்லையப்பனே, பொதுநடத்தரசே, சிற்சபை முதல்வனே, உனது அருட்பெருஞ்சோதியைப் பெற்று, உலகில் உயிரிரக்கத்தையும், சமரச சன்மார்க்கத்தையும், ஆன்மநேய வொருமைப்பாட்டுரிமையையும் நிலைநாட்டவே அருட்பா அருவியாக வாழ்ந்த இராமலிங்க வள்ளலார் உபதேசங்கள் எனது வாழ்வில் ஒளிர்க! வள்ளலார் அருளறிவாளர், முருகனைத் தியானித்து முற்றறிவு பெற்றவர். தில்லையப்பனருளால் அருட்சோதி சக்தி பெற்றவர். கடவுட் காதலர். பிறவித்துறவி. கலாம் விளைக்கும் சாதிமத நெறியை ஒழித்து, அருட்சோதி நெறியை உலகில் நாட்டவந்த புதுயுக தீர்க்கதரிசியே வள்ளலார்.

சுற்றத்தார் அவருக்குத் திருமணம் செய்தனர். பள்ளியறையில் கிளிபோல இளமனைவி முன்னிற்கிறாள். வள்ளலார் என்ன செய்கிறார்? திருவாசகத்தைப் படித்து, திருவடி

பற்றி உருகி தியானித்திருக்கிறார். இறைவனுடன் உயிர்க் கலப்பெய்திய ஞானிக்கு உலகந்தரும் ஊன்புணர்ச்சி யுவக் காது. அவர் சிந்தை முழுதும் தந்தையான, தில்லைச்சித்த சிகாமணியிடமே பதிந்திருந்தது. 'என்னை விடமாட்டாய். நான் உன்னை விடமாட்டேன்' என்று இதய நடராஜனை சுத்தனைப்பற்றி உள்ளபடி, உள்ளபொருள், உள்ளவனாய் நிறைந்தார். அந்த நிறைவின் பெருக்கே அருட்பா. அதை அன்று பண்டிதர் இழித்தனர். திருவருளிச்சை நடக்கட்டும் என்றிருந்தார் வள்ளலார். இன்று திருவருட்பா உலக சமய நூல்களில் முன்னணி வகிக்கிறது. எவ்விதமான இடர்க் கட்டையும் இல்லாமல் ஒவ்வொருவரும் அவரவர் ஞான மன்றமான இதயத்தில் நடம்புரியும் இன்பச்சோதியை, சுத்தான்மச்சோதியை, அருட்பெருஞ்சோதியைக் கூடி உயிரிரக்கங்கொண்டு ஒற்றுமையாக வாழவேண்டும் என்று வள்ளலார் போதித்தார். அதற்கே வடலூரில் சத்திய ஞானசபை நிலைநாட்டினர்.

'இச்சாதி சமய விகற்பங்களெல்லாம் தவிர்த்தே, எவ் வுலகுஞ் சன்மார்க்கப் பொதுவடைதல் வேண்டும்; என்று வள்ளலாருடன் யானும் முறையிடுகிறேன். உலகில் சுத்தான்ம சமரஸத்தை, அருட்சோதி யுணர்வை, கருணை வாழ்வை விளக்கவருள்!

நூல் ரு அடியார் நினைப்பு

முற்றிற்று

---

நூல்—சு

# பக்தி பரவசம்

---

## 1. நம்மாழ்வார்

மோனம், மோனம்—பதினாறாண்டுகள் அசைவற்ற மோனதியானத் தமர்ந்தார் நம்மாழ்வார். அற்றது பற்று. அமைதி கூடியது. ஆதாரம் மலர்ந்தது. உள்ளந் திறந்தது. அங்கு நாராயணனைக் கண்டார். அவனுட் கலந்தார். பாலும் சுவையும்போலத் தானும் அவனும் என்றுணர்ந்தார். உள்ளே கண்ட நாரணனை உலகெங்குங் கண்டார். நின்ற குன்ற மெல்லாம் நெடுமால் கண்டார். கருமுகிலிற் கார்வண்ணனைக் கண்டு பரவசங்கொண்டார். பசுக்கூட்டத்தில் மாதவனைக் கண்டார். தாமரையில் அவனது திருவிழிகளைக் கண்டார். காண்பதெல்லாம் கண்ணன், அவனே காண்பான், காட்சி. 'எனதாவியுட் கலந்த பெருநல்லுதவிக்குக் கைம்மாறு என தாவி தந்தொழிந்தேன். எனதாவியார்? யான் யார்? தேனும் பாலும் நெய்யும், கன்னலும் அமுதுமொத்தே, தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம்! 'நின்ன லால் இலேன் யான். என்ஆவி நீ. வீட்டின்பம் நீ; ஊனில்வா முயிர் நீ' என்றுணர்ந்தார், அவருள்ளே அருளூற் றெழுந்தது. அறிவொளி கிளர்ந்தது. நம்மாழ்வார் கற்றதும் பெற்றதும், கண்டதும் விண்டதுமான அந்த உட்கல்வியை, கடவுட்கல்வியை என்னுள்ளே தூண்டியருள், அந்தராத்ம னான நாராயணனே! அமர்ந்த தண்ணீர் தெளியும். ஆடா விளக்கு நன்றாய் நிலவும். அலையாது, உள்ளடங்கி யமர்ந்த சித்தத்தில் தெய்வ வொளி நிலவும். மோனவுள்ளத்தில் ஞானக்கதிர் உதிக்கும். பொறிவா யடங்கினால் திருவாய்

மலரும். இறைவனே, இவ்வுடல் திருப்புளி. இதயம் அதி லுள்ள முழை. அதில் உன தருளுடன் கலந்து, தேனும் பாலும்போல உன்னில் யான் கரைந்து இன்புறச்செய்!

## 2. மதுரகவி யாழ்வார்

மதுரகவி யாழ்வார் புலவர், புங்கவர், யோகி, கவி. இறைவனே, உன்னுடன் இரண்டறக்கலந்த யோகியாகிய நம் மாழ்வார் பாசுரத்தை அவர் மூலம் உலகிற்கீந்தாய். மதுரகவி யை நம்மாழ்வாரின் யோகக்கனல் இழுத்து ஆண்டுகொண் டது. அத்தைத் தின்று ஆங்கேயிருக்கும் சுத்தான்மநிலையை இருந்து காட்டிய குருவைச் சரண்புகுந்தார் மதுரகவி. 'தேவு மற்றறியேன்; குருகூர் நம்பி பாவின் இன்னிசை பாடித் திரிவனே;' என்று மதுரகவி நம்மாழ்வார் பாசுரங்களை உலகிற்குத் தருவதைத் தமது வாழ்வின் தவப்பணியாகக் கொண்டார். அதுபோல எனது நாட்டில் இன்றுலவும் தெய் விக மகான்களின் திருவாக்குகளைச் சேர்த்து யான் உலகிற் களிக்கும் பேறு பெறுக. அவ்வப்போது எனது ஐயங்களைத் தீர்த்து அறிவொளி யளிக்கும் சத்குருவை எனக்கருள்.

## 3. விஷ்ணு சித்தர்

பாண்டியன் சர்வமத சங்கங் கூட்டினன். பலசமயப் புலவர் அதிற்கூடி வாதம்புரிந்தனர். விஷ்ணுசித்தர் கற்ற தும் கண்டதும் நாராணன் மலரடியே. அதில் அடைக்கலம் புகுந்து உய்யும் வழியையே அவர் சபையில் விளக்கினர். பண்டிதர் வியந்தனர். பாண்டியன் பணிந்தான். யானைமேல் ஆழ்வாரை யேற்றிச் சிறப்பாகப் பவனி செய்தான். அப் போதும் ஆழ்வார் சித்தம் ஆண்டவனிடமே யிருந்தது. விண்ணில் நாராயணனைக் கண்டார். அடியாருக்குரும் ஆண்ட

வனுக்கும் வழிவழியாகத் தொடர்பு ஏற்பட்டு அன்பு பெருகி உலகில் பக்திமார்க்கம் சிறந்தோங்கப் பல்லாண்டு பாடினர். 'அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு' என்று முழக்கினர். இறைவனே, மற்றப் பாசங்களையெல்லாம் சுட்டெரி! உலகச் சபையில் உன்னையே உண்மையெனக் கொண்டாடவருள். உனது அன்புத் தொடர்பை வலுவாக்கு. என்னுள் நீயும் உன்னுள் நானும் வாழும் ஐக்கிய வாழ்விற்குப் பல்லாண்டு, பல்லாண்டு, பல்லாண்டு!

எனக்கு நீதான் பிள்ளை. என் சுத்த மனத்தொட்டிலில் உறங்கு. தாலாட்டுகிறேன். நாரணக்குழந்தையே, என் அன்புத் தோட்டத்தில் விளையாடு. அதிற் பூக்கும் ஆர்வ மலர்களை உனக்குச் சூட்டி அழகு செய்கிறேன். கண்ணா, கண்ணா, என்னுயிரே, உன்னை எனது மகிழ்ச்சியாற் கொஞ்சுகிறேன், வா, வா, வா! கண்ணா........!

## 4. ஆண்டாள்

இந்த ஜீவாத்மா ஆண்டாள். இந்தப் பஞ்சபூதக் கூட்டிலிருந்து, 'கோவிந்தா, புருடோத்தமா, கண்ணா, காதலா' என்று கிளிபோலக் கூவுகிறாள். அவளுக்கு உலகப் பசி யில்லை, உன் பசிதான். அன்புமலர்களைச் சூடிச்சூடி உனக்குத் தருகிறாள். காதலா, அவற்றையே நீ மகிழ்வுடன் அணிகிறாய். உன்னையே யெண்ணி யெண்ணி யென் புருகி, இமைகொட்டாது, உணவில்லாது, வேறுணர்வில்லாது தனித்துப் புலம்புகிறாள். அவள் வருந்தும் துன்பக் கடலைக் கடக்க உனது அருட்படகைக்கொண்டு வாராயோ? உன்னைப் புணரும் ஆசை விம்மித் தவிக்கிறாள். 'எனது காதலன் நாரணன் வரக்கூவு' என்று குயிலைக் கெஞ்சுகிறாள்.

முகிலையும், கடலையும், மயிலையும், மழையையும், பூவையும், பறவைகளையும் உனக்குத் தூதனுப்புகிறாள். பரமாத்மனே, கைத்தலம் பற்றி, முத்தீவலம் வந்து நீ அவளை மணப்பதாகக் கனவு காண்கிறாள். கண்ணா, இதோ உனது சந்நிதிக்கே வந்துவிட்டாள் ஜீவக்காதலி. உன்னொளியில் அவளை அணைத்துக்கொள். உனக்குப் புறம்பாக அவள் எதையும் விரும்பவில்லை. உன்னில் உயிரும் உணர்வும்போலொன்றி வாழவே விரும்புகிறாள். கண்ணா! இவளை அணைத்துக்கொண்டு உன்மயமாக்கு! கண்ணா!

## 5. குலசேகராழ்வார்

அரசின் பெருமையைத் துரும்பென நினைத்தார்; அரங்கன் பெருமையே பாடினார் குலசேகர மன்னர். பொருளாசை விடுத்தார்; அருளாசைபற்றி யலைந்தார். பொய் வாழ்வை வெறுத்தார், மெய்வாழ்வை யடுத்தார். போக சுகம் விடுத்தார். ஆத்மாராம யோக சுகம் அடுத்தார். அரண்மாளிகையை நீத்தார். இராமன் சரண்மாளிகையிற் புகுந்தார். 'உன் சரணல்லாற் சரணில்லேன்' என்று அடைக்கலம் புகுந்தார். இறைவனே! அத்தகைய அன்புறுதியும் அடைக்கலமும் எனக்கருள். எனது ஆசையாணவ மாசுகளைத் துடைத்தருள். நீதான் எனக்குத் துணை. வேறு யாரை நம்பி இவ்வுலகில் உள்ளேன்? தாயே நீ அடித்தாலும், உன் அருளையே கூவுகிறேன். காதலா! நீ என்னைப் பலர்முன் அவமானப்படுத்தி இகழ்ந்தாலும், என்னை யாட்கொண்ட காதலா' என்று மீண்டும் உன்னையே அணைந்து கொள்ளுகிறேன்! என்னரசே, என் மனம், புத்தி, சித்தம், அகங்காரம், பொறி புலன்கள், உடல், உயிர் எல்லாம் உனது குடிகள். நீ எப்படி நடத்தினாலும் நீயே அவர்களுக்குக் கதி.

மருத்துவனே! எனது ஆசையாணவ கர்மப் புண்களை அறுத்துச் சுட்டுப் பொசுக்கும் உனது வாளை வாழ்த்துகிறேன்! வாழ்வுக்கடலில் உனது அருட் கப்பல் செல்லுகிறது. அதன் கூம்பில் வாழும் ஒரு அன்புக்குருவி யான். எல்லையற்ற காலவெளியில் உருளும் இந்த இயற்கையுலகை என் சிற்றறிவறியுமோ? எல்லாம் உனது திருவிளையாடல். உனது அருளொளியால்தான் எனது உள்ளத்தாமரை மலரவேண்டும். உனது கருணை மழையாலேதான் எனது அன்புப் பயிர் விளைவேறவேண்டும். உள்ளமட்டும் உனது உலகாலயத்தில் உனது திருவடிப்பற்றுடன் வாழவருள். ஆற்றுக்குக் கதி கடலே. வாழ்வுக்கமைதி நீயே. அருட்கடலே, உன்னைப் பிரிந்து வாழேன். உனது இன்பமலை மீது அன்பரெல்லாம் ஏறும் வழியிலே ஒரு படிக்கல்லாகக் கிடந்தாலும் உய்வேன். என்னப்பனே, உனது திருக்கோயிலைத் தாங்கும் ஒரு தூணுயிருக்கமாட்டேனு? உலகில் உனது தர்மச் சோலையை வளர்க்கும் ஒரு ஓடையாயிருக்கமாட்டேனு? இறைவனே உலகெல்லாம் உன்மயம் காணவேண்டும். உன் அன்பினில் வாழவேண்டும். உன்னருகே உன்னேடுறவு பூண்டு நான் வாழவேண்டும். உனது திருவடி தாங்கும் பாதுகையாயிருக்கவருள். நீயுலவும் உலகில் உன் காலுக்கு மெத்தென்றிருக்கும் புல்லாயிருக்கவருள். அரசே, அரசே, அடியேன், அடியேன்!

## 6. திருமங்கையாழ்வார்

நான் கள்வன், அருளுடைமைக் கள்வன். உலகத்தார் உடல் பொருளாவியெல்லாம் கவர்ந்து உனக்கே யாக்க அல்லும் பகலும் முயலும் கள்வன் நான். என் மனமுயிருடலை மாயாசக்தியிடமிருந்து வழிபறித்து உனக்கே யாக்க விரும்பும் கள்வன் யான். அரசே வா, உனது சக்தி

தேவியுடன் வா. உனது உடைமைகளையும் கொள்ளை யடிக்கிறேன். உன்னிடம் என்னைப் பறிகொடுத்தேன். என்னிடம் உன்னைப் பறிகொடு. எளியேன் உனது செல்வத் திரளைத் தூக்கமுடியாமல் திணறுவேன். அப்போது "உன் தந்திரத்தால் என் செல்வம் எய்தாது. என் மந்திரத்தால் தான் எல்லாச் செல்வமும் வரும்." என்று எனக்கு உப தேசம் பண்ணு. உன்னைக் கொள்ளையடிக்கப் புகுந்த என்னைக் கொள்ளைகொள். உலகை உனது அரங்கமாகக் காண்கிறேன். அரங்கநாதனுகிய உனக்கு கோயிலெழுப்ப வே என் வாழ்வைச் செலவிடுகிறேன். அந்தக் கோயில் சந்நிதியிலிருந்து உன்னைக் கசிந்துருகிப் பாடுகிறேன்: ஆவியே, அமுதே, நான் உலக வாழ்வில் வாடினேன், வருந்தி னேன், பெண்டிரைக் கூடினேன், சிற்றின்பத்தையே குறித் தோடினேன். கண்டபடி திரிந்தேன். மனங் கசந்தேன். உன்னருளால் உண்மையுணர்வு பெற்றேன். நாராயணு, உனது திருநாமத்தையே தாரகமாகக்கொண்டு உய்ந்தேன்! குலம், செல்வம், மண்ணின்பம், விண்ணின்பம், எல்லாம் உனது திருநாமத்தினுல் எய்தும்; உண்மை! துஞ்சும்போதும் உன் பெயரை மறவேன்.' நாராயணா, நாராயணா! அதுவே நலந்தரும் சொல், நாராயணா, நாராயணா! திருமங்கையை உய்வித்த இம்மந்திரம் என்னை யாட்கொள்க!

## 7. பொய்கையாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார்

அன்பர் கூட்டத்தில் ஆண்டவன் உள்ளான். இரவில் ஒரு குறுகிய திண்ணையிற் கூடிய மூன்று ஆழ்வார்களுக் கிடையே எம்பெருமான் எழுந்தருளிக் காட்சியளித்தான். அக்காட்சியின்பத்திற் பொங்கியெழுந்த இயற்பாக்களின் இன்சுவையைப் பருகினேன், உருகினேன்! வையந் தகளி. வார்கடல் நெய். கதிரோன் சுடர். இவ்வுலகை விளக்கை

என்னுள் ஏற்றுகிறேன். அதன் ஒளியில் எங்கும் பரமாத்மனைக் காண்கிறேன். இயற்கையை அவன் இருக்கையாகக் காண்கிறேன். அவனையே நாடி, அவனையே பாடி, அவன் மலரடியே சூடி, அவனருளையே கூடி வாழ்கின்றேன்! அவனென் மனத்துள்ளான். உள்ளுவார் உளத்துள்ளான்! அவனடி பற்றி அவனிச்சை நிறைவேறவே வாழுவேன். அனைத்திற்கும் காரணன் நாரணன்! ஓம் நமோ நாராயணாய!

## 8. தொண்டரடிப்பொடியாழ்வார்

சிவன் பரவை மனைக்குத் தூது சென்றதும், அரங்கன் விப்ரநாராயணருக்காக தாசி தேவதேவியிடம் பொன் வட்டில் கொடுத்து மறைந்ததும் என்ன மாயம்? இறைவனே, வெல்லங்கொடுத்து மருந்து புகட்டும் தாய்போலே கொஞ்சம் உலக மாயையைத் தொட்டுக்காட்டி அன்பரை ஆட்கொள்ளுகிறாய். துறுதுறுத்தலையும் மனமீனை வலையிற் சிக்கவைத்து, மீண்டும் விடுதலை செய்கிறாய். மனவிதையைச் சேற்றில் அழுத்தித் தாமரையாக மலரவைக்கும் உனது கலைத் திறமையை யாரறிவர்? பூமாலை சூட்டிய விப்பிரநாராயணர் வேசை வலையை அறுத்தெறிந்ததும் பாமாலை சூட்டும் தொண்டரடிப்பொடியானார்: 'ஊரிலேன், சீரிலேன், உறவிலேன், செயலிலேன்! நின்னின்றி யாருமில்லேன். நீயே என் களைகண்! நான் கொடியனேன்; எனினும் உன் அடியனேன். மாசற்றார் மனத்திலுள்ள மாதவனே, உன்னைச் சரண்புகுந்து வணங்கி நிற்பதைத் தவிர வேறு பேச்சற்றேன். நீயே மதி! நீயே கதி! அரங்கத்தம்மானே! என்னுட் பள்ளியெழுந்தருள்!'

## 9. திருமழிசையாழ்வார்

சாதிகுலங்களை மறக்கிறேன்! நான் திருக்குலத்திற் பிறந்தால் திருப்பாணாழ்வார் போன்று உனது நாமசங்கீர்த்

தனஞ் செய்து உனக்கே ஆளாக அருளாய். குலகோத்திர மே வேண்டாம். திருமழிசைப்பிரான் மாதிரி உட்கனிந் துருகி உன்னையே அன்பு செய்யும் இன்பமே எனக்குப் போதும். உனது தொண்டர் குலத்தில் என்னைச் சேர்த்துக் கொள்! தன்னின் றெழுந்த திரைகடல் தன்னுளே யடங்கு கிறது. உன்னுளே தோன்றித் திரியும் உலகம் உன்னுளே யடங்குகின்றது. சொல்லும் பொருளும் நீ. சொற்கடந்த சோதி நீ. நீ மண்ணவன். மண்கடந்த விண்ணவன். விண் கடந்த என்னவன்! நீ இருப்பதும், நிற்பதும், படுப்பதும் என் நெஞ்சுள்ளே! யானும் நீ. எம்பிரானும் நீ! கணிகண்ணன் குருசேவை செய்ததுபோலே நான் மணிவண்ணன் சேவை செய்கிறேன். அவனே என் அந்தர் குரு.

## 10. இராமானுஜர்

ஆளவந்தாரின் மூன்று விருப்பங்களைக் குறிப்பறிந்து யதிராஜர் நிறைவேற்றினர். என்னை ஆளவந்த இறைவனே நீ சுத்தன், மாசறு தூயன். எதிலும் கட்டுப்படாது தாக் கற்றிருந்து, உலகாடலை அருட்சக்தியால் நடத்தும் முக்தன். எல்லார் உள்ளத்திலும் உயிர்க்குயிராயிருக்கும் சமத்வன். இந்த மூன்று உண்மைகளையும் நான் சாட்சாத்கரித்து உலகிற்கு விளக்கவருள். நம்பியிடம் உபதேசம் பெற்ற நாராயண மந்திரத்தை உலகெல்லாம் உய்யும்படி எல்லா ருக்கும் விளக்கினர் இராமானுஜர். அப்பனே நீ என்னுள் இரகசியமாகச் சொல்லும் ஞானமந்திரத்தை எனது சுயநல முக்திக்கே ஒளித்துவைக்காமல் உன்மயமான உலகுயிர் களுக்கு விளக்கும் சக்தியைத்தா; என் உள்ளத்தை அன்பு மயமாக்கு; உலகினும், விண்ணினும் விரிந்ததாக்கு. சட கோபரிடம் உடையவர் வைத்த அன்பு என் உள்ளத்தை யள்ளுகிறது. அவரது குவிந்த கைம்மலர்களும், பாந்த

கருணையுள்ளமும், பக்திக்கனலும், அறிவின் ஆழமும், பொறுமைத் திறனும், வீரவுறுதியும், சமரஸநோக்கும் ஆழ்வார்களிடம் அவர் வைத்த நேயமும், என் உள்ளத்தை யள்ளுகின்றன! இக்குணங்கள் எனது வாழ்வில் ஊறிப் பொங்குக, இறைவனே, அடைக்கலம்!

## 11. கூரத்தாழ்வார்

அடைமழை; வீட்டில் உணவில்லை. உஞ்சவ்ருத்தியும் கிடைக்கவில்லை; திருநாமமும் துளசிநீருந்தான் அன்று சாப்பாடு. நள்ளிரவு; கோயில் மணியோசை கேட்கிறது. 'பக்தரைப் பட்டினி போடுவ தழகோ, அரங்கா' என்று முறையிட்டாள் மனைவி. திருவருளிச்சையால் அதேசமயம் கோயில் பட்டர் பிரசாதங்கள் கொண்டுவந்தார். கூரத் தாழ்வார் வியந்தார். மனைவி இறைவனிடம் மனதார முறை யிட்ட செய்தியை அறிந்தார். "ஆ எம்பெருமானுக்கு என்ன சிரமமீந்தாய்? நமது அன்பையீந்து அவனருளை யன்றோ நாம் எதிர்பார்க்கவேண்டும். அவனிடம் நமது வயிற்றுப்பசிக்குச் சோற்றையோ வேண்டுவது? மனப் பசிக்கு அவன் பக்திபமுதையன்றோ வேண்டுதல் முறை" என்றார். ஆ கூரேசா, குரு இராமானுஜரை மைசூருக்குத் தப்பியோடும்படி செய்து, அவர் உயிரைக் குறிவைத்த அரசன் முன் நீ சென்று தைரியமாக உனது விஷ்ணுபக்தி யைக் காட்டினாய். அதற்காக உனது கண்ணையும் பறி கொடுத்தாய். கண்ணனையே கண்ணாகக்கொண்டாய்! என் னே உனது குருபக்தியும் தெய்வபக்தியும்! அறிஞ, உடைய வரின் பாஷ்யத்திற்கு உடனிருந்துதவினாய். கண்ணிழப்பி னும் கருத்திழக்காது அவர்பணி பூண்டாய். உனது பிள்ளை கள் பராசரன் பிள்ளான் இருவரையும் நல்ல கல்வி பயிற்றிக் குருசேவைக்கே ஆளாக்கினாய். உனது இல்லறவாழ்வு

உலகிற்கெல்லாம் உதாரணமாகுக! உடையவர் தமக்கடுத்த படி நியமித்த பராசர பட்டரின் ஒழுக்கமும் ஆசார சீலமும் பக்தி சிரத்தையும் மாந்தர்க்கெல்லாம் உதாரண மாகுக! நம்மாழ்வார் திருவுருவையே தொழுது, அன்பும், அருளும், அறிவும் பெற்று திருவாய்மொழிப் பாசுரங்களைக் கோத்து உலகிற்களித்த நாதமுனிகள் வாழ்க! உய்யக்கொண் டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார், பெரியநம்பி, எம்பெரு மானார், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரிய வாச்சான் பிள்ளை முதலிய குரு பரம்பரை வாழ்க! அன்பறி வொ பூக்கஞ் சிறந்த வேதாந்த தேசிகர் வாழ்க!

## 12. மத்வாசாரியார்

உள்ளுறுதியும், அஞ்சாநெஞ்சமும், உடலுறுதியும், அறிவொளியும், அன்புப் பெருக்கும் பெற்ற மத்வாசாரி யாரின் மாசற்ற பிரமசரிய வாழ்வைச் சிந்திக்கின்றேன். பன்னிரண்டு வயதில் அருளறிவெழுந்து துறவு பூண்டு, பக்திமார்க்கத்தை அவர் பிரசாரம் செய்த நேர்மையை வியக்கிறேன்! போக்கு வரவு சாதனங்களில்லாத அந்நாட் களில், கால்நடையாகவே ஊர்தோறும் சென்று பாகவதப் பிரசாரம் செய்து கடவுளன்பைப் பரப்பிய அவரது அருட் பணியைப் போற்றுகிறேன். இமயமலை மீதேறி, பதரிகாசிரம த்திற்குத் தனியாகச் சென்று, 48 நாட்கள் உண்ணுவிரத மிருந்து தவம்புரிந்து வியாசரின் அருள்பெற்றுத் தமது கீதை பிரமசூத்திர விரிவுரைக்கு அவரது ஆமோதிப்பையும் பெற்றுவந்தார், மத்துவர்.

அவரது அருள்வலியால் ஒரு நாள் ஒரு மரக்கலம் அபாயத்தினின்று விடுபட்டுக் கரை சேர்ந்தது. கப்பற்றலை வன் பெரும்பொருள் காணிக்கை யளித்தான். பொருளை

விரும்பவில்லை நமது மத்வர். அந்த மரக்கலத்திலிருந்த ஒரு பெரிய கோபிசந்தன வுருண்டையை விரும்பி எடுத்துக் கொண்டார். வரும் வழியில் அவ்வுருண்டை உடைந்து உள்ளிருந்து தோன்றிய தென்னே! ஒரு பாலகிருஷ்ண விக்கிரகம்! அன்பாவேசம் பெருகி, மனமுருகி, ஆடிப்பாடிப் பரவசராய் மத்துவர் அந்தக் கண்ணன் வடிவை உடுப்பி கோயிலில் வைத்து வணங்கினர். "கண்ணனே, இந்த வாழ்வுக்கப்பாலே உனது திருவடிக்கரையிற் சேர்த்தருளினய். இவ்வாழ்வில் எய்தும் பொருட் சுகத்தை நான் விரும்ப வில்லை. இதில் சுத்தமனம் என்ற கோபிசந்தனம் உள்ளது. அது உனது அன்புகோபியே. அதனுள்ளிருந்து நீ புறப் பட்டு வந்து என்னையாட்கொள். ஆயுளெல்லாம் கண்ணு கண்ணு என்று உன்னை பக்திசெய்துருகுவேன்!"

## 13. சைதன்யர்

கண்ணு, கண்ணு! சைதன்யரின் அன்புவெறி எனக்கு வாராதா! நான் உன் ராதையாகமாட்டேனு? 'ஹரே க்ருஷ்ண, ஹரே க்ருஷ்ண, க்ருஷ்ண, க்ருஷ்ண, ஹரே, ஹரே' என்று என் உள்ளந் துடிக்கிறது! எனது ஜீவன் நடனமாடுகிறது! அத்வைதாசாரியாரைப்போல, 'கண்ணு உலகைக் காக்க அவதரி, உலகையெல்லாம் அகண்டமான பிருந்தாவன மாக்கு. ஜீவர்களையெல்லாம் உனது ஆனந்த ராஸ லீலைக் குரிய கோபிகாதேவிகளாக்கு.' என்று முறையிடுகின்றேன். கயாஹரியின் ஸ்ரீ பாதத்தைத் தொட்டதும் நிமைபண்டிதர் கிருஷ்ணசைதன்யரானர். அறிவின் முடிவு ஹரிநாமம் எனக் கண்டார். தாம் எழுதிய நியாய சாத்திரத்தைக்கூட கங்கை யில் எறிந்தார். கேசவகாசுமீரியின் கல்விச்செருக்கை அடக்கி விருதுகொண்ட நிமைபண்டிதர் பள்ளிப் பிள்ளைகளுடன் 'ஹரி, போல்' என்று ஆடிப்பாடிப் பரவசமானர். அவாது

ஹரிநாமம் நித்யானந்தர் மண்டையையுடைத்த ஜகாய், மத்தாய் என்னும் கொடிய பாபிகளையும் சாதுக்களாக்கியது. சைதன்யர் துறவுபூண்டு தாயாரிடம் விடைபெற்றுப் புரிக்குச் சென்றார். ஆ ஜகந்நாத விக்கிரகத்தைக் கண்டதும் அவருக்கு எவ்வளவு ஆவேசம் கிளர்ந்தது! 'ஹரி, ஹரி, ஹரே க்ருஷ்ணா' என்று அதை இறுகத் தழுவிக்கொண்டு வேசற்றார்.

இறைவனே, நடமாடுங்கோயில்களான உயிர்களில் எல்லாம் உன்னை யணைந்து களிக்கும் விசுவசேதனத்தையும் எல்லையற்ற சர்வாத்ம ப்ரேமையையும் எனக்கு அருள். வாசுதேவசர்வபௌமன், பிரகாசானந்தர் போன்ற பெரும் படிப்பாளிகளும் சைதன்யர் முன்னே செருக்கடங்கி ஹரி நாமமே இன்பமெனக் கண்டனர். உனது திருநாமத்தை உறுதியுடன் பாடும் கல்வியே யான் வேண்டுகிறேன். சைதன்யரின் ஹரிநாமம், கள்வர், கொலைஞர், வேசையர், இடம்பர், இடும்பர் குழுக்களையும் நல்வழிப்படுத்தியது, நித்யானந்தர், ராமானந்தராய், ரகுநாதர், ரூப சநாதனர். ஜீவர் போன்ற அன்புச்செல்வரை ஆட்கொண்டது.

ஹரிதாஸ் இஸ்லாமியர். ஹரிபக்தியில் ஈடுபட்டார். 'என்னைத் துண்டுதுண்டாக வெட்டினாலும் ஹரிபக்தியை விடமாட்டேன்' என்று தன்னவரிடம் உறுதி கூறினார். இவரைக்கெடுக்க ஒரு வேசையை ஏவினர் பலகவர். ஹரிதாஸ் ராமஜபத்தில் ஈடுபட்டிருந்தார். வேசை மூன்று நாட்கள் வலைவீசிப்பார்த்தாள். ராமநாமம் அவள் வீசிய காம வலையைச் சுக்குநூறாக்கியது. வேசை தன் குறையுணர்ந்து பரமபக்தையானாள். இந்த ஹரிதாஸை சைதன்யர் உயிர்போல நேசித்தார். தனது திருக்கரத்தால் இறுதிகாலத்தில் அவருக்குக் கடன்முறைகளைச் செய்தார். ஹரிநாமம் எந்த

இதயத்திற் சுழலுமோ அங்கே சைதன்யர் அன்பும் சுழன்றோடும். கடல்கூட அவர் காதில் ஹரி, ஹரி என்றே ஆர்த்தது. 'முகில்வண்ணா, இதோ நீயே எல்லையற்ற நீலக்கடலாகப் பரந்து விரிந்துள்ளாய். நீயே இந்த அலைகளிற் கூத்தாடுகிறாய்' என்று கடலிற் குதித்தார் சைதன்யர். செம்படவர் வலையில் அகப்பட்டுக் கரைசேர்ந்தார். பக்தி பரவசத்தால் சைதன்யர் இறுதியில் ஜகந்நாதருக்குள் ஐக்கியமானார். சைதன்யரை எண்ணினால் மயிர்க்கால்களெல்லாம் ஹரிஹரியென்று துடிக்கின்றன! எனது இரத்தக்குழாய்களில் ஹரிஹரி யென்று ஒரு கனல் பாய்கிறது. எனது நரம்புகளெல்லாம் ஹரிஹரி யென்று யாழ்முழக்குகின்றன! எனது ஆதார கமலங்களெல்லாம் ஹரியின் அழகுக்கதிர்களால் மலர்ச்சியடைகின்றன! ஓம் ஹரி, ஹரி, க்ருஷ்ண ஹரி!

## 14. நோய்தீர்த்த பெருமான்

'இழிகுலத் தொழுநோயாளன் வராதே கிட்ட' என்று எல்லாரும் வாசுதேவனை இகழ்ந்து வெறுத்தனர். 'அன்பனே வா' என்று அவனைக் கட்டித்தழுவிக்கொண்டு ஹரி, ஹரி யென்றார் சைதன்யர். உடனே தொழுநோய் தீர்ந்தது. ஹரியையே தொழும் ஆவேச பக்தனானான் வாசுதேவன். சநாதனாசாரியார் மேனி முழுதும் பற்றுப்படர்ந்து சீழ் வடிந்தது. 'நான் நாளை ஜகந்நாதர் தேர்ச் சக்கரத்தில் நசுங்குண்டு உயிர்விடுகிறேன்' என்றார் சநாதனர். "ஐய உன்னுயிர் என்னுயிர் அன்றோ? நீ கண்ணனுக்கன்றோ வாழுகிறாய். உயிர்விடக்காரணம் என்ன?" என்று கேட்டார் சைதன்யப்பிரபு. 'குருநாதா இந்தப் பற்றுநோய் என்னாற் பொறுக்கமுடியவில்லை. அது தொற்றுநோய்' என்றார் சீடர். 'அன்ப இதோ இப்பற்றுநோய்க்கு ஹரிநாம மருந்து போடு

கிறேன்' என்று சீடனைத் தழுவிக்கொண்டார் சைதன்யர். பற்றெல்லாம் ஓடிப்போனது. அன்பர் சனாதனர் பிருந்தாவனம் சென்று அதைப் புதுப்பிக்கும் பணியில் ஈடுபட்டு வெற்றிபெற்ருர். ஏராளமான வைணவ சித்தாந்த சாத்திரங்களை யெழுதினர். இறைவனே, உனது சைதன்ய வடிவை யான் கட்டித்தழுவிக்கொண்டிருக்கிறேன். எனது பற்றுக்களெல்லாம் நீங்கி, மனத்தைப்பீடிக்கும் துராசை, ஆணவம், காமக்குரோதங்களான தொழு நோய்களையெல்லாம் தீர்த்து என்னை உனது திருப்பணிக்கே ஆட்கொள்வாயாக!

## 15. நிம்பார்க்கர்

வேதாந்த பாரிஜாதத்தில் நிம்பார்க்கர் சொல்லும் உபதேசமாவது: கண்ணனில் நான் பரப்ரஹ்மத்தை தியானிக்கிறேன். அவன் மாசறு தூயன்; அனந்த கல்யாணகுணன். கண்ணனுடன் இணைபிரியாத அன்புமயமான ராதையை நான் சக்தியாக தியானிக்கிறேன். அன்பர் எளிதாக பாவனை செய்து தியானிக்கும்பொருட்டே இறைவன் உருவெடுத்தான். அவன் வடிவம் அருள்வடிவம், அது சத்வகுணத்தாலானது. அன்பு தளிர்ப்பது அவனருளாலேதான். பிரகிருதி, புருஷன், ஈசுவரன் மூன்றும் பிரம்மத்தின் மூன்று விளக்கமே. எல்லாம் வல்ல பரம்பொருளான கண்ணனடியைப் பற்றினல் இன்பமுண்டாகும். அவனன்றி யாதுமில்லை. அவனன்பர்க்கு யாதும் குறைவில்லை.

## 16. வல்லபாசாரியார்

வல்லபாசாரியார் பதினோராண்டிலேயே வேதங் கற்ருர். பதினெட்டாண்டுகள் நாடெங்கும் சுற்றித் தமது பக்திமார்க்கத்தை உபதேசித்தார். பிறகு இல்லறத்தில

இருந்துகொண்டே அருள்வழியை உபதேசித்தார். சித்தம் அத்தனிடம் வைத்தவர்க்கு இல்லறமென்ன, துறவறமென்ன, இரண்டும் ஒன்றுதான் என்பதை அவர் காட்டினார். ஞானத்தால் சித்தசுத்தி யுண்டாகும். இறைவனே எல்லாம் என்னும் அறிவே அறிவு. அவனுக்கே மனமொழிசெயல் அனைத்தையும் அளி. ஆத்ம நிவேதனமே கடவுளடைவின் முதற்படி. ஆத்மசமர்ப்பணம் நிறைவுற்றால் பக்தியுண்டாகும், பக்தியால் சித்தம் நிலைக்கும். சித்தம் நிலைத்தால் இறைவனருள் இறங்கும். இறைவனருளால் ஞானமுண்டாகும். ஞானத்தால் கடவுட் கலப்புண்டாகும். பக்தியே முக்தி சாதனம். வேரில் நீர் விட்டால் மரம் முழுதும் தழைப்பதுபோல இறைவன் திருவடியில் அன்பைப்பொழிந்தால் எல்லாவுலகும் இன்புறும். பக்திப் பயிரை சாதனத்தால் வளர்க்கவேண்டும். இறைவன் பெருமையைக் கூறும் கதைகளைக்கேட்டல், அவன் பெருமையைப் பாடல், அவனை வழிபடல், சிந்தித்தல், மனம் பாச அன்புகளிற் செல்லாது ஈசனன்பிலேயே லயித்தல், அந்தவரம் இந்தவரம் என்று சுயநலங்கோராமல் அவனருளையே வேண்டல்—இவையே இன்பவழி. நிறைவான அன்பர்க்கு வேறு சடங்குகள் வேண்டா. அன்பினும் அரிய சாதனமில்லை. அன்பே இன்பவழி.

## 17. கபீர்தாஸ்

ராமானந்தர் சமரஸ அனுபவ ஞானி. சநாதனிகள், சைவர், வைணவர், இஸ்லாமியர், கிறிஸ்தவர் அனைவரையும் அவர் நன்கு மதித்தார். ஆத்மாராம உபாசனை செய்தார். ஒருநாள் அருணோதயத்தில் கங்கையாடப் படித்துறையில் இறங்கினார் ராமானந்தர். அவர் கால் யாரோ ஒருவர் மீது மிதித்துவிட்டது. ராம், ராம், என்றார். 'ராம், ராம், குரு

மஹாராஜ் உபதேசம் பெற்றேன்; திருவடி தீட்சை பெற்றேன்.' என்றெழுந்தார் கபீர்தாஸர். அந்த ராமநாமமே அவர் கற்ற கல்வி. கபீர் இல்லறத் துறவி. வள்ளுவர்போலே தறி போட்டுப் பிழைத்துக்கொண்டே ராம பக்தி செய்தார். ராம நாமத்தால் யோகம் போகம் இகம் பரம் எல்லாம் கிடைக்கும். இந்த ராமநாமத்தை எனக்களித்த குருவிற்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்? இது எவ்வளவு இன்பமாக என் உள்ளத்தினின்று இசை வெள்ளமாக ஊறிக்கொண்டிருக்கிறது! மனமே, மீன் தண்ணீரை விரும்புவதுபோல் நீ ராமநாமத்தை விரும்பு. கூச்சற்போட்டு ஜபமாலை உருட்டினுற் பயனில்லை. நெருப்பென்று கூவினுல் சமையலாய்விடுமா? உள்ளத்தில் அன்புக்கனலை மூட்டு. நெஞ்சைக்கழுவு, மாசு கற்று. சித்தம் ஓடாது நிலைநிறுத்து. அப்போதுதான் ராமநாமத்தின் இன்பரகசியம் புலனுகும், ஆ, ராமனை நினைக்கும்போது மனை, சுற்றம் எல்லாம் அன்னியமாய் விடுகின்றன! நான் மாலை உருட்டுவதில்லை, வாயாற் சொல்லுவதுமில்லை, என் உள்ளத்திலிருந்து ராம், ராம் என்ற அனுஹத சப்தம் வந்துகொண்டேயிருக்கிறது. உள்ளே தானுக ஜபம் நடக்கிறது; நான் அதில் லயித்துப்போயிருக்கிறேன். ராம நாமமே நான் விளைக்கும் பயிர், உலவும் சோலை, இசைக்கும் கடவுள், பணியும் தலைவன்; அதுவே எனது நண்பன், துணைவன்! மகாத்மா கபீரைப்போல ராமநாமத்தில் எனது ஆவி ஊறிப்போகட்டும்! ஆத்மாராமனே, நீயின்றி நானுர்?

## 18. மீராபாய்.

கண்ணனன்பின் ஆவேசக்கனலே மீராபாய். கண்ணனே தனது கணவன் எனக் கருதினுள் மீரா. வினைவசத்தால் அமைந்த இல்லக்கட்டுகளையும், உலகச் செல்வத்தையும்

மனத்தால் துறந்து கண்ணனிடமே அவள் ஈடுபட்டாள். மீரா இறைவனடி சேர்ந்து நானூறாண்டுகள் ஆகின்றன. அவள் மூட்டிய அன்புக்கனல் கோடிக்கணக்கான அன்பர் உள்ளத்திற் கனலுகின்றது. அவள் உள்ளத்தினின் றெழுந்த இசையமுதம் உலகில் பக்திப்பயிரை வளர்த்துவருகிறது. மீரா மீவார் ராணி. அவள் கையை மீவார் மன்னனுக்குக் கொடுத்தாலும் மனத்தை முற்றும் கண்ணனுக்கே யீந்தாள். அன்பர் கூட்டத்தையே நாடினாள். கண்ணனன்பையே பாடினாள், ஆடினாள். கடவுளன்பின் அருமையறியாக் கணவன் அவளை இடும்பை செய்தான்; பீரங்கி முனையிற் கூட பயமுறுத்திக் கண்ணனன்பையே விட்டுவிடச் சொன்னான்; முடிவில் ஊரைவிட்டு ஓட்டினான். மீராபாய்க்கு உலகெல்லாம் கண்ணன் மயமே. அறியாக்கணவன் பூமாலையுடன் பாம்பைக் கொடுத்து அவளைக் கொல்ல முயன்றான். முடிவில் தற்கொலை புரிந்துகொள்ளச் செய்தான். மீரா ஹரி, ஹரி யென்று ஆற்றில் விழுந்துவிட்டாள். கண்ணன் அவளைக் காப்பாற்றிக் கரை சேர்த்தான். மீரா பிருந்தாவனத்திற்கு வந்து கண்ணன் காதலில் மூழ்கினாள். "கண்ணா! இதோ என் இதயத்தை உனக்கே தருகிறேன். என்ன இடர்கள் வந்தாலும் உன்னை மறவேன். சுற்றத்தார் அறியாமையாற் செய்யும் இடர்களெல்லாம் எனது அன்பையும் வைராக்கியத்தையும் சாணைபிடித்துத் தீட்டுகின்றனவே! கண்ணா! மீராவைப்போல எனது ஜீவன் உன்னைக் கலந்து அந்த ஆனந்தத்தில் இசையாறாகப் பெருகாதா? கண்ணா உன்னை ஒரு கணமும் நான் மறவேன், பிரியேன். உலகமும் சுற்றமும் என்ன நினைத்தாலும் பொருட்டில்லை. உன்னை நினைப்பதே, இசைப்பதே, துதிப்பதே, தழுவிக்கொள்வதே, என் இன்பம், இரவு முழுதும் கண்ணா, உனக்காகவே

கண்ணீர்விட்டேங்குகின்றேன். இரவும் பகலும் எனது நாக்கு உன்பெயரையே சொல்லிக்கொண்டிருக்கிறது. என் இதயம் எனது பிராணநாதனுகிய உனது நிறத்தில் ஊறிப் போனது. மதி, இரவி, வான், காற்று, புனல், மண், உயிரினங்கள் எல்லாம் தோன்றி மறைவன. நாதா! நீயே நித்தியன். கண்ணு! உனதன்பு விளக்கில் எனதாவி நெய்யை வார்க்கிறேன். என்று மீராவுடன் எனதாவியும் முறையிடுகின்றது. கண்ணு! என்னை அணைந்துகொண்டு உன்மயமாக்கு! நீயே கணவன்; உலகம் உன் மனைவி.

## 19. திருநாமப்பெருமை

இவ்வாறு எத்தனையோ அன்பான்மாக்கள் உனது அருள்வெள்ளத்தில் நீந்துகின்றன! இறைவனே, எல்லார் அன்பும் பல வடிவெடுத்து உன்னையே சேருகின்றது. அன்பு நீ. அன்பர் நீ. அன்பின் இன்பம் நீ. அன்பைத் தூண்டும் ஆர்வமும் நீ. 'உரையில் உன் பெயர், உள்ளத்தில் உனது திருவடிவு' என்ருர் துக்காராம். 'நான் காதலிக்கும் அவனே நான். என் காதலனே நான். நாங்கள் இருவரும் ஒரே உடலில் இருக்கிருேம். என்னைப் பார்த்தால் அவனைப் பார்க்கலாம். அவனைப் பார்த்தால் என்னைப் பார்க்கலாம்' என்கிருர் ஸூபி சாதுவான ஹலாஜ். 'காதற் கண்ணனே! உனது அன்புக்கனலிற் சுடர்ப்பூச்சியானேன்' என்று உருகுகின்ருர் அந்தகக்கவி ஸூர்தாஸ். மீராவுக்கு வழிகாட்டியான ரைதாஸர், 'சாதிசமயங்களைவிட நீ உயர்ந்தவன். தலைவனே! உன்னையே நான் பற்றினேன். மற்ற சாதிசமய விவகாரங்களெல்லாம் ஒதுக்கினேன். ஹரி, ஹரி! பிரபுவே! நீ சந்தனம், நான் தண்ணீர். என் அங்கந்தோறும் உன் மணம் கமழ்க! நீ விளக்கு, நான் திரி. இரவும் பகலும் என்னுள் சொலித்

துக்கொண்டிரு; அருட்சுடரே. நீ தலைவன். நான் சேவகன்; உன் இச்சைப்படி என்னை நடத்து.' என்று உருகுகின்றார். திவ்யநாமமே அமுதம் என்கிறார் நிவ்ருத்த நாதர் ஹரி விட்டல். "இந்தத் திருநாமமே பக்திசாரம், ஞானசாரம்; பகவந் நாமத்தை உச்சரி; பாபம் போகும். அதுவே எளிதான, வலுவான சாதனம்." என்கிறார் ஞானதேவர். உன்னில் நான் மூழ்கிவிடுகிறேன், இறைவனே, துக்க சம்ஸாரக்கடலை உனது திருநாமப் புணைகொண்டு தாண்டுகிறேன் என்கிறார் சோபன தேவர். நாமதேவரோ ஹரிவிட்டல் என்றே பேசத் தொடங்கினார். 'உலகைத்தாங்கும் ஒருவனே, உன்மீது பாரம்போட்டு விடுகிறேன். உனது திருநாமமே தொழிலாகிறேன்' என்கிறார் ஞானதேவர். ஜானுபாய் ஞானதேவரின் வேலைக்காரி, ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டே அவள் வீடுகூட்டினாள். 'விஷ்ணுவைத் துதியாத வாய் வெட்கக்கெட்ட வாய். வேரில்லாது மலர், கனியில்லை. கடவுள் பேரில்லாது பக்தி முக்தியில்லை' என்கிறார் ஏகநாதர். 'என் கவலை அவனுக்கு. அவன் அன்பு எனக்கு. தாயின் கரத்திற் குழந்தைபோலே அவன் அருட்கரத்தில் நான் அமைதியாயிருந்து அன்பு செய்கிறேன்' என்கிறார் துக்காராம். ராமநாம சித்தியால் சமர்த் குருராமதாஸர் ஒரு சிவாஜியை உண்டுபண்ணி சக்தியளித்து நாட்டையும் தர்மத்தையும் காத்தார்.

## 20. துளசிதாஸர்

துளசிதாஸர் ராம மலர்க்குளத்தில் நீந்திக்கொண்டே பாடும் இசையன்னம். ராமானந்தர் வழிவந்த நரஹரிதாஸருடன் காசியில் ஸத்காலக்ஷேபம் செய்தார் துளசிதாஸர். துளசி ராமாயணம் உலகிற் பெரிய அரிய இலக்கியங்களில் ஒன்று. அது அத்தனையும் அறிவன்புச் சுரங்கம். மீராபாய்

ஒரு முறை தனது மனக்கவலையை விளக்கித் துளசிதாஸருக்குக் கடிதம் எழுதினாள். அதற்கு துளசிதாஸ் எழுதிய பதில் புகழ்பெற்றது. "இராமநாமமே எனக்குக் கற்பகம் போன்றது. அது இன்பக்கனி குலுங்குகின்றது, உலர்ந்த சருகுகளை நக்கும் நாய்போலே உலக இன்பங்களை மோப்பம் பிடித்துத் திரிந்தேன். ஒரு பயனுங் காணவில்லை. ராம நாமத்தினால் இப்போது பேரின்பம் பெற்றேன். ரா......மா இந்த இரண்டொலிகளும் எனக்குத் தந்தை தாய். நான் அத் திருநாமக் குழந்தை. ராமனைவிட ராமநாமம் பெரிது." என்கிறார் துளசிதாஸர். இந்த உபதேசத்தைக் கேட்டு மீராபாய் "பொன்னான நாமோபதேசம் பெற்றேன். உலகத்தில் எதை யிழந்தாலும் கவலேன். எனது குருநாதர் கொடுத்த இந்த ராமநிதியை இழக்கமாட்டேன். இன்பவெறி கொண்டு எனது இறைவன் பெயரைப் பாடுகிறேன்" என்றாள். மனமே, நீயும் இந்த ஆர்வத்துடன் பகவந் நாமத்தைப் பாடு. உலகில் வேறென்ன உள்ளது? உலகம் தரும் இன்பமெல்லாம் நுனி நாக்கில் இனிக்கும், அடிநாக்கில் கசக்கும்! புலனின்பம் புண்ணின்பம், இறைவன் மலரடியின்பமே விண்ணின்பம்!

## 21. லீலாசுகர்

"காதலா, இருட்டிலும் மழையிலும், வந்தீர். பிணத்தைப்பற்றிப் பெருவெள்ளத்தை நீந்தி பாம்பைப்பற்றி மாடி மேல் ஏறி வந்தீரே என்னிடம்; என்ன பயனடைந்தீர்?" என்றாள் தாசி சிந்தாமணி. "கண்ணே! உனது இன்பத்தை அடைய நரகத்தையும் தாண்டி வருவேன். நீயே என் சுவர்க்கம்'' என்றான் வில்வமங்களன். "மோகவெளிகொண்ட வில்வமங்களரே, என்னின்பம் பொன்னின்பம், அரைநாழி கையில் அலுத்துப்போகும் பிணியின்பம், சிற்றின்பம். இந்த

உடல் நாளையே முதிர்ந்து, சுருங்கி, அழகெல்லாம் மங்கி, வாடி யுதிரும். இதனினும் ஒரு பேரின்பம் உள்ளது. அது அழியாது. வஞ்ச மோகப் படுகுழியில் உம்மை வீழ்த்தாது. இந்த வேசையிடம் வைத்த ஆசையை ஈச னிடம் திருப்பினால் எல்லையற்ற பேரின்பம் என்றும் பெற லாமே. ஐய, பெண்ணினிடம் வைத்த மாயமனத்தைத் திருப்பிக் கண்ணனிடம் உய்த்துக் கதிபெறுக. மாதைக் காணும் ஊனக்கண்ணை மூடி மாதவனைக்காணும் ஞானக்கண் மலர்க!'' என்றாள் சிந்தாமணி. வில்வமங்களர் உள்ளே விழித்துக்கொண்டார். மோகவிருள் அகன்றது. தேக சுகம் புளித்தது. ஆத்மசுகம் துளிர்த்தது. வேசைப் பித்தர் தெய்வ லீலாசுகரானார். கிருஷ்ண கர்ணாமிருதம் பாடினார். கடவுளுணர்வும், அன்பும், அறிவும், தெய்வவொளியும் ஒவ் வொருவர் உள்ளத்தும் உறங்குகின்றன. மனமாயை இவற் றை மறைத்து மானிடரை மோகஜாலக்காட்டில் இழுத் தடித்துத் துன்பப்பாறையில் போட்டு வெளுக்கிறது. மனிதன் சுகம் சுகம் என்று தன்னையே துக்கத்திற்கு பலி கொடுக்கிறான். "அட பைத்தியமே, வரட்டெலும்பைக் கடிக்கும் தெருநாய் தன் வாய் ரத்தத்தைக் கண்டு மயங்கு வதுபோல பரம துக்கத்திற்கு உன்னை ஆளாக்கிப் பாழாக் கும் மயக்குகளில் வீழ்ந்து மாண்டுபோகாதேடா! உன் னுள்ளே பரம சுகப்பொருள், உள்ளது. புறத்தே வைக்கும் ஆசையபிமானங்களை உள்ளே திருப்பிப்பார்!'' என்று மனச் சாட்சி ஒவ்வொரு நொடியும் எச்சரிக்கை செய்கிறது மனிதா கேள், கேள்!

## 22. ஜயதேவர்

பக்த ஜயதேவருக்கும், உத்தமி பத்மாவதிக்கும் கீதகோவிந்தமே சாவாப்பிள்ளை. ஜயதேவருக்குப் பணக்

கார வியாபாரியான பகவன்தாஸ் கொடுத்த பொன்மூட்டைக்குக் கள்வர் வந்தனர். பொன்னைக் கவர்ந்ததுமன்னியில், பரமசாதுவான ஜயதேவரின் கைகால்களையும் வெட்டி, அவரைக்கிணற்றிலே தள்ளிச்சென்றனர். அவ்வூர் அரசன் வேட்டையாட வந்த இடத்தில் தாகத்தினால் இக்கிணற்றில் தண்ணீரிருக்கிறதோ என்று எட்டிப்பார்த்தான். "ஜய கோபால ஹரே, ஜயராதே, ஜயகிருஷ்ண" என்ற திவ்ய நாமம் கேட்டது. யாரது? ஜயதேவரே. கிணற்றில் தண்ணீரில்லை. அவரது இரத்தவெள்ளமே இருந்தது. அந்நிலையிலும், 'ஐயோ இப்படி வந்ததே கடவுளுக்குக் கண்ணில்லையா; பாழும் தெய்வமே" என்ற அஞ்ஞானப் புலம்பல்களில்லாமல் ஜயதேவர், "இந்த உடலா நான்? இது கொஞ்ச காலத்திற்கு வாடகை வீடுதானே. பரமாத்மனே! நீயன்றோ இந்த வீட்டில் இந்த நெஞ்சிற் குடியிருக்கிறாய்; உன்னையே நினைக்கிறேன்.' என்று தியானித்திருந்தார். அரசன் ஜயதேவரை வெளியிலே எடுத்துவிட்டுச் செய்தியறிந்தான். ஜயதேவரைத் தனது குருவாக ஏற்றான். 'ஐயனே எனக்குச் சந்நியாசம் கொடுத்தருளுக' என்றான். 'அரசே, வேடத் துறவு வேண்டாம். காவியும் தண்டு கமண்டலமும் துறவாகா. மனத்திற் படிந்த அழுக்கை நீக்கி மனையில் வாழலாம். தன்னலமும், மானாபிமானமும், அகங்காரப்பற்றும் நீத்தலே துறவு என்று அரசனுக்குப் போதித்தார் தேவர். அவ்வாறே அரசன் மனத்துறவுடன் சாதுக்களுக்கு ஏராளமான உபசாரங்கள் செய்துகொண்டு அரசாண்டான். ஒரு நாள் சாதுக்கள் கூட்டத்துடன் ஜயதேவரைக் கொள்ளையடித்த கள்ளரும் காவிபூண்டு வந்தனர். ஜயதேவரைக்கண்டதும் மனச்சாட்சி அவரை வாள் போலறுத்தது. அவரையும் முகமலர்ந்து வரவேற்று, அரசனிடம் சிபாரிசு செய்து உபசரிக்கச் செய்

தார் ஜயதேவர். கண்ணனைக் கண்டவர் அன்னியம் நினைப்ப ரோ? பொருளுக்குக் கள்வர் பயம். அருளுக்கு யாங்கும் ஜயம்.

## 23. இராமாயணம்

எண்ணிறந்த அன்பர் ராமகிருஷ்ண லீலானந்தத்தில் தம்மை மறந்து பேரின்பமடைந்தனர். ராமன், கிருஷ்ணன், ஆ இந்தப் பெயர்களில் எவ்வளவு இன்பம் இருக்கிறது! ஆயுளெல்லாம் சோறுதண்ணீர் நினைப்பல்லாமல் இத்திரு நாமங்களைச் சொல்லிக்கொண்டேயிருக்கலாம் போலிருக் கிறதே! எத்தனையோ நூற்குழாங்களைப் படிக்கிறோம்; எல் லாம் தெவிட்டிப்போகின்றன. ராமகிருஷ்ண சரிதாமிருதம் கேட்கக்கேட்க இன்னும் இன்னும் என்று மனம் ஆவலா கிறதே. மனிதா, இராமாயணமும் பாரதமும் பாகவதமும் உன்னுள்ளே நடக்கும் அகப்போர் வர்ணனைதான். ஆத்மா ராமனுக்கும் ஞான ஜனகிக்கும் முடிசூட்டுந் தருவாயில் பொறுமைக் கூனி வந்து கலைத்துவிடுகிறாள். ஆத்மாராமன் சர்வாத்ம சாம்ராஜ்யாதிபதி. உலகைக் கொள்ளுவதும் தள்ளுவதும் அவனுக்கு ஒன்றுதான். அவன் வைராக்கிய மாகிய கான்செல்கிறான். அங்கு வரும் காமச் சூர்ப்பன கையைக் கண்டித்து ஓட்டுகிறான். குரோதப்படைகளான காதூடணரை அறக்கணையால் வீழ்த்துகிறான். உலகமாயை யாகிய பொன்மானைத் துரத்திச் செல்லுகிறான். அப்போது காமக்குரோத லோபமோக மதமச்சரத்தலைகள் பூண்ட தச முகன் வந்து வஞ்சனையாக ஞான ஜனகியைக் கவர்ந்து சென்று ஆணவத்தீவான இலங்கையிற் சிறைவைக்கிறான். ஆத்மாராமன் அந்த ஆணவ அரக்கர் ஊரை முற்றுகை போடுகிறான். பக்தியாகிய அனுமான், நன்மனமாகிய சுக்ரீவன், உறுதியாகிய அங்கதன், வைராக்கியத் துணை

யாகிய இலக்குமணன், நற்குணங்களாகிய வானரப்படை களுடன் தீக்குண அரக்கரை அழித்து தசமுக தாரத்மனை வென்று வீழ்த்தி, ஞானசக்தியான சீதையை மீட்டு, சாத்விக புரியான அயோத்தியில் அன்பு முடிசூட்டிக்கொண்டு, ஆத்மா ராமன் ஞான சாம்ராஜ்யத்தை அமைதியாக ஆளுவதே இராமாயணத்தின் உட்பொருள்.

## 24. கண்ணன்

கண்ணா காண்கிறது? கண்ணனல்லவா உள்ளிருந்து காண்கிறான். இல்லேல் இக்கண்கள் காக்காய் கொத்தும் நாற்றக் கறிதானே? கண்ணன் என்னுள்ளிருந்து கேட்கிறான், சுவைக்கிறான், மூச்சுவிடுகிறான், பேசுகிறான், மௌன மாகப் பேசுகிறான், அனுஹதக் குழலூதுகிறான். அதில் எனது அந்தக்கரண கோபிகள் சொக்கிப்போகின்றனர். என் மனம் அவனது பிருந்தாவனமல்லவா? அங்கே ராச லீலை இடைவிடாது நடந்துகொண்டிருக்கிறது. ஒரு நிமிஷம் அந்தக்கண்ணைப் பிரிந்தால் என் அந்தக்கரணங்கள் மூர்ச்சை யாகி உணர்வற்று விழும்! ஆ அவனைக்காணாது எங்கெல்லாம் தேடினேன், 'மனைமக்கள் பற்றெல்லாம் விட்டு உன்னைத் தேடுகிறேன், கண்ணா கைவிடாதே' என்று அலறியலைந் தேன்; முடிவில் திடீரென்று என்னுள்ளிருந்தே யெழுந்து புறக்கண்ணை மூடி, உட்கண்ணைத்திறந்து 'இதோ பார்' என்று என் இதயத்தில் சோதிப்பிழம்பானான். எத்தனை அரக்கர் இந்த பிருந்தாவனத்தை அழிக்க வந்தனர்! உலகாயதப் பூதகி, சஞ்சலச் சகடாசுரன், ஆசைப் பகா சுரன் எல்லாரையும் ஏவிவிட்ட ஆணவத்திமிர் பிடித்த கம்ஸனைக் குத்திக்கொன்றான் கண்ணன்.

## 25. பாரதப்போர்

குருக்ஷேத்திரம் முக்குணப் போர்க்களனே. அதில் ராஜஸ தாமதக் கீழியல்புகள் துரியோதனக் கும்பல்களாக நிற்கின்றன. பாண்டவர் சத்வகுணங்கள். அர்ச்சுனன் பாச இரக்கத்தாற் கட்டுண்ட ஜீவாத்மா! 'என்னுடன் பிறந்து வளர்ந்த தீமைகளையோ அழிப்பேன்!' என்று மயங்கு கிறான். கண்ணன் க்ஷேத்ரக்ஞன், உலகில் நடக்கும் முக் குணப்போர்களுக்கு சாட்சியாயிருப்பவன், பிரகிருதி மாயை யாற் கட்டுப்படாத நித்திய முக்த பரமாத்மன், வாழ்வுத் தேரின் சாரதி. அஞ்ஞானக் கலக்கமுற்ற ஜீவாத்மாவான அருச்சுனன் இன்னது செய்வதென்று தெரியாது பரமாத்மா சாரதியைச் சரண்புகுந்து வேண்டுகிறான். "அருச்சுனா, நான் ஒவ்வோருள்ளத்தும் ஆன்மா. நீயும் நானும் எத்தனை யோ தடவை சேர்ந்து பிறந்து உலகில் தர்மத்தை நிலை நாட்டினோம். நீயறியாய்; நான் அறிவேன். இதோ முரசு கொட்டி அழைக்கும் முக்குணப்போரை நீ காண்டீபத்தாற் செய்வதாகச் செருக்குறாதே. இப்போரை நான் செய்து முன்பே வென்றுவிட்டேன். நீ நிமித்த மாத்திரமிருந்து அம்பைப்போடு. தளராதே, இது எனது பிரளய லீலை. பழையன கழிந்து, அசுரபலங்கள் ஒழிந்து, இன்னோர் கல்பத்தை, தர்மயுகத்தை, சத்தியப்பொன்யுகத்தை உண்டு பண்ணவே இந்த முயற்சி. இந்த உடல்கள் தான் வீழும். அவற்றில் உள்ள யானாகிய ஆன்மத்தொகுதிக்கு எங்கும், என்றும் அழிவில்லை. வினைவை எனக்கு நிவேதித்து, யான் எனது என்ற பற்றில்லாது எனக்கே வழிபாடாக இந்த வினை வேள்வியைச் செய். என்னைச் சரண்புகு, உன்னைத் தீமை தொடாது, வினைத்தளை பற்றாது. உன்னை நான் விடுவிக்கி றேன், பார் என் உலகவடிவை, நானே பிரகிருதி, புருஷன்

இரண்டையும் தாங்கி இரண்டிற்கும் அப்பாலான புருஷோத் தமன். என்னையறி. யானே எனது யோக மாயையால் இவ் வுலகப் போரை நடத்துகிறேன் என்றறி. நீ என் இச்சைக் கருவி என்றறி. பிறகு உன்னை உண்மையாக அறிவாய், நானன்றி நீயில்லை. உன்னுள்ளும் புறமும் யானே, யானின்றி யாதுமில்லை என்றறிவாய். நம்பு, அன்பு செய், அறி, உணர், எடு வில், வெல்!' என்று மெய்யறிவுணர்த்தினன் கண்ணன். முக்குணப்போரை தீரமாக வென்று அப்போர்க் காட்சி களைக் கட்டின்றிக் காணும் சர்வசாட்சியாகிய பரமாத்மாவை ஜீவாத்மா சரண்புகுந்து கலந்து ஒன்றுவதே கீதை, பாக வதம், பாரதம், இதிகாசங்களின் உட்பொருள். மனப்போர் ஒழிக! மயக்கம் ஒழிக! ஆசையாணவ அரக்கர் வீழுக. ஒவ் வோருள்ளமும் அந்தர்யாமியை அறிக. உலகமெல்லாம் சுத்தான்ம ஸ்வராஜ்யமாக விளங்குக!

நூல் சு பக்தி பரவசம்

முற்றிற்று

---

## நூல்—எ

## ஞானியர் நினைப்பு

---

### 1. வணக்கம்

எத்தனை சத்குருக்களை எனக்கு விளக்கினை! இறைவனே, இந்தப்பாழும் மனக்குதிரை ஆசையாணவ மடமையிருட்காட்டிற் சிக்கி யலையாமல் ஞானம் வைராக்கியம் என்னும் லகான் பிடித்திழுத்து எத்தனையோ குருமார்கள் மூலம் இதை அடக்கியாண்டு உனது ஸ்வரூப நகருக்குக் கொண்டு வந்தாய்! உன் வடிவாக வந்து தோன்றியும் தோன்றாமலும் நின்று என்னை யாண்டுகொண்ட குருமார்களுக்கெல்லாம் வணக்கம்! நான் சிறு பிள்ளையாகத் தெருவில் விளையாடும் போது ஒரு பைத்தியக்காரப் பக்கிரி மாதிரி வந்து என்னைத் தனியே அழைத்துச்சென்று சுத்தோஹ மந்திரத்தை யளித்தானே, அந்தக் குருவிற்கு முதல் வணக்கம் செலுத்துகிறேன். பிறகொரு பரதேசிமாதிரி வந்து எனக்கு இலக்கண இலக்கியங்களைக் கற்பித்து உன்னைப் பாடும் திறமையளித்தானே, அந்தக் குருவிற்கு வந்தனம். குடும்பத் துயர் நாடகங்களைக் கண்டு உலகைவெறுத்து 'தாயே நீயே துணை' என்று காலைப்பிடித்துக்கொண்டதும், மதுரையில் எனக்கொரு அந்தர்திருஷ்டியும் அருளொளியும் அளித்தாளே அந்தப் பரதேவிக்கு வணக்கம். வேதாந்த சித்தாந்த தத்துவங்களையும் யோக ரகசியங்களையும் எனக்குப் புகட்டிய குருமார்களுக்கெல்லாம் வணக்கம். தகாவித்தையை எனக்களித்த அந்த ஞானக் கண்ணருக்கு என் வணக்கம். வேதாந்த சித்தாந்த சமரஸத்தை ஆராய்ந்து செல்லுகையில், தாயுமானவர் திருவுள்ளத்தை எனக்கு நிதர்சனமாகக் காட்டிய அந்த சிவஞான சித்தருக்கு வணக்கம். அரசியற் சுழலிலும்

புற இயக்கங்களிலும் மனத்தைவிட்டலையும்போது, ஒற்றனாக என்னுடனே வந்து என் விழி திறந்தானே, அந்த அறிவாளிக்கு வணக்கம். கற்றதும் கேட்டதும் கண்டதும் நிம்மதியளிக்காமல் நான் மெய்ஞ்ஞானம் தேடித்திரிகையில், 'இதோபார் உண்மை' என்று என்னையாட்கொண்டதே ஒரு ஞானச்சுடர், அதற்கு வணக்கம். சஹஸ்ரார யோகசித்தி பெற என்னை யாட்கொண்ட பூர்ணயோகிக்கு வணக்கம். எண்ணாலும், எழுத்தாலும், சொல்லாலும், குறிப்பாலும், சொல்லிறந்த மோனத்தாலும் எனக்கருள்புரிந்த எல்லாக்குருமார்களுக்கும் அடியேன், வணக்கம் செலுத்துகின்றேன்! குருவே யிறைவன்!

## 2. சதாசிவ பிரமேந்திரர்

யோகிகளின் நரம்புகளிற் பொசியும் சிற்சக்தி வெள்ளம்போலக் காவிரி நதி பாய்கிறது. அதன் கரையில் பசும் பயிர்வளங் குலுங்குகிறது. அருகே மாவும் இலுப்பையும் நெருங்கிய ஒரு வனம். அதில் ஒரு சிறு சிவன் கோயில். அக்கோயிலுக்குப் பின்புறம் ஒரு வில்வமரம். அதன் கீழ் சதாசிவப் பிரமேந்திரர் சமாதி. அங்கே தியானத்தமர்ந்தேன். எவ்வளவு ஆத்மசாந்தம் ஏற்பட்டது! யாரோ "வாயை மூடு, மனங்குவி, உள்ளே பார்" என்றாற் போலிருந்தது. ஆம், மௌனத்தில்தான் ஞானவிதை ஊன்றி சச்சிதானந்தக் கற்பகமாக முளைக்கும். இதோ சதாசிவர்! அவர் புலவர், பாவலர், நாவலர், வேதாந்தி, தார்க்கிகர்! "வாயை மூடடா சதாசிவா" என்று பரமசிவேந்திர குரு சொன்னதும் மோனியாகி, ஞானியாகி, பிரமசாக்ஷாத்காரம் பெற்று, காற்றைப்போன்ற சுதந்திரராகக் கிளம்பிவிட்டார். தன்னுள்ளே தானாகி, ஆத்ம சமாதியிலேயே உலகவீட்டில்

பற்றில்லாமல் எங்கும் உலாவினர். அறியா மாந்தர் செய்த இடும்பைகளையும் பொறுத்தார். தீயர் வெறிநாயை ஏவி விட்டனர். அது கடித்துக் கால் புண்ணானது, புழுத்தது. அப்புழுக்களையும் 'உங்கள் கடனைத் தீர்த்துக்கொள்ளுங்கள், பிராரத்வங்களா' என்று கீழேயுதிராமல் புண்ணில் எடுத்து விட்டுக்கொண்டார். குழந்தைகளோடு குழந்தைகளாக விளையாடினர். தம்மை யறியாமலே எத்தனையோ சித்து கள் புரிந்தார், ஒரு கொடியன் அவர் கையைச் சிதைத்தும் பாராட்டாமல் சமாதியில் நடந்தார். கொடுமுடியாற்றில் சமாதியில் ஆழ்ந்தார் சதாசிவர். வெள்ளம் வந்து, அவரை இழுத்துச் சென்று எங்கோ மணலிற் புதைத்துவிட்டது. மூன்று மாதங்கழித்து ஒருவன் ஆற்றில் மண் வெட்டும் போது இரத்தக்குறி தென்பட்டது. தோண்டிப்பார்க்கவே அங்குப் புதைபட்ட சதாசிவர் துயிலெழுந்தவர் போலே புன்னகைத்து மேலே சென்றார். ஆ இவருடைய துரியாதீத நிலையை என்னென்பது! சதாசிவரை தியானித்தாலே 'ப்ரம்மைவாஹம், தத்வமஸி' என்றொரு பாட்டு உள்ளிருந் துதிக்கிறது!

### 3. சங்கரபகவத்பாதாசாரியார்

பாரத தர்மத்தின் முதல்வரான வேத ரிஷிகளுக்கு வணக்கம்! வேதம் வகுத்த வியாசருக்கு வணக்கம். வியாச ருக்குப் பின் உலகிற்கு அற்புதமான வேதாந்த ஞானமளித்த சங்காருக்கு வணக்கம். காலடித்தலத்தில் இருந்து சங்கரரை தியானிக்கிறேன். "நீ யார்?" என்று கேட்டபோது அவர் தமது குரு கோவிந்த பகவத்பாதருக்கருளிய தசச்லோகி யை நினைக்கிறேன். 'நான் ஐம்பூதம், வர்ணம், ஆசிரமம், எதுவுமல்ல. நானார்? நான் அது; ப்ரம்மம், சிவோஹம்,

சுத்தோஹம், ப்ரம்மோஹம் என்ற ஞானவிசாரம் தன்னால் உண்டாகிறது. அண்டத்திலும் பிண்டத்திலும் ஒன்றே பிரமம். அந்த சர்வம் ப்ரம்ம பாவனையுள்ள சமதர்சி நீசனானாலும் என் ஆசான் என்ற கருத்துடன் அவர் காசியிற் பாடியதை நினைக்கிறேன். 25 வயதில் சங்கரர் காட்டிய அறிவுத் திறமையை வியக்கிறேன். பாரத தேசம் முழுதும் அவர் ஆத்மஞானத்தைப் பரப்பினர். பிடிவாதமான கர்ம மார்க்கியான மண்டனமிஸ்ரரை வாதத்தில் வென்று சங்கரர் தமது சிடராக்கிய வல்லமையைப் போற்றுகிறேன். மண்டனர் சுரேசுராசாரியாராகி அற்புதமான அத்வைதப் பிரசாரம் செய்தார். சங்கரர் ஞானச்சுடர்; ஞானசக்தி; ஞானப் பிரசாரத்திற்கே வாழ்ந்தார்; ஞான வெற்றி பெற்றார். அதற்கே நம்மைப் பலிகொடுத்து ஞான வீரராகவே உடலை நீத்தார். மேற்கும் கிழக்கும் அவரைப் போற்றுகிறது. சங்கரர் வேதாந்தமே இராமகிருஷ்ணர் திருவாக்கில் மலர்ந்தது, விவேகானந்த சிங்கத்தின் உள்ளிருந்து கர்ஜித்தது, ராமதீர்த்தரின் சுதந்திர உள்ளத்தினின்று பொங்கியெழுந்தது, இன்று ரமண மகர்ஷியின் பரமசாந்த இதயத்தினின்று புன்னகை மலர்ந்தெழுவதும், அருட்கண் விழித்து நோக்குவதும் அந்த சுத்தோஹ ஞானமே! சிவோஹம், சுத்தோஹம், ப்ரஹ்மோஹம்!

## 4. புத்தர்

அரசபோகத்தைத் துறந்தார்; அரசமரத்தடியிருந்து உலகோர் துயர் நீங்க ஒரு மருந்தை ஆராய்ந்தார் போதிஸத்வர்; புத்தர் தவத்தால் இளைத்தார். ஒருநாள் சுஜாதை யென்னும் பெண்மணி தன் குழந்தையுடன் பாலடிசில் கொண்டுவந்தாள்; அரசடியிருந்த முனியரசை வணங்கினாள்.

"வனதேவதையே எனக்குப் பிள்ளைப்பேறீந்தனை; இதோ பாலடிசில் படைக்கிறேன்!" என்று ஊட்டினாள். முனிவர் பசியார உண்டார். "அம்மா நான் வனதேவதை யல்லேன்; உலகோர் படுந்துயருக்கு ஒரு மருந்தைச் சிந்தித்துக்கொண் டிருக்கிறேன். அம்மையே, உனக்கு மனைவாழ்வு இன்பமா யிருக்கிறதா?'' என்று கேட்டார் சித்தார்த்தர். "பெரி யோய், அனைத்துயிரிடமும் அன்பாயிருக்கிறேன்; என்னா லான அறவினை செய்கிறேன்; நல்லது பொல்லது வந்தாலும் பொறுத்துப் பற்றற்றிருக்கிறேன். அதனால் உட்களிப்புட னே யிருக்கிறேன்'' என்று வணங்கி விடைபெற்றுச் சென் றாள் சுஜாதை.

இரவு; முழு நிலா காந்துகிறது; அறிவுதித்தது; ஆசை யால் பற்று; பற்றால் துன்பம் வருகிறது. அன்பும் இரக்க மும் அகந்தையின்மையும், தன்னல மறுப்பும், தானமும் சீலமும், நல்லொழுக்கமும், நல்ல நினைப்பும், அறிவும், அமைதியும், அறவழியாகும். இந்த அறவழி பற்றி நடந் தால் இன்புறலாம் என்று புத்தர் உபதேசித்தார். ஒரு பெரிய கூட்டத்தில் புத்தர் நெடுநேரம் பேசாதிருந்து ஒரு கனியைக் காட்டினார். பொருளென்ன' என்றனர்; "அன்பு மலர்க; அருள் கனிக! வினை யுதிர்க!" என்று விளக்கினார் புத்தர்.

## 5. மஹா வீரர்

நள்ளிரவு; அதிமுக்தம் என்ற பயங்கரமான சுடு காட்டில் மஹா வீரர் நிர்வாணமாக சுக்லத்யானத்தில் வீற்றி ருக்கிறார்; குளிர்காற்று வீறிடுகிறது; இடி குமுறுகிறது; மின்னல் பளிச்சிடுகிறது; மழை கொட்டுகிறது; பேய்க் கணங்களும், கொள்ளிவாய்ப் பிசாசுகளும் வந்து ஓலமிட்டு

பயமுறுத்துகின்றன; மஹா வீரர் அசையவில்லை; அதன்பின் காமவெறி பிடித்த அழகிய குமரிகள் வந்து மாயவலை வீசினர்; பலிக்கவில்லை; நிலைத்த யோகியை அலைக்கமுடியுமா? முடிவில் தாணு என்னும் தேவதை வந்து "முனிவ, சோதித்தேன்; வியந்தேன்; நீயே அதி மஹாவீரன்" என்றான். அத்தகைய தியான வைராக்கியம் வேண்டும். ஐம்பிழை போக்கி, ஆசை யடங்கி, மனத்தை வென்று, இயற்கையை வென்று, வினைகளை யுதிர்த்து, அறிவு பழுத்து ஆன்மவுறுதி பெற்று சுத்த முக்த ஸமத்வ சித்தரான மஹாவீரரின் சமவ சரணத்திற்கன்றோ உலகெல்லாம் வணங்குகிறது! திருந்து; பிறகு திருத்து! அடை; பிறகு அடைவி; நிறைவுறு; பிறகு நிறைவுறுத்து; நீ சுத்தமாகிப் பிறகு சுத்தமாக்கு!

## 6. லவோத்ஸன்

லவோத்ஸன் பிறவிஞானி, பிரமஞானி; மனப்பற்றில்லாது மௌனமும் தியானமுமாகவே உலகில் வாழ்ந்தான். ஸோ என்னும் அரசாங்கத்தில் கணக்குக் கட்டுகளைப் பாதுகாக்கும் குமாஸ்தாவாக வேலை செய்து பிழைத்தான், இந்த ஞானி. உடல் வேலை செய்யும்; உள்ளம் ஆத்மாவில் லயித்திருக்கும். இந்த ஞானியின் புகழ் சுற்றிலும் பரவியது.

கோன்புத்ஸன் நேர்மையான அறிவாளி; ஒருநாள் இவன் லவோத்ஸனை வணங்கி "ஐயா, துன்பக்காடாயிருக்கும் இவ்வுலகம் திருந்த வழியென்ன?" என்றான். "தாந்தாந் திருந்தினாற் சகமுந் திருந்தும். தம்பீ, நீளப் பேசியென்ன? அறிஞர் உள்ளடங்கியிருப்பர். உனது ஆசையானவத் துடிப்புகளை முதலில் அடக்கு; உன்னையறி; உலகைப் பின்னே யறிவாய்; உலகை இயற்கை வழிவிட்டு நன்னிபுன்னை முதலில் வென்று ஆளு, அடக்கம்,

அமைதி, எளிமை, ஆத்மஞானம் இவற்றால் மகிழ்வெய்தும். உட்குவிந்து, தவோதியானம் (பிரம தியானம்) செய். உலகைப்பற்றிய கவலை உனக்கு வேண்டாம்” என்று உபதேசித்தார்—இந்த மஹான் அறிவு முதிர்ந்து பற்றொழிந்து, ஒரு இரவில் தனியிடந் தேடி யோடினார். ஒரு நண்பன் வழிமறித்து, “ஐய, தங்களுள்ளிலகும் ஞானமணிகளை எனக்களித்துச் செல்லுங்கள்; உலகிற்குப் பயனாகட்டும்” என்றான். அவன் வீட்டிலிருந்து லவோத்ஸன் 5000 சீன எழுத்துக்களில் தவோதேகிங் என்னும் ஆத்மஞான நூலை எழுதி வைத்துவிட்டு யாருங்காணாத் தனிமையிற் சென்று யோகத்தில் ஆழ்ந்துவிட்டார். அந்த நூல்தான் இப்போது சீனர் வேதம். தன்னையறிந்த ஞானி பத்து வார்த்தைகள் மௌனமாகச் சொல்லிச் சென்றாலும் போதும். அதுவே மறைமொழியாக உலகில் வழங்கும். அவ்வாறுதான் நமது வேத ரிஷிகளும் தமது ஆத்மானுபவங்களை அடக்கமாக எழுதிவைத்துச் சென்றனர். அநுபவ வாக்கே அமர வேதம்.

## 7. ஜரதுஷ்ட்ரன்

ஆசையாணவச் சிறையிற்பட்டு உலகோர் வருந்துவதைக் கண்டு ஜரதுஷ்ட்ரன் மனமுடைந்தான்; இன்ப மருந்து தேடி 20 வயதில் வீட்டைத் துறந்தான்; பசி பிணி, மழை வெயிலைப் பொறுத்துத் தனிமையிலான்றி தாயினி நதிக்கரையில் தியானித்தான். சமாதி சித்திபெற்றான்; வஹூமானன் என்ற நற்குணத் தேவதையின் ஆசி பெற்றான்; இன்னும் விடாது தியானத்தமர்ந்தான்; அஹூரன் கடவுள் காட்சியளித்து வானரசை இலக்கினான். இன்ப வழி காட்டினான். மனிதனுள் நல்ல எண்ணங்களும், தீய எண்ணங்களும் உதிக்கின்றன; மனவுறுதி கொண்டு நன்

னினைப்பையே வளர்த்துத் தீ நினைப்பைப் போக்கவேண்டும். அஹரிமான் (சாத்தான்) படையான ஆசையாணவங்களின் கையில் மனத்தைக் கொடுக்காமல் முற்றும் இறைவனிடமே கொடுக்கவேண்டும். அவனருளையே கூவி யடையவேண்டும். அவனருள் அனைத்தும் வல்லது. "அஹுரமஸ்தா" (இறைவன் திருவுளம் ஆகுக), என்று சிந்தை செய்க. வாய்மை, தூய்மை,–இந்த இரண்டுதான் கடவுளருளைப் பெறும் வழி. இந்த அருள் வழியை ஜாதுஷ்ட்ரன் நாடெங்கும் உபதேசித்தான். அடி வசவுகளைப் பொறுத்தும் அறத்தை உபதேசித்தான். ஒரு நாள் அஹரிமான் என்னும் துஷ்ட தேவதை மாயவலை வீசியது:–

அஹரி:— ஜாதுஷ்ட்ரா, உனக்கு உலகாட்சி தருகிறேன்; கடவுளை மற.

ஜர:— உலகைக் கெடுக்கும் மோகப்பேயே போ; உயிர் பிரிந்தாலும் உயிர்க்குயிரான இறைவனைப் பிரியேன். நீ விண்ணையும் மண்ணையும் தந்தாலும் என்ன? என் கண்ணான கடவுளை மறவேன்; செல் அப்புறம் என்றான்.

இந்த அன்புறுதியினாலேதான் ஜாதுஷ்ட்ரனின் கொள்கை வெற்றி பெற்றது. சித்த சுத்தி, தியான பக்தி, ஆத்ம சித்தி, தெய்வ சக்தி இவையே அருள் வெற்றியளிக்கும்.

## 8. ஏசு கிறிஸ்து

"போ, பின் சாத்தானே!" என்று உலக மாயத்தை வெருட்டியடித்த ஏசு கிறிஸ்துவை தியானிக்கிறேன். அவர் நாற்பது நாட்கள் பட்டினியிருந்து நோற்றார். ஏசுநாதர் ஆத்ம சித்தர்; ஆன்மாவிற்கு உலகெலாம் ஈடில்லை; அவரவர் இதயமே வானரசு; அதில் அருள் தந்தை வீற்றிருக்கிறார்;

பார்மின்; அகந்தையறுமின்; அன்புறுமின்; ஆருயிர்க்கிரங்கு மின்; எளிமை பூணுமின்; இடம்பமொழிமின்; இன்னலரை யும் மன்னித்திடுமின்; கடவுளரசைக் காதலோடழைமின்; நாடுக; நல்கும்; கேட்டாற் கிடைக்கும்; தட்டினால் கதவு திறக்கும்! என்றுபதேசித்தார். எருசலக் கோயிலில் உடை யுணவுக் கவலைகூட இல்லாது தர்மப் பிரசாரம் செய்யச் சொல்லிச் சீடரை நாடெங்கும் அனுப்பினார். யூதர் புரியும் போலித்தொழுகையையும் களியாட்டங்களையும் கண்டித்தார். தீமையைக் கடிந்தார்; இன்னலைப் புன்னகையால் வென்றார். பகைவர் சூட்சி செய்தனர். அரசியற் குற்றம் சாட்டி ஏசுநாதரைச் சிலுவையேற்றினர்.

ஆ இரத்தக் கண்ணீர் வருகிறது! கல்வாரிக் காட்சி முன்னிற்கிறது! கள்வருக்கிடையே முள்முடிசூட்டி ஏசு நாதரைச் சிலுவையில் அறைந்திருக்கின்றனர். நெற்றி, கை, கால்களில் ஆணியடித்திருக்கின்றனர். இரத்தம் கொட்டுகிறது! கொடிய வன்மனப் பகைவர், கேலி செய் கின்றனர்; காறியுமிழ்கின்றனர்! அப்போதும் ஏசுநாதரின் அன்புப் பொறுமை என்ன சொல்லுகிறது? "அறியாது செய்தனர்; தந்தையே இவர் பிழைகளை மன்னித்தருளுக!" என்றார். "அப்பனே உன் திருக்கரத்தில் என்னுயிரை யீந்தேன்!" என்றீந்தார். மூன்று நாட்களுக்குப் பின் புதை குழியினின்றெழுந்து சீடரை வாழ்த்தி, அன்பும் பொறுமை யும் பூண்டு, அருட்பணி புரியப்பணித்து கிறிஸ்து பகவான் விண்ணேறினார்! ஆ, அந்த அற்புதப் பொறுமையும், ஆத்ம ஞானமுமன்றோ இன்று உலகை ஆளுகின்றன! அகங்காரத் தைச் சிலுவையிடுக! சிலுவையும் வாளும் சிதைக்க முடியாத ஆத்மாவை யறிக! பின்னே இடரில்லை; கிறிஸ் தாபர், உருசூலா, அகாதா, செஸியா காதரைன், பெனிதித்து

விக்கலாய் முதலிய முனிவர், இந்த அன்புப் பொறுமை யாலும் ஆத்மஞானத்தாலும் தம்மையே பலிதானமாக்கி கிறிஸ்து தர்மத்தை வளர்த்தனர். கிறிஸ்து சைதன்யரான பிரான்ஸிஸ் முனிவர், சிலுவைக் காட்சியை எண்ணுந் தோறும் இரத்தமாக வேர்த்தார்! மனைப்பனை விட்டு உயிரப் பனைப் பற்றினர். ஊரில் கல் பொருக்கி கடவுளுக்குக் கோயி லெழுப்பினர். எளிமையும், அன்பும், கற்பும், பொறுமை யும் பூண்டு கிறிஸ்து தர்மத்தைப் பரப்பினர்! அறவோர் வாழ்க! துறவோர் வாழ்க! திருமகன் வாழ்க! திருவருள் வாழ்க! பரமபிதா வாழ்க!

## 9. நபிநாயகம்

ஹிராக் குகையில் நபிநாயகம் தியானிக்கும் காட்சி புலனுகிறது. எல்லாம் வல்ல அல்லாவே, சரணம்! உன்னடி பற்றி உலகில் வாழுகிறேன்; உன்னருளைக் கூவுகிறேன்; ஆண்டவனே போலி வணக்கமும், பொய் நடையும், பொறு மையும், காம வெறியும், கொலை களவும், அடிதடியும், குடி மயக்கும் கொண்டு அஞ்ஞானப் பேய் பிடித்தலையும் எனது நாட்டினர் ஈடேற ஒரு வழி காட்டாயோ! உலகில் உன் னருளும், உண்மையும், அறமும், அன்பும் விளங்கவேண்டும்; தந்தையே வழிகாட்டு'' என்று முறையிட்டார் கருணைக் கடலான ரஸூலல்லா. ஊன்றிய தியானம் உன்னியது ஈயும். இறைவனருள் இறங்கியது! முகம்மது ஆண்டவன் தூதனு னார். அவருக்கு எழுத்தறிவில்லை; இறைவனருளால் எழுந்த அருளறிவே அவர் வாக்கிற் பேசியது; அவர் மணிமொழி களை அன்பர் எழுதி உலகிற்கீந்தனர். ஐம்புலனடக்கி, ஐம் பிழை தவிர்த்து, ஐம்முறை தொழுது, அல்லாவை அன் புறுதியுடன் நம்பி வாழுங்கள்; சைத்தானுக்கு இடங்கொடா தீர்கள் என்று நபிநாயகம் உபதேசித்தார்.

குரேஷியர் கொடுமை செய்தனர்; கல்லெடுத்தடித்தனர்; கொலைசெய்யத் துணிந்தனர்; ஆண்டவன் மீது பாரம் போட்டு அருட்பணி புரிந்தார் முகம்மது. ஹிஜிரியின் போது தௌரிக் குகையில் அபுபக்கருடன் ஒளிந்தார் நபி மணி. அங்கும் பகைவர் தேடிவந்தனர். "ஆ! ரஸூல் காப் பிரியக் கொடியர் வருகிறார்களே; நாம் தனியே யிருக்கி றோமே!" என்று பதறினர் அபுபக்கர். "அன்ப, நாம் தனியே யில்லை; நம்முடன் எல்லாம் வல்ல அல்லா இருக்கி றான்; அஞ்சாதே!'' என்றார் பரம பக்தரான ரஸூல். குகை வாயிலில் சிலந்தி வலை பிரியாதிருந்தது. ஆள் உள்ளே நுழைந்திருக்கமாட்டான் என்று நம்பிப் பகைவர் சென்ற னர். இத்தகைய கடவுளுறுதி வேண்டும்.

* * *

மதீனத்தில் தனது அறத்தை நிலைநாட்டி, இஸ்லாமியக் குடியரை நிறுவிப் பிறகு மக்கத்திலுள்ள பகைவரை வெற்றி கொண்டார் நபிமணி—கடவுளுறுதி, உள்ளத்தூய்மை, தொழுகை, உண்மை யொழுக்கம், அருட்பணி விரதம், அன்பு, ஈகை, இரக்கம்—இவையே இஸ்லாமியக் குடியரசின் கொள்கை.

* * *

நபிநாயகம் ஈதுல்லாஹ் நாளில் அரபாத்து மைதானத் தில், கஸ்வா என்னும் ஒட்டகை மீதேறி இலட்சக்கணக்கான அன்பருக்கு ஈந்த குர்பானி உலகிற்கெல்லாம் பொருந்தும்:— இறைவன் ஒருவன்; அவனே பெரியன்; அவனை நம்புமின்; அவனைத் தொழுது தியானம் செய்மின்; அவனருளிற் கூடி ஒரு குலமாக வாழுமின்; அறிவை வளர்மின்; அன்பைப் பெருக்குமின்; அருட்பணி புரிமின்; ஏழைக்குதவுமின்; தொழுகையும் விரதமும், தூய்மையும் போற்றுமின்!"

## 10. குரு நானகர்

எட்டுப்படிப்பை விட்டு இதயக்கல்வி கற்றார் நானகர்; சடங்குகளை வெறுத்துச் சத்தியத்தை வலியுறுத்தினர். பிள்ளைக்குப் பைத்தியம் பிடித்துப் போயிற்றென்று வைத்தியரிடம் காட்டினர். "ஆம், எனக்குக் கடவுளைப் பார்க்கப் பைத்தியம் பிடித்துவிட்டது;" என்றார். "பையா, உனக்கு நல்ல மருந்து தருகிறேன்" என்றார் வைத்தியர். "எமபாசம் நீங்க மருந்து தருவீரா?" என்று சிரித்தான் நானகன். "மகனே, உனக்கு வயதாயிற்று. என் புலன்களை மேல் பார்த்துவா" என்றார் தந்தை. "இதோ எனது ஐம்புலன்களையும் கவனமாக மேல் பார்த்துக்கொண்டுதானே வருகிறேன்; உலகெல்லாம் உழுது நட்டாலும் ஒரு சாண் வயிற்றுக்குத்தானே. நான் வைராக்யக் கலப்பைகொண்டு மனத்தையுழுது, அறிவை நட்டு, அன்பைப் பாய்ச்சி, தியானத்தால் வளர்த்து சுத்த முத்திக் கனி விளைவிக்கிறேன்" என்றான் பையன். "சரி, அது போகட்டும். கடை வைத்து வியாபாரம் பண்ணு." என்றார் தந்தை. "என் மனமே பெரிய மளிகைக் கடை. அதில் அன்புச் சரக்குகள் வைத்திருக்கிறேன். தேவையான பேர் தாராளமாக வாங்கிச் செல்லலாம்." என்றான். "அடா மகனே, நீ எப்படிப் பிழைக்கப்போகிறாய்! இந்தா இந்தப் பணத்தைக்கொண்டு பட்டணத்தில் மலிவாகச் சரக்கு வாங்கி வந்து விற்பனை செய். இலாபம் பெறலாம்." என்று மன்றாடினர் தந்தை. "மெத்தச்சரி" என்று பணத்தை வாங்கிச் சென்றான். வழியில் ஒரு காடு; அங்கே சில சாதுக்கள் முகாம்போட்டிருந்தனர். அவர்களைக் கண்டு வணங்கினான்; கைமுதலைக்கொண்டு அவர்களுக்குத் தாராளமாக மஹேசுர பூஜை நடத்தி,

வீட்டிற்குத் திரும்பிவந்தான். "மகனே, சரக்கெப்படி; லாபந்தானே?" "கொள்ளை லாபம் அப்பா!" "அப்படியா, எங்கே சரக்கு; எங்கே லாபம்" "அப்பா லாபம் பரலோகத்திலே! சரக்கைவிட சாது சங்கம் நல்லது; பணத்தைவிட சாதுக்கள் பணிவிடை நல்லதல்லவா? அவர்களுக்கு மஹேசுவர பூஜை செய்தேன். அந்தப் புண்ணியம் பெரிய லாபமல்லவா?" என்றான் பிள்ளை. இவன் பைத்தியம் நீங்கும் என்று கலியாணம் செய்து, பாதுஷாவின் களஞ்சியத்தில் தானியம் அளக்கும் வேலையும் வாங்கித் தந்தார் தந்தை.

நானகர் ஊரிலுள்ள சாதுக்கள் பிச்சைக்காரர்களையெல்லாம் கூப்பிட்டு தாராளமாக தானம் அளந்துவிட்டார். ஒரு நாள் ஏக், தோ, தீன்......என்றளந்து தேரா (13) அளக்கும்போது நானகர் பக்தி பரவசம் கிளர்ந்தெழுந்தது. தேரா என்றால் 13 என்றும், நான் உன்னுடைமை என்றும் பொருள். "இறைவ, யான் உன்னுடைமை, என்னை ஆண்டுகொள்!" என்ற தியானத்துடன் தேரா தேரா என்று அன்று முழுதும் ஏழையெளியவருக்கு தானியம் அளந்து கொட்டிக் களஞ்சியத்தைக் காலியாக்கினார். சில நாட்களுக்குப்பின் கபீர்தாஸ் தரிசனமும் உபதேசமும் கிடைத்து நானகர் உலகைத் துறந்து ஒரு தோப்பில் தியானத்தமர்ந்தார். "அட இவனுக்குப் பேய் பிடித்திருக்கிறது" என்று ஒரு மௌல்வியை விட்டு மந்திரிக்கச் சொன்னார்கள். "மௌல்வீ! எனக்குப் பேய்தான் பிடித்திருக்கிறது; ஆனால் அது உலகோரைப் பிடித்த ஆசையாணவப் பேயல்ல; கடவுள் எங்கே, என்னாண்டவன் எங்கே என்று என் மனம் பேய்பிடித்தலைகிறது. கடவுளைக் காண ஒரு மந்திரம் போடேன்." என்றார் நானகர். இதன் பிறகு நானகர் ஊர் ஊராகச் சுற்றித் தம் கொள்கையைப் பரப்பினார்.

ஹரித்வாரத்தில் சில அந்தணர் கிழக்கே திரும்பி பிதுர்களுக்கு அர்க்யம் விட்டனர். நானகர் மேற்கே திரும்பிப் படிகளில் தண்ணீரை வாரிவாரி யிறைத்தார்.

—"ஏனிப்படி?"

—என் அப்படி?"

—நாங்கள் பிதுர்லோகத்திலிருக்கும் எங்கள் முன்னோர்களுக்காகத் தண்ணீர் விடுகிறோம்.

—நான் அதோ அந்த வயலுக்காகத் தண்ணீரிறைக்கிறேன்.

—முட்டாள் மனிதரே, இங்குத் தண்ணீரிறைத்தால் வயலுக்குப் போகுமா?

—நீர் இங்குத் தண்ணீர் விட்டால் பிதுர்லோகத்திற்குப் போகுமோ? அதோ தெரியும் வயலுக்கே இத்தண்ணீர் சேராதென்றால், கண்காணாது எங்கோ இருக்கும் பிதுர்லோகத்திற்கு உமது எள்ளுந்தண்ணீரும் ஏறிச்செல்லுமோ?

அந்தணர் வெட்கி வெகுண்டனர்.

ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றாய் வசிக்கின்றனர்; அவர்களுக்கிடையே ஆணவத்தடை யுள்ளது. இத்தடை நீங்கினால் இறைவனைக் காணலாம். அதற்கு குரு பக்தியும், நாமஸாதனமும், தியானமும் வேண்டும். வீண் சடங்குகள் வேண்டாம், காடு மலைகளுக்கு ஓடவேண்டாம். எங்குமுள்ள இறைவன் உன்னுள்ளத்தில் உள்ளான். பூவில் மணமும், நாவிற் சுவையும்போல உன்னுள்ளத்திலிருக்கிறான் இறைவன். அவனை உள்ளே தேடு; தியானம் செய்;" என்றுபதேசித்தார் நானகர். ஸத்ஸ்ரீ அகால்!

## 11. இராமகிருஷ்ண பரமஹம்ஸர்

"மா, மா!" என்று ஆர்வக்கனலுடன் கூவிக் கூவி தெய்வ சக்தியை சாட்சாத்கரித்தார் பரமஹம்ஸர். அவரது

அன்பிற்குக் கல்லிலும் காளிசக்தி யெழுந்தது. "அம்மா! உன்னைக் கண்ணாரக் காணவேண்டும்; வா, வா உன்னைக் காணாது உயிர் வைத்திருக்கமாட்டேன்!'; என்று ஒரு வாளால் தன்னை வெட்டிக்கொள்ளப் போகும்போது மஹா சக்தி அருள் பூத்தாள்; அன்பனுட் புகுந்தாள். பக்தியின் தீவிரத்தால் மூலசக்தி யெழுந்தது. அதை இரவில் பஞ்ச வடியில் தியானத்தால் வளர்த்தார் பரமஹம்ஸர். "நீ ஆன்மா; எல்லாம் அதுவே" என்று உபதேசித்து நிர்விகல்ப சமாதிக்கு வழிகாட்டினார் தோதாபுரி. பரமஹம்ஸர் ஆறு மாதம் ஆழ்ந்த ப்ரம்ம ஸமாதியில் இருந்தார். தன்னைக் கண்ட பின், சாக்த பௌத்த கிறிஸ்தவ இஸ்லாமிய சீக்கிய மதானு பவங்களும் அவருக்கு எளிதிற் கிடைத்தன.

எல்லா சித்தியும் பெற்ற பிறகே "குழந்தைகளா வாருங்கள்!" என்று கோயிற் கோபுரத்தின் மேலேறிச் சீடரைக் கூவினார் பரமஹம்ஸர்.

* * *

நரேன், "ஐயா கடவுளைக் கண்டீரா? காட்டுவீரா?" என்றதும் "ஆஹா கடவுளைக் கண்டேன், காட்டுவேன்" என்றார் பரமஹம்ஸர். விவேகானந்தரிடம் நாராயணனைக் கண்டார். நானே இந்த வடிவானேன் என்று சீடரைச் சுட்டினார். தனது சக்தியை நரேனுட் செலுத்தி மஹா சமாதி யடைந்தார். அந்த சக்தியே சிகாகோ மேடையில் வேதாந்த கேசரியாக நின்று கர்ஜித்து உலகை ஞானவெற்றி கொண்டது. பல நதிகள் ஒரு கடலிற் கலக்கின்றன; பல சமயங்களிலும் ஒரே பரம்பொருள் உள்ளான். அவனடி பற்றி உலகில் வாழுக என்றுபதேசித்தார் பரமஹம்ஸர். அந்த அருள் வாக்கு இன்று உலகெல்லாம் பரவி அற்புத

மான் ஞானப்பணிகளையும், பொதுநலப் பணிகளையும் புரி கின்றது!

பரமஹம்ஸர் வாழ்க!

நூல் எ ஞானியர் நினைப்பு

முற்றிற்று

---

## நூல்—அ

## அறிவு மலர்கள்

---

### 1. சோக்ராத்தர்

"உன்னை நீயறி" என்ற ஆத்மஞானத்தை வாலிப ருக்கு உபதேசித்தார் மஹாத்மா ஸோக்ராத்தர். அந்த ஞானி மீதும் கறுக்கொண்டு மரண தண்டனை விதித்தனர் நாகரிகப்போலிகளான ஆதன்ஸ் அதிகாரிகள். "நல்லது; நான் தர்மத்திற்காகச் சாகப்போகிறேன்; நீங்கள் இக் கிழவனைக் கொன்று வாழப்போகிறீர்கள். எது நலமென்று இறைவன் அறிவான்; உலகம் தீர்மானிக்கும்" என்றார் சொக்ராத்தர்.

சிறைக்காரன் ஒரு கிண்ணத்தில் கொடிய விஷம் தந்தான். அதைப் புன்னகையுடன் வாங்கி ஒரே மடக்கிற் குடித்தார் மஹான். சீடர் தடுத்தனர், அழுதனர். "அழா தீர்கள்; அமைதியாயிருங்கள்; இவ்விஷம் இந்த வினைச் சட்டையினின்று என்னைப் பிரிக்கும்; அவ்வளவுதான். எனக்குச் சாவில்லை; நான் ஆன்மா; அன்பர்காள், நஞ்சும் அமுதும் கலந்ததே வாழ்வு. அது இன்ப துன்பப் போர்க் களம். ஆத்ம த்யானம் செய்யுங்கள். 'நான் கட்டற்ற ஆன்மா' என்றறியுங்கள். பிறகு துன்பமில்லை, அச்சமில்லை, சாவில்லை, தன்னறிவே தாரகம்!" என்று உபதேசித்து ஆவி யானார் மஹான். விஷங் கொடுத்தவர் மண்ணானார். விஷ முண்ட ஆத்மஞானி சிரஞ்சீவியாக உலக சரித்திரத்தில் வாழுகிறார். மேனாட்டுத் தத்துவ ஞானத் தந்தை சொக் ராத்தனே. அவர் தமது உபதேசங்களை எழுதிவைக்கக் கூடக் கருதவில்லை. ப்ளாத்தன் அரிஸ்தோதலன் போன்ற

மகத்தான அறிவாளிகள் சொக்ராத்தன் உபதேசங்களை உலகிற்கு விளக்கினர். ஞானி வாழ்க!

## 2. திருவாய் மொழிகள்

நல்லதுமில்லை; பொல்லதுமில்லை; எண்ணமே இரண்டாய்க் காண்பது; உனக்கு நீ உண்மையாயிரு.-(ஷேக்ஸ்பியர்). "கடவுளென்பது உன்னினும் அன்னியமில்லை; என்னுள் அதுவுள்ளது; அதை இன்னதென்றியம்பிலேன்; என்னுள் அது உணர்வாகிறது"—(வால்ட் விட்மன்). சிரத்தை, பக்தி, சமநிலை, புலனடக்கம், தியானம் இவை ஆன்ம சித்தி சாதனம் -(வியாசர்). என்றும் இயல்பாயுள்ள இதயப்பொருளை "நானார்; நான் அது என்றறிந்து அன்னியமின்றி தன்னிலையிரு" —(மஹர்ஷி). வாழ்வே யோகம்; வாழ்வே ஆன்ம விரிவாகுக —(அரவிந்தர்). விண்ணரசு உன்னுள்; அதை அடை; தெய்வத் தந்தை போலப் பூரணம்பெறு—.(ஏசுநாதர்). புறஞ்செல்லும் மனத்தைத் திருப்பி, உட்குவிந்து ஆன்மாவில் ஊன்றியிரு; தியானத்தால் ஆன்மா புலனும்.—(கண்ணன்). நான் எனது என்னும் செருக்கு முளையாதடங்கினுல்தான் மனம் நிலைக்கும்; தியானம் சித்திக்கும். தியானத்தால் துயரொழியும். புலன்கள் அலையாது தன்னில் நிலைத்திருத்தலே இருக்கை. சித்தம் சலியாதிருத்தல் பிரத்யாகாரம்; சித்தம் ஒன்றில் (ஆன்மாவில்) ஊன்றல் தாரணை. அதையே (ஆன்மாவையே) தொடர்ந்து நிற்றல் தியானம். அதில் லயித்து வேறுபாடின்றி நிற்றல் சமாதி. தியானம் தாரணை சமாதி மூன்றும் சேர்ந்து சம்யமம். சம்யமத்தால் எல்லா அற்புத சக்திகளும் வாய்க்கும்.—(பதஞ்ஜலி).

## 3. வீர வைராக்கியம்

யமுனை யடவியின் தனிமையில் இருபதாண்டுகள் அருந்தவம் புரிந்தான் குருகோவிந்தன். தேசவிடுதலைக்காக

ஒரு வீரசக்திக் கனலை வேண்டி மஹாசண்டியை உபாசித்திருந்தான். அப்போது அன்பர் வந்து வணங்கி பஞ்சாபிற்குத் திரும்பி வரவேண்டுமென்று குருவை அழைத்தனர். "இப்போது சமயமில்லை; தவம் முடியட்டும்" என்றார் குரு. குருவிற்கு இரண்டு தங்கத் தோடாக்கள் காணிக்கையாக ஈந்தனர். ஒன்றைத் தண்ணீரில் உருட்டிவிட்டார் குரு; "ஐயோ விலையுயர்ந்த தோடா எங்கே விழுந்தது?" என்று தேடத் தொடங்கினர் சீடர். "அங்கேதான் விழுந்தது!" என்று மற்றொரு தோடாவையும் தண்ணீரில் வீசித் தவ வினை தொடர்ந்தார் குரு. தவஞ் செய்வார் தமது கருமமே கண்ணுவார். தமது புலன்களைப் புறத்தே யிழுக்கும் எத்தகைய மாயைக்கும் இடந்தரமாட்டார்கள்.

## 4. தியாகம்

மஹா காளியின் வரம் பெற்றுவந்து குருகோவிந்தன் ஆனந்தபுரியில் ஒரு பெரிய சக்தி யாகம் நடத்தினான். ஏராளமான சீடர் வந்து கூடினர். குருவைப் போற்றினர். ஸத் ஸ்ரீ அகால் என்று முழங்கினர். சீடர் முன் கனல் பறக்கும் விழிகளுடன் தோன்றி வீர வாளை யுயர்த்தி "இந்த வாளில் சக்தி இறங்கியிருக்கிறாள். நமது பாரத தர்மத்தைக் காக்கலாம்; நாட்டிற்கு விடுதலையுண்டு; ஆனால் அதற்காக ஐந்து பேர் பலியாகவேண்டும்; மஹா காளி கேட்கிறாள்! யார் வருகிறீர்கள்?" என்று குமுறினான். சபையில் பேச்சுமூச்சில்லை. எங்கு நம்மைப் பலிவாங்கி விடுவானோ என்று சிலர் நழுவினர். "யாகம் என்றால் முந்தினீர்; தியாகம் என்றால் பிந்தினீர்; இவ்வளவு பேடித்தனமிருந்தால் விடுதலை எப்படி வரும்? ஆண்மையற்ற அலிகளுக்கு குருவாயிருப்பதைவிட இதோ நானே சண்டிக்கு பலியாகிறேன்" என்று

திரும்பினர் கோவிந்தராய். "எளியேன், இதோ, வந்தேன்!' மஹா காளி ஏற்றுக்கொள்ளட்டும்!" என்று ஒரு ஏழை நாவிதன் முன்வந்தான். "நீயே வலியன்;" என்று அவனை உள்ளே கூட்டிச் சென்று இரத்த வாளுடன் வந்தார் குரு. மீண்டும் நான்கு பேர், எளியர் வந்தனர். ஐந்து பேரும் பலியானார்கள் என்றே சபை முழுதும் நம்பியது. அப்படியல்ல. குருவின் வாளில் தோய்ந்தது ஆட்டு ரத்தமே. மறுநாள் சீடரையெல்லாம் கூட்டினர் குரு. அந்த ஐவரையும் அவர் முன் கொணர்ந்தார். "சீடர்களே, கல்வி, செல்வம், பிறப்புகளால் அல்ல; ஆளுக்கழகு ஆண்மையும் தியாகமும். இத்தனை பேர்களில் இந்த ஐவரே தமது உயிரை தர்மத்திற்குப் பலிதானமாக்கத் துணிந்தனர். இவர்கள் எனது அன்பிற்குரிய ஐவர் (பஞ்சப்யாராக்கள்)" என்றான். சமய தீக்ஷை யீந்து அவர்களை முதல் கால்ஸா வீரராக்கினன். அவர்களுடைய வீரத் துணிவினால் எல்லாச் சீடரும் கால்ஸா வீரராயினர். தியாகமே யாகம்.

## 5. சமூக வீரர்

இராஜா ராமமோஹன் நவ இந்தியாவின் தந்தை. அவர் பாரத தர்மத்தை விசாலமாக்கினர்; அதிற் படிந்த மாசை நீக்கினர். வீண் வைதிகச் சண்டமாருதங்களை வீரப் பொறுமையுடன் எதிர்த்துப் பெண்ணுரிமைக்காகப் போராடி வென்றார். உடன்கட்டை யேற்றமென்னும் படுகொலைச் சடங்கை அடியோடொழித்தார். ஆண் பெண் சமவுரிமைக் காகப் போராடினர்; பல தார மணத்தைக் கண்டித்தார். வாசுல்கத்தை மறுத்தார்; மறுமணத்தையும், கலப்பு மணத்தையும் ஆதரித்தார்; பெண் கல்விக்காகப் பள்ளிக்கூடங்கள் கட்டினர். மேற்கையும் கிழக்கையும் சேர்க்க முயன்றார். ஆங்கில-இந்து கலாசாலைகளும், வேதாந்தக் கல்லூரியும் ஏற்

படுத்திப் பாடப் புத்தகங்களும் நல்ல வசனத்தில் எழுதிக் கல்வி பரப்பினர். அச்சுக்கூடம் வைத்துப் பத்திரிகைகள் நடத்தினர். தெற்கே சர்வமத சமரஸத்தை நிலைநாட்டியவர் இராமலிங்கம்; வடக்கே ராமமோஹன் அதற்காக பிரம்ம சமாஜத்தைக் கண்டார் (20–5–1828). சங்கரரின் கொள்கையை அவர் பின்பற்றினர். ப்ரம்மம் ஒன்று, அதுவே அனைவருள்ளும் ஆன்மா. பிரம்மைக்கியமே வாழ்வின் நோக்கம். தியான யோகத்தால் ஜீவப் பிரம்மைக்கியம் எய்தும். அத்துடன் தன்னலமற்ற பொதுநலப் பணியும் வேண்டும். சாதி மத நிற வேறுபாடுகள் கூடா; பிரம்ம சமாஜத்தில் இந்து, இஸ்லாம், கிறிஸ்து பேதம் இல்லை. அருவான பரம் பொருளையே அங்கு தியானத்தாலும், தோத்திரத்தாலும் வழிபடவேண்டும். சிலை, படம், குறி எதுவும் கூடா. எவ்விதமான ஆகம பூஜையும் கூடாது. எத்தகைய உயிர்ப் பலியும் கூடாது. எம்மத கண்டனமும் கூடாது. அறிவு, அன்பு, அருட்பணி, உயிரிரக்கம், சமரஸம், ஒற்றுமை, ஈகை, அத்யாத்ம ஸாதனம்—இவையே பிரம சமாஜத்திற்கு ராமமோஹன் விதித்த சன்மார்க்கம். ராமமோஹனை தியானிப்போம்; பொதுநலம் புரிவோம்.

## 6. தயானந்தர்

தயானந்தர் வீர ரிஷி, தூய துறவி, வேதச்சுடர், அஞ்சா நெஞ்சம் கொண்ட பொதுநல தீரர். உரு வணக்கத்தை மறுத்து, வைதிகத் தந்தையிடமிருந்து தப்பி ஒரு குருவைத் தேடி 15 ஆண்டுகள் வட நாடெல்லாம் சுற்றி சாது சங்கம் வசித்தார்; பல சாத்திரங்கள் கற்றார்; ஹடராஜ யோகங்களைப் பயின்றார். முடிவில் அவர் கண்ணைத் திறக்க அந்தகத் துறவியான விரஜானந்தர் வாய்த்தார். சாதி சமயக் கட்டுப்பாடுகளை விலக்கி விரஜானந்தர் வேதத்திற்குப் புதுப்

பொருளுரைத்தார். உண்மையொளியை (சத்யார்த்தப் பிரகாசம்) தயானந்தருக்கு விளக்கி அதை நாடெங்கும் பரப்பச் சொன்னார். தயானந்தர் வீராவேசத்துடன் வேதத்தின் சமரஸ வுண்மைகளை விளக்கிப் பிரசாரம் செய்தார், போலி யொழுக்கங்களைக் கண்டித்தார். வைதிகர் புரட்சி செய்தனர்; கொல்லச் சூழ்ச்சி செய்தனர். ஒரு பகைவன் வாளை யோங்கினான்; அதைப் பிடுங்கி ஒடித்தெறிந்தார் பிரமசாரி பயில்வானான தயானந்தர். ஒரு பகைவன் வெற்றிலையில் நஞ்சு வைத்துக் கொடுத்துவிட்டான். தௌதி நௌலி செய்து நஞ்சை யுமிழ்ந்தார் தயானந்தர். அவனைச் சிறையிடவேண்டுமென்றனர் நண்பர். "நான் யாரையும் சிறையிட வரவில்லை; மடமைச் சிறையினின்று மாந்தரை விடுவிக்கவே வந்தேன்" என்றார் தயானந்தர். காசியில் பண்டிதர் கல்லும் மண்ணும் சாணமும் எறிந்தனர். எல்லாம் பொறுத்து அவர்களுடன் வாதாடி வென்றார். பம்பாயும் பஞ்சாபும் அவரை நன்கு வரவேற்றன.

1875-ல் பம்பாயில் ஆரிய சமாஜத்தை நிலைநாட்டினார் தயானந்தர். பாரத தர்மச் சுடரை வீரவொளி பெறத் தூண்டியதும், வேதத்திற்கும் புத்துயிரீந்ததும், முறையான குருகுலக் கல்வியைப் பரப்பி பிரமசரிய தர்மத்தைக் காத்ததும், உண்மை, ஒற்றுமை இரண்டிற்கும் போராட தர்ம வீரரைப் படைத்ததும் ஆரிய சமாஜமே. தயானந்தர் பல பாடசாலைகளையும், வேதசாலைகளையும், பரோபகார சபைகளையும் நிறுவினார். சத்யார்த்தப் பிரகாசம் என்னும் ஆரிய தர்ம நூலை யெழுதினார். வேதத்திற்குப் புதிய இலக்கணம் எழுதினார். வேதக் கல்வியை எல்லாருக்கும் பொதுவாக்கினார். சாதி வேற்றுமை, வருண பேதம், தீண்டாமை,

பாலிய விவாகம் முதலிய சமூகத் தீமைகளைக் கட்டோ டொழித்தார். ஹிந்திக்கு அவரே தேவநாகரி எழுத்தை அமைத்தார். பெண்ணுரிமையை நிலைநாட்டினார். பிற மதம் புகுந்தவரைச் சுத்தி செய்து ஆரிய சமாஜத்திற் சேர்த்தார். பரம்பொருள் ஒன்று; அது சுத்தம், நிர்க்குணம், சச்சிதானந்தம், சத்தியம், பிறப்பிறப்பில்லாத நித்தியம், எங்கும் நிறைவு. ஓம் என்று அதனை வணங்குக. வேதமே உண்மை நூல். அதைப் பயில்க; பயிற்றுக. தினம் இரண்டு மணி தியான வழிபாடு செய்க. ஆன்ம நலமும், யாக்கை நலமும், ஆருயிர் நலமும், சமுதாய நலமும், ஆரிய தர்ம நலமும், போற்றுக. மெய்யைப் போற்றுக; பொய்யை வீழ்த்துக. ஆண்கள் 24, பெண்கள் 16 வயது மட்டுமாவது மாசற்ற பிரமசரிய வொழுக்கத்துடன் கல்வி பயில வேண்டும். வாளும், நஞ்சும், வசவும் பொறுத்து இத்தகைய உண்மைகளை விளக்கிப் பழக்கி, அவை பரவப் பல நிலயங்களை நாட்டிய தயானந்தரைத் தியானிப்பாம்!

## 7. விவேகானந்தர்

கன்னி முனையில் வேதாந்தகேசரி விவேகானந்தர் தியானித்தார்:— எழுந்திரு பாரதத்தாயே! ஞானத்தாயே, தீரரின் அன்னையே, மேற்கும் கிழக்கும் அதிர ஓம் தத்ஸத் ஓம் என்று வேதாந்தச் சங்கு முழக்கு! விடுதலையின்பம் பொங்க, புத்தழகு பொலிய வீரப்புன்னகையுடன் எழுந்திரு! உன் சக்தி கடலினும் விரிந்தது! தெய்விக ரிஷிகளின் தாயே, உலகெலாம் உய்யும் பேரின்ப மருந்து உன்னிடமே யுள்ளது.

பாரத தர்மமே, உனது புண்ணிய வுடலில் காலக் கேட்டாற் படர்ந்த தீமைகள் தீய ஒளிகிளர்ந்தெழு! மட

விருள் விலகுக! ஆத்ம ஞானங் கிளர்க! கல்வி பரவுக! தீண்டாமை யொழிக! சாதி வேறுபாடுகள் நீங்குக. வறுமை யொழிக! வளமையும் தொழில்களும் வளர்க! பொதுநலம் புரியும் புண்ணியர் பெருகுக! என் தெய்வங்கள் வறுமைத் தெய்வங்கள், தரித்திர நாராயணர், வருந்துந் தெய்வங்கள், தாழ்த்தப்பட்ட தெய்வங்கள். எல்லா மானிடத் தெய்வங் களுக்கும் சமநோக்குடன் தொண்டு செய்ய என் மூச்சை அர்ப்பணம் செய்கிறேன். கடல் கடக்கிறேன். வேதாந்த முழக்கம் செய்கிறேன். ஞானக் கிழக்கால் செல்வ மேற்கை வெல்கிறேன். ஓம் தத்ஸத்!

* * *

வெண்ணுடெங்கும் வேதாந்த முழக்கம் செய்து புகழ் சுமந்து வந்த விவேகானந்தர், பாஸ்கர சேதுபதி (அவர் நினைப்பிற்காக) நிறுவிய வெற்றித் தூண் முன் பேசியது:—

“அன்பே சமயம்; வைதிகச் சடங்குகளல்ல. சுத்தம், நன்மை—இவையே வழிபாட்டின் கருத்து. சீவனில் சிவனை அன்பு செய்வோன் உண்மையாக வழிபடுகிறான். ஆத்ம ஞானத்தை தாராளமாக வழங்குதலே ஈகை. ஆன்மச் செல்வத்தை அனைவருக்கும் பொதுவாக்க வேண்டும். அடுத்தது கல்வி; அடுத்தது வாழ்வழுத; அடுத்தது அனைவ ருக்கும் உணவளித்தல். மனிதர், தீரமுள்ள மனிதர் வேண்டும். நூறு ஆத்ம தீரரிருந்தால் உலகையே புனருத் தாரணம் செய்யலாம். தீரர், தியாகிகள், அறிவொளி நிறைந்த ஆத்ம வீரரைப் பயிற்றுவதே என் முதல் வேலை. ஆற்றல் வேண்டும். இரும்புத் தசைகளும், உருக்கு நரம்பு களும் வேண்டும். மனிதரை ஆளாக்குங் கல்வி வேண்டும். சோம்பல், பொறாமை, சுயநலங்களை யொழியுங்கள்! தளர் வை, மெலிவை, அச்சத்தை நஞ்செனா நீக்குங்கள். “நான்

ஆன்மா; நான் சுதந்திரன்; அழிவற்றவன்; நான் அறிவு; நான் சக்தி'' என்று ஆயிரந்தரம் ஜபியுங்கள்.

நீளிரவு நீங்குகிறது! இன்னல் ஒழிகிறது! சோம்பல் ஒழிந்தது! பாரதி எழுந்தாள்! இனி யுறங்காள்! புற வன்மைகளும், அயலார் திறமைகளும் இனி அவளை அடக்கிவைக்க முடியா. அகண்டமானவள், பிரம்மாண்டமானவள்—பாரத மாதா—எழுந்து நின்றாள்! எழுமின்! விழிமின்! உண்மை யுணர்மின்! எண்ணிய நல்வினை நண்ணத் தளராதுழைமின்! ஓம் தத்ஸத்! சிவோஹம்.

## 8. ராமதீர்த்தர்

இமய மலையில் பிரம்மபுரிக் காட்டில் ராமதீர்த்தர் ஆத்ம த்யானம் செய்தார்:— நான் பிரமம்; தன்னறிவே விடுதலை; ஆத்ம தீரரால்தான் நாட்டில் சத்தியம், தைரியம், பொதுநலம் பரவும். உள்ள பொருளை உள்ளத்தில் தேடு! சாமி நான் என்பதே உண்மை; இதை யறிந்தவரே சுத்த முக்தர். தன்னறிவே சமய சாரம். சுத்தமே அறிவைத் துலக்கும். சுத்தமே வீரம், உறுதி, ஒற்றுமை, அமைதி, சக்தி. தத்வமஸி என்ற ஞானத் தீயில் சாதிமத வேறுபாடுகள், பந்தத்தொந்தங்களைச் சுட்டெரிக்கவேண்டும். உலகுயிர்களெல்லாம் என்னுயிர்.

* * *

நானே இந்தியா; இந்தியா என் உடல்; கன்னி முனை என் பாதம்; இமயம் என் சிரம்; என் சிகையினின்றே கங்கை வழிகிறது; என் சிரசினின்றே சிந்து பிரம்மபுத்திரா நதிகள் பாய்கின்றன. விந்தியம் என் அரைக்கச்சை; கொங்கணம், கருநாடகம் எனது கால்கள். கிழக்கும் மேற்கும் என் கைகள்; அவற்றால் மனித சமுதாயம் முழுதை

யும் நான் தழுவுகிறேன். எனதன்பு உலகளவு. என் னான்மா, உலகான்மா; நான் நடக்கும்போது பாரத பூமியே நடக்கிறது; நான் பேசும்போது பாரத பூமியே பேசுகிறது; என்னில் பாரத பூமியே உயிர்க்கிறது என்றுணருகிறேன். நான் இந்தியா; நான் சங்கரன்; நான் சிவன்! ஓம் தத்ஸத்!

## 9. மஷ்ரக்-எல்-அஸ்கர்

## (Mashrak-el-Azcar)

மஹாத்மாக்களான பாப், பஹெஹால்லா, பஹாய்—இம் மூவரும் அரிய பெரிய தியாகங்களைச் செய்து ஒரு சர்வ சமரஸ சமயத்தை உலகிற் பரப்பினர். "யாபஹா அல் அல்லாஹ்!" (ஆண்டவன் அருட் பெருமை விளங்குக) என்பது அவர் மந்திரம். ஆண்டவன் அனைத்துயிர்த் தந்தை; வணக்கம், விரதம், வாய்மை, தூய்மை, அன்பு, அருட்பணி—இவையே அவனை யடையும் வழி. ஒவ்வொரு வரும் உள்ளத்தில் ஆழ்ந்து கடவுளின்பம் பெறலாம். எல் லாம் அவன் மயம் என்ற வுணர்வில் மாந்தர் ஒருகுலமாக வாழவேண்டும். உலகில் கடவுளரசே அரசாக நிலவ வேண் டும். பிரிவினை செய்யும் மூடப் பழக்கங்களும், வாழ்வைக் கெடுக்கும் மயக்கங்களும், தீமைகளும், போர் போட்டி பொறாமைகளும் ஒழிந்து, உலகெலாம் அறமும், அறிவும், அன்பும், அமைதியும், ஆற்றலும், அழகும், அருளும் நிறையவேண்டும் என்பது பஹாய் மதக் கொள்கை. இக் கொள்கையை நிறைவேற்ற மஷ்ரக்-எல்-அஸ்கர் என்னும் ஒரு கோயிலூர் அமைக்கின்றனர். ஒரு கோயில்; அதில் எல்லாரும் கடவுளைத் தியானிக்கலாம், வழுத்தலாம், ஜபிக்க லாம்; அதில் சமரஸ ஸன்மார்க்க உபதேசம் செய்யலாம். அதை நடுவாகக் கொண்டு, பொதுநலத்திற்கு வேண்டிய

கலாசாலைகள், தொழிற் கூடங்கள், மருத்துவ சாலைகள், புத்தகசாலைகள்—எல்லாம் அமைக்கின்றனர். அவற்றைச் சுற்றி சுகாதார முறைப்படி சுத்தமான வீடு கட்டி பஹாய் தர்மப்படி அன்பர் சேர்ந்து வாழுகின்றனர். கருத்தில் கடவுளும், கையில் பொதுநலப் பணியுமாக வாழுகின்றனர். இக்கோயிலூர்களில் எல்லாரும் கடவுளுணர்வுடன் சமரஸமாக வாழுகின்றனர். ஒவ்வொருவரும் எல்லாருக்கும் எல்லாரும் ஒவ்வொருவருக்கும் வாழுகின்றனர். குவலயமெல்லாம் கோயிலூராகுக!

## 10. அறுசமயம்

அறம், அன்பு, அருள், தூய்மை, வாய்மை, தன்னறிவு இந்த ஆறையும் பயில்க. ஆறு சமயங்களைப் பயின்ற பயனும். ஓதியுணரும் வேதத்தினும் சோதியுணரும் நாதம் மிக்கது. ஊரடங்கிய நள்ளிரவில் ஒரு குழலோசை தெளிவாகக் கேட்பதுபோலே, சித்தத் திரைகள் அடங்கிய உள்ளமைதியில் உள்ளே ஓமொலி கேட்கும். அதையே கவனித்துவந்தால் கல்லாக் கலைகள் கற்கலாம். காணாக் காட்சிகள் காணலாம். சொல்லாப் பொருளுணரலாம். எல்லா நலமும் பெறலாம்.

## 11. அட்டமா சித்தி

ஆணவங் குறுக்கலே அணிமா. அன்பைப் பெருக்கலே மகிமா. மனத்தை யடக்கலே லகிமா. வாய்மையுணர்வதே கரிமா. உள்முகப்படுவதே பிராப்தி. சர்வாத்ம ஞானமே பிராகாம்யம். தானுயிருத்தலே ஈசத்வம். அன்னியமற்றுத் தன்வசத்தனுயிருத்தலே வசித்துவம். இதுவே உண்மையான அட்டமா சித்தி. மற்றதெல்லாம் வித்தை காட்டலேயாகும்.

## 12. திணைக்குறிப்பு

நமது பழந்தமிழர் மலர்களைக்கொண்டு போர்க்குறிப் பறிந்தனர். மலர்களாலேயே பேசினர். வெட்சி பூண்டு பகைவர் பசுக்களைக் கவர்வர். கரந்தை பூண்டு பசு மீட்பர். வஞ்சி சூடிப் போரெடுப்பர். காஞ்சி சூடி நாடு காப்பர். நொச்சி சூடி யரண் காப்பர். உழிஞை சூடி அரண் வளைப்பர். தும்பை சூடிப் பொருவர். வாகை சூடி வெற்றி முழக்கு வர். ஒரு ஆத்ம வீரன் மனப்போர் வென்று தானே தானுக வேண்டும். சாத்வீக குணமான பசுக்களை ராஜச தாமதப் பகைவரிடமிருந்து மீட்கவேண்டும். உள்ளமே யோகியின் நாடு. அதிற் புகும் சினம் வெகுளி காமம் மயக்கப் பகை களைப் பொருது வெல்ல வேண்டும். வாய்மையே அரண். அதைப் பொய் யரக்கர் அணுகாது காக்கவேண்டும். யோகி யின் வெட்சி ஒழுக்கம், கரந்தை ஆசார நியமம், வஞ்சி வைராக்கியம், காஞ்சி அகத்துறவு, நொச்சி மனங்குவிதல், உழிஞை தியானம், தும்பை மனோ நாசம், வாகை ஆன்ம வெற்றி. அந்த வெற்றிப்பயன் ஆத்ம சாந்தி, ஆத்ம திருப்தி, ஆத்ம ரதி, ஆத்மாராமம்! நானுர் (சோஹம்) என்பதே ஞானியின் போர் முரசம். நான் புறப் பொரு ளல்ல என்பதே முற்றுகை முழக்கம். நான் சுத்தான்மா என்பதே ஞானியின் வெற்றி முரசம்.

## 13. பகைக்குணம்

தீயினுற் பஞ்சழியும். பொருமையால் வாழ்வழியும், அமைதி கெடும். நெஞ்சிற் புகுந்த அம்பை விட வஞ்சம் புகுந்த மனம் அதிகத் துன்பஞ் செய்யும். நஞ்சால் உடல் அழியும், நசையால் அறிவழியும். காற்ருல் மேகங் கலையும். சினத்தால் தவங் குலையும். கடன் கவலை பெருக்கும்;

செருக்கு பகையைப் பெருக்கும். வைரம் வைரமறுக்கும். மனவுறுதி மனச்சோர்வை நீக்கும். குலிசம் மலையைத் தகர்க்கும். குருமொழி இடரைத் தவிர்க்கும். கருடன் பாம்பைக் கொத்தும். கடவுளன்பு மனமாயத்தை நீக்கும். மத யானையைச் சிங்கம் பிளக்கும். மனவகந்தையை ஆத்ம ஞானம் பிளக்கும். ஆத்திர வெறிகளை அமைதியால் வெல்லலாம்.

## 14 உடலுயிர்

கூட்டிற்கும் குருவிக்கும், முட்டைக்கும் குஞ்சிற்கும், பாம்பிற்கும் சட்டைக்கும், விளக்கிற்குங் கூண்டிற்கும், படத்திற்கும் கண்ணாடிக்கும், பூவுக்கும் மணத்திற்கும், சாட்டைக்கும் பம்பரத்திற்கும், அரசிற்கும் அரசனுக்கும் எப்படி யுறவோ அப்படியே இயற்கையுடலுக்கும் உயிர்க்குயிரான சுத்தான்மாவிற்கும் உறவு. இவ்வுடல் நமதே, நமக்கே என்கிறோம். நாய் நரி பேய் கழுகு நோய் நமன்கள் நமதே, நமக்குத்தான் என்று நாட்பார்த்துக்கொண்டிருக்கின்றன. உடலில் உயிர் இருக்கும்போதே வினைத்தளை நீங்கி மீண்டும் ஊன் சுமக்காது விடுதலை பெறும் சாதனங்களைச் செய்க!

## 15. பந்து

வெளியிலிருப்பது சுதந்திரக்காற்று. பந்திலிருப்பது பந்தக்காற்று. பந்திற் கட்டுண்ட காற்று உந்தப்படுகிறது! இங்குமங்கும் அடித்து, இந்த இலக்கின் (goal) வழியே, அந்த இலக்கின் வழியே செலுத்தி, மீண்டும் உள்ளே கொணர்ந்து அடிக்கிறார்கள் பந்தை. ஆட்டம் முடிந்து தலைவன் கட்டை அவிழ்க்கு மட்டும் பந்துண்ட காற்றிற்கு இரண்டு கட்சியிலும் உதைதான். எல்லையற்ற பரமாகாசம்

இந்த உடலிற் புகுந்து ஆசாபாசங்களாற் கட்டுண்டிருக்கிறது. வாழ்வு பந்தடி மேடை. அதில் இருவினைப்பயன்களும் இரண்டு கட்சிகள். பிறப்பிறப்பென்னும் இலக்கினூடு பந்தை யுந்தியுந்தி மீண்டுங்கொணர்ந்து விளையாடுகிறார்கள். குணதொந்த விகாரங்கள் காலோயுமட்டும் விளையாடுகின்றன. முதல்வன் கட்டவிழ்த்ததும் ஆன்மா எல்லையற்ற பரமாகாயத்திற் கலந்தின்புறும்.

## 16. தெளிவு

மண்டி நீருக்குத் தேற்றும் விதை யுரைக்கிறோம். தண்ணீரை அலுங்காது வைத்தால் மண்டி அடியிலே தங்கும். தெண்ணீரை மேலாக இறுத்துக்கொள்ளலாம். தெளிந்த நீரை எவ்வளவு கலக்கினாலும் மண்டியாகாது. மண்டி அடியில் தங்கியபோது கலக்கினால் தெளிந்ததும் மண்டியாகும். மனம் ஆசையாணவம், சினம், பொறாமை யழுக்குகள் மண்டியது. அதை அன்பெனும் தூய பானையிற் பெய். இறைவன் திருநாமத்தேற்றும் விதை யுரை. அலுங்காமல், அசையாமல் அப்படியே தியானத்தில், மோனத்தில், தனிமையில், அமர்ந்து, மனமண்டிகள் கீழிறங்கி ஞானத் தெளிவு மேலே வரும். தெளிவை வடித்தெடுத்துக்கொண்டு அழுக்குகளைத் தூர வீசு. நல்லதைக்கொண்டு பொல்லதை நீக்கு. அறிவைக்கொண்டு மடமை யொழி. ஒளியைக் கொண்டு இருளொழி. உண்மையைக்கொண்டு பொய் யொழி.

## 17. இரண்டு சக்தியோட்டங்கள்

மனிதனுள் இரண்டு சக்தியோட்டங்கள் உள்ளன. ஒன்று, ஆசையாணவச் சுனைகளினின்றெழுந்து, மனவோடையாகப் பெருகிப் புலன்கள் வழியே பாய்ந்து, முக்குண

விகாரக் காட்டிற் சுற்றியலைந்து, வாழ்வை இடர்ப்படுத்தும். இதன் வேகவெள்ளத்தில் வீழ்ந்தால் மீள்வதரிது. வெள்ளம் நம்மை யிழுத்துச் சென்று காட்டிலும் மேட்டிலும், மோதி யடிக்கும்.

மனம் உள்ளடங்கித் தன்வசப்பட்டபோது, மற்றொரு சக்தி யூறிப் பொசியும். அதுவே இதயச் சுனையில் ஊறும் இன்ப வோடை. அது ஓம் என்று பாடிப் பொசியும். நமது ஆதார கமலங்களை மலர்த்தும். மூலாதாரம் முதல் பிரம்ம ரந்திரம் வரையிற் பாய்ந்து சுழன்று பரமானந்தமளிக்கும். கருவூற்றி னெழுந்த காயவாழ்வை அது திருவருட்கடல் சேர்க்கும். நம்முட் கோயில் கொண்ட இறைவன் சந்நிதி யைத் துலக்கும். பாசத்திரை நீக்கிப் பசுவைப் பதியுடன் கூட்டும். தன்னலமற்ற திருப்பணி, மாசற்ற உள்ளன்பு, ஆர்வக்கனல், தெள்ளறிவு, ஜபம், தியானம், மோனம், ஆத்ம விசாரம் முதலிய சாதனங்களால் இந்த சக்தியூற்று சலசலத்தெழும்.

## 18. மந்திரம்

ஒவ்வொரு மதத்திற்கும் ஒரு மந்திரம் உண்டு. அதில் அந்த மதசாரம் வித்தில் மரம்போல அடங்கியிருக் கும். ஜாதுஷ்ட்ரர் அஹுனை வைர்யா (இறைவன் திரு வுளம் ஆகுக) என்று ஜபிப்பர். கிறிஸ்தவர் உலகமாதாவை ஆவ் மேரி என்றும் குருவை ஜய க்றிஸ்து என்றும், இறை வனை "உனது திருவுளம் நடக்கட்டும், உன்னரசு உலகில் விளங்கட்டும்" என்றும் போற்றுவர். இஸ்லாமியர் எல்லாம் வல்ல கருணைக் கடவுளை பிஸ்மில்லாஹ் இற்ரஹ்மான் இற்ரஹீம் என்று ஜபிப்பர். பௌத்தர் பரிபூரண பகவான் புத்தரை நமோ பகவதோ அரஹதோ ஸம்மாஸம் புத்தஸ்ஸ

என்று தியானிப்பர். ஜைனர் தீர்த்தங்கரர், சுத்தான்ம சித்தர், குருமார், உபாத்தியாயர், சாதுக்கள் அனைவருக்கும் பஞ்சநமஸ்காரம் செய்வர். ஓம் நமோ அரஹந்தாணம், நமோ சித்தாணம், நமோ ஆயுரியாணம், நமோ உவஜ்ஜா யாணம், நமோ லோயே ஸவ்வ ஸாஹூணம் என்பது சமணர் மந்திரம். சீக்கியர் ஸத் ஸ்ரீ அகால் என்று அச்சுதனை வழுத்துவர். சாக்தர் பராசக்தியை ஓம் சக்தி, ஓம் காளி, ஜய பவானி, ஜய சண்டி, ஜய மாதங்கி, ஜய லக்ஷ்மி, ஓம் ஹ்ரீம் ஓம் என்னும் பல மந்திரங்களால் உபாசிப்பர். வைணவர் நமோ நாராயணாய, வாசுதேவமிதம் ஸர்வம், ராம், ராமஜயம், ஹரே ராம, ஹரே க்ருஷ்ண என்று பலவகை யாக விஷ்ணுவை அன்பு செய்வர். சைவர் நமச்சிவாய, சிவ மயம், சிவோஹம் ஹரஹர மஹாதேவ, ஓம் சிவம் என்று பணிவர். வேதாந்திகள் ஓம், ஓம்தத்ஸத், தத்வமஸி, ஸோஹம், சுத்தோஹம், ஆத்மோஹம், ப்ரஹ்மைவாஹம், என்று உட்குவிந்து பிரம்மோபாசனஞ் செய்வர். எந்த மந்திரம் சிரத்தாபக்தியுடன் செய்து, உட்குவிந்து தியானித் தாலும் அடைவது ஆத்மலாபமே. மந்திரம் பிறக்குமிடமே ஆன்மா உள்ளது. ஓம் சுத்த சக்தி யென்பது எல்லா மந்திரப் பொருளையும் கொண்டது.

## 19. மூர்த்திகள்

ஒவ்வொரு மதத்திற்கும் ஒரு அடையாளம் உண்டு. சில மதங்கள் தங்கள் தத்துவங்களுக்கு விதவித வடிவந் தந்து வணங்குவன. ஜாதுஷ்டிரர் தீவணக்கம் செய்வர், ஒளியை தியானிப்பர். கத்தோலிகர் மரியாளையும் சிலுவைக் கிறிஸ்துவையும் பணிவர். புரோதஸ்தாந்தியர் சிலுவையைத் தியானம் செய்வர், கடவுளை நிர்க்குணமாகவே உபாசிப்பர்.

இஸ்லாமியர் பிறையடையாளத்தை மதிப்பர். அருவணக்கமே செய்வர். அல்லா நிர்க்குணன், நிர்மலன், நிரஞ்சனன். பௌத்தர் புத்தரையே வணங்குவர். ஜைனர் தீர்த்தங்கர பகவானை வணங்குவர். சீக்கியர் நிர்க்குணமாகவே கடவுளை நாம சங்கீர்த்தனத்தால் வழிபடுவர். வேதாந்திகள் உள்ளத்தில் உள்ளதை உள்ளவாறு கலந்து நிற்பதே இன்பமெனக் கொண்டு அதற்கேற்ற ஞானமோன சாதனங்களைச் செய்வர். சைவர், வைணவர், சாக்தர், கௌமாரர் சூரியோபாசிகள் உருவணக்கம் செய்வர். ஒவ்வொருவருக்கும் இஷ்ட தெய்வம் உண்டு. அது அவரவர் மனப்பான்மை. பரம் பொருள் ஒன்றுதான். அதற்கு அருள்வடிவம் உண்டு, அந்த அருட்சக்தி அனந்த குண சின்மயம். ஒவ்வொரு தெய்விக குணத்தையும் யோகிகள் சாட்சாத்கரித்து அதற்கு ஒருவடிவு தந்து தியானத்திற்கு எளிதாக்கினர். இன்பச் சிவன், எங்கும் பரவிய விஷ்ணு, உளங்கவர் கிருஷ்ணன், இனிய ராமன், பெரிய சாமியான மகாதேவன், நலஞ்செய்யும் சங்கரன், எப்போதும் மங்கலமாக்கும் சதாசிவன், உயிர்க்கிறைவனான பசுபதி, தூயனான சுத்தன், எல்லையற்ற அனந்தன், அழிவில்லா அச்சுதன், துன்பத்தை அழிக்கும் ஹரி, தீமையை ஒழிக்கும் ஹரன், இடர்தீர்க்கும் விநாயகன், இளங் குமரன், அழகிள முருகன், உலகரங்கின் தலைவனான அரங்கநாதன், உளந்தோறும் உலகெல்லாம் நான் நான் என்று நடமாடி அனைத்தையும் இயக்கும் நடராஜன், உலகை இயக்கும் இறைவனருளாகிய எல்லாம் வல்ல பராசக்தி, உலகன்னையாகிய அம்பிகை, செல்வத் திருவான லக்ஷ்மி, கலைமகளான சரஸ்வதி, கருநிறக் காளி, அழகிய சுந்தரி, என்று இவ்வாறு ஒரே பரம்பொருளின் அருட்பெருமையையே பாரத நாட்டார் உருவாக வணங்கி தர்மஸாதனத்திற்கு

ஒரு அரிய கலைச்சுவையும், கோயில் திருவிழாக்களின் மூலம் தத்துவம், கல்வி, கலை, தொழில், நாகரிகம், கூட்டுறவு, அன்பு, அருள் வளர்ச்சியையும் ஊக்கினர். ஒரு சிவ லிங்கத்தை வணங்கும்போது கல்லை வணங்குவதில்லை. அருளுடன் கூடிய பொருளையே அது உருவாகக் காட்டு கிறது. உடல் கோயில், உள்ளம் சந்நிதி, அதில் இலிங்கா காரமாய் விளங்கும் அருளிறைவனையே தியானிக்கவேண் டும். இம்மாதிரியே ஒவ்வொரு உருவழிபாட்டினரும் உரு வின் பொருளைத்தமது உள்ளத்தில் வைத்து அதுவே தமது ஆன்மாவாகவணங்கவேண்டும். நாம் இங்கே ஆன்மா என்பது பசு அல்ல. அது உயிர்க்குயிர்; சுத்தம், கட்டற்ற சுதந்திரம், யாதிலும் ஒன்றான ஸமத்வம்.

## 20. ஹபீஸ் முனிவர்

ஹஃபிஸ் தியானயோகி; முகம்மது நபி உயிர் பிரியும் போது தமது திருமேனியில் அணிந்த ஆடையை ஹஃபிஸ் முனிவருக்குத் தரச்சொன்னார். அவ்வாறே உமார் முதலிய நபியடியார் ஹஃபிஸை தரிசித்து ஆடையீந்து ஒரு நல்ல உபதேசம் செய்யச் சொன்னார்கள்.

ஹஃபிஸ்:— உமார் ஆண்டவனை அறிவாயா?

உமார்:— அறிவேன்.

ஹஃபிஸ்:—அது போதும்; வேறெதையும் எவரையும் அறியவில்லையெனக் கவலை கொள்ளாதே.

உமார்:— மஹோபதேசம்!

ஹஃபிஸ்:— உமார் ஆண்டவன் உன்னை அறிவானா?

உமார்:— ஆம் அறிவான்.

ஹஃபிஸ்:— அது போதும்; உலகோர் உன்னை அறிய வில்லையென்று கவலைப்படாதே. அறிவது இறைவனை.

அவனை யறிந்தோர் அனைத்துமறிந்தோர். அவனையறியார் யாதுமறியார்.

## 21. யார்?

ஒரு காலம் கிரேக்க தேசத்தில், தேப்ஸ் (Thebes) என்னும் ஊருக்குப் போகும் சாலையில் SPHINX (ஸ்ஃபிங்க்ஸ்) என்னும் ஒரு விநோதக் கேள்விப் பிராணி யிருந்தது. அது போகிறவர் வருகிறவர்களையெல்லாம் ஒரு கேள்வி கேட்கும். சரியான விடை சொல்லாவிட்டால் ஆள் அபக்! ஒருதரம் ஒதீபன் (Odeipe) என்ற தீரன் அவ் வழியே வந்தான்! இந்த விநோதப் பிராணி கேள்வி போட்டது. என்ன கேள்வி? "காலையில் நாலு கால், நண் பகலில் இரண்டு கால், மாலையில் மூன்று கால் கொண்டு நடக்கும் பிராணி எது; சொல்?" எது? ஒதீபன் பளிச் சென்று சொன்னான் "மனிதன்!" எப்படி ஐயா? வாழ்வின் காலையான பிள்ளைப் பருவத்தில், இரண்டு கை + இரண்டு கால் = ஆகிய நான்கு உறுப்புகளால் தவழுகிறான்; வாலிபத் தில் இரண்டு கால்களால் நிமிர்ந்து நடக்கிறான். கிழப் பருவத்தில் தடிக்கம்பு சேர்த்து மூன்று கால்களால் கூனி நடக்கிறான். கேள்வி கேட்ட பிராணி தலை குனிந்தது; கடலில் விழுந்தது!

அதுபோல மனமாயம் ஒரு பெரிய Sphinx! அது நம்மைக் கேள்வி கேட்டுக்கொண்டேயிருக்கிறது! நீ யார்? எனக் கேட்கிறது! "நான் நீயல்ல! உலகல்ல! நான் நானே!" என்று கூறுகிறான். ஞான தீரன்! உடனே மனமாயம் அடங்கி மௌனக் கடலில் விழுந்து மறைகிறது! சொல்லின் அடியும் நுனியும் மௌனம்! அந்த "யார்? என்ற கேள்வி தான் உலகம் உண்டான முதல் ஞானிகளெல்லாம் கேட்டது.

## சுத்தான்ம தியானம்

1

சத்தியமாய்ச் சொல்லுகிறேன்
தன்னறிவே வேதம்.
பித்தர்பல பிதற்றிடுவார்.
பிரிவினைகள் செய்வார்!
தத்வமஸி மந்திரமே
தாரகமாய் நட்பு!
'சுத்தோஹம்' என்று நினை
சுகமயத்தை யுணர்வாய்!

2

இந்தமதம் அந்தமதம்
என்றலையேல் நெஞ்சே;
எந்த மத தூஷணையும்
எள்ளளவும் வேண்டாம்!
சொந்தமதம் தந்தமுள்ளே
தொந்தமற்ற சுகமே!
அந்தமில்லை; ஆதியில்லை
ஆனந்தம் யானே!

3

பாரால யத்தினிலே
பார்ப்பதெல்லாம் யானே!
ஆருயிர்கள் யாவையுமென்
ஆருயிரேன் றறிவேன்!
கார்வரையுங் கருங்கடலும்
காட்டுவிலங் குகளும்
யாராரும் ஓர்குலமென்
றன்புமுர சார்ப்போம்!

4

உளிசெதுக்கும் உருவிலில்லை;
ஓதுமொழி யில்லை;
தளையவிழ்ந்த சித்தவெளி
தானேதா னாக,
ஒளிமயமாய் நடனமிடும்
ஒருபொருளைக் கண்டால்,
களிபெருகுந் தெளிவருளும்
காட்சியெல்லாம் அதுவாம்!

5

நெஞ்சான கஞ்சமலர்
நிறைந்தசுகத் தேனை
கொஞ்ச முண்டாற் போதுமடா
குவலயவாழ் வமுதாம்!
அஞ்சாத தீரர் பெறும்
அமுதநிலை பெற்றால்
உஞ்சாமி யுன்னுளமே
ஓம்தத்ஸத் தென்னும்!

6

சாமிபல சக்தி பல
சாற்றிடுவார் உலகில்
சாமிக்கோர் சாதிமதச்
சண்டைகளை மூட்டிப்
பூமியினைக் கெடுத்ததெலாம்
போதுமப்பா போதும்!
சாமியொன்றே, சதசத்தாம்;
சகவுயிருக் குயிராம்!

7

உளருதே சாதிமதம்
உண்மையதி லில்லே.
கிளருதே, தர்க்கமிடுஞ்
கிழஞ்சுவடிக் கதைகள்,
வளராதே வீண்வழக்கை
வாய்மை யோன்றே கருதி.
தளராதே சிந்தனைசெய்
தானேதா னுன்மா!

8

அறிவுறக்கந் தொழிலுறக்கம்
ஆகாது மடமை.
நிறைவான தன்மயத்தை
நினையாமை கேடுதி.
பிறவுயிரைத் தம்முயிர்போற்
பேணுமை கொடிது
அறநூலுன் மனச்சாட்சி
அதைப்பயின்றல் இன்பம்!

9

வானத்தின் விரிந்ததடா
வாய்மையற நூலே;
மீன்களினும் உண்மைபல
மின்னுமதிற் காணுய்!
ஞானிகளின் உள்விழிக்கே
நன்குபுல னுகும்.
மோனிகளின் உள்விரிவில்
முத்தெழுத்தாற் காணும்!

10

உன்னையறி; நீயான்மா
உலகமதன் விரிவே!
மன்னவரே தன்னையறி
மாந்தரெல்லாம் தமக்கே.
என்னவர்கள் எல்லாரும்
எங்கேங்கும் யானே!
பொன்மயமே மின்னணியாம்
பொங்கிரவி கதிராம்!

11

பேதபுத்தி நீங்கிடுக;
பிரிவினைகள் ஒழிக!
தீதிழைக்கும் மடமையிருட்
சிறைகளெல்லாம் வீழ்க!
நாதவிந்து கலைகடந்தே
நானுனேன் றுள்ளே
சோதிநடம் பயிலுகின்ற
சுத்தான்மா வாழ்க!

12

தத்வமஸி என்றுசொல்லித்
தாண்டவஞ்செய் யுலகே!
அத்துவித வத்துணரும்
அறிவைவளர் மனமே!
சுத்த சக்தி, சுத்த சக்தி
சுத்த சக்தி யென்றே
எத்திசையும் பரவுகவே
எல்லையில்லே ரின்பம்!

*தியானமாலை முற்றிற்று.*

---

